# லிட்டில் பாலிகார்ப்: அதுவே அன்னையர் நாடுவது. ஏனெனில், ஃபீடிங் பாட்டில் தேர்ந்தெடுப்பது பிள்ளைவிளையாட்டல்ல என்பதை அறிவர் அவர்கள்!

**மிகப் பாதுகாப்பான மிக சுகாதாரமான ஃபீடிங் பாட்டில் உங்கள் குழந்தைக்கு**

உங்கள் குழந்தைக்கு உணவுகளைத் தேர்ந்தெடுப்பதில் நீங்கள் எடுத்துக்கொள்ளும் சிரமத்தையும் கவனத்தையும் போலவே ஃபீடிங் பாட்டில் தயாரிப்பதற்கு சிரமமும் கவனமும் எடுத்துக் கொள்கிறோம் நாங்கள்.

உங்கள் குழந்தைக்காக முழுமையான பாதுகாப்போடும் சுகாதாரத்தோடும் ஃபீடிங் பாட்டில் தயாரிக்கிறோம். சிறிதும் காற்றுமில்லாதது— கவலையின்றி நீங்கள் அதைக் கழுவி, கிருமிநீக்கம் செய்யமுடியும்.

அது உடைந்து விடாததை உறுதி செய்திட நாங்கள் அதிக கவனம் எடுத்துக் கொள்கிறோம். உலகிலேயே மிகச்சிறந்த வெளிநாட்டு பாலிகார்பனேட்டை உபயோகிக்கிறோம். ஆகவே அது சிதைந்துவிடாது, விரிந்து விடாது— பால் குடித்தபின் குழந்தை ஒரு கணத்திலே அதை தூக்கி எறிந்தாலும்கூட.

கசியாததை உறுதி செய்திட நாங்கள் மிகவும் கவனம் எடுத்துக் கொள்கிறோம்... அதை தலைகீழாக வைத்துப் பாருங்களேன்... சிந்தாது; சிதறாது!

பெரும்பாலான தாய்மார்கள் லிட்டில் பாலிகார்ப்பையே விரும்புவதில் வியப்பில்லையே! என்ன இருந்தாலும், உங்கள் குழந்தை என்று வரும்போது தரத்தில் விட்டுக்கொடுக்க மாட்டீர்கள்... ஆகவே நீங்கள் தேர்ந்தெடுப்பது லிட்டில்ஸ் பாலிகார்ப்.




**லிட்டில்ஸ் பாலிகார்ப்**

*பாசமும் கவனமும் பலிச்சிட வழங்குவது வோல்டாஸ்.*

OBM/4925 TAM

# அறிவிப்புகள்

## இதற்கு என்ன செய்வது?

'இதற்கு என்ன செய்வது?' பகுதி எவ்வளவு உபயோகமாக இருந்தது, ஏன் அதை நிறுத்திவிட்டீர்கள் எனப் பல வாசகர்களும் தொடர்ந்து கேட்டுக் கொண்டு இருக்கிறார்கள். வாசகர்களின் வேண்டுகோளுக்கிணங்க அடுத்த இதழிலிருந்து மீண்டும் இந்தப் பகுதி தொடங்குகிறது. நீங்கள் எந்தத் துறை சம்பந்தப்பட்ட பிரச்னைகளைப் பற்றியும் கேட்கலாம். ஆனால் பலருக்கும் பயன்படக் கூடிய அளவில் கேட்கப்படும் கேள்விகளுக்கே முன்னுரிமை அளிக்கப்படும்.

## இம்மாத இல்லத்தரசி

'இம்மாத இல்லத்தரசி' போட்டிக்கு வரும் குறிப்புக்களை, சென்ற வருடம் பல மாதர் சங்கங்கள் பரிசீலித்துப் பரிசு பெறும் குறிப்புக்களைத் தேர்வு செய்தன. அந்த வகையில் தமிழ்நாட்டிலுள்ள மற்ற சங்கங்களுக்கும் அந்த வாய்ப்பைத் தர விரும்புகிறோம். இம்மாத இல்லத்தரசிப் போட்டிக்கு நடுவர்களாக இருந்து செயல்பட விரும்பும் மாதர் சங்கங்கள் எங்களுக்கு எழுதலாம்.

போட்டியில் கலந்து கொள்வதற்கான நிபந்தனைகளையும், மற்ற விவரங்களையும் தனிப்பட்ட கடிதப் போக்குவரத்தில் தெரிவிக்கிறோம்.

விண்ணப்பிக்க வேண்டிய முகவரி:

ஆசிரியர்,
மங்கையர் மலர்,
சென்னை—32.

போட்டியில் நடுவர்களாக இருக்கும் வாய்ப்பைப் பெறுபவர்களின் புகைப்படம் மங்கையர்மலரில் இடம் பெறும்.



## சேவைப் பட்டியல் நீளுகிறது!

ஆரம்பிக்கப்பட்ட ஒரு வருஷத்திற்குள்ளேயே தொடர்ந்து எட்டு மாதங்களாகச் சிறந்த நிர்வாகத்திறமைக்காகப் பரிசு வாங்கிவிட்டது வேலூர் அரிமா நங்கையர் சங்கம். இவர்கள் விட்டு வைக்காத சமூக் சேவையே இல்லையா என்று ஆச்சர்யமாக இருக்கிறது, இவர்களுடைய சாதனைப் பட்டியலைப் பார்க்கும் போது. ரத்த தானம், அன்னதானம், உடை தானம், ஏழை மாணவருக்குப் புத்தக தானம் என நீண்டு கொண்டே போகிறது.

சமீபத்தில் இவர்களுடைய முதலாம் ஆண்டு விழா வேலூரில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அப்போது ஒரு பள்ளிக்குக் கிணற்றுக்கான மோட்டாரும், உடல் ஊனமுற்றவருக்குக் கைத்தடிகளும், செயற்கைக் காலுக்கான பணமும் அளித்தார்கள்.

ஓராண்டுக்குள்ளேயே இத்தனைச் சாதனைகளைப் புரிந்த தலைவி திருமதி சசிலா சூர்யப்ரகாஷும், இவருடைய வெற்றிகளுக்கெல்லாம் துணைபுரியும் லயன் சூர்யப்ரகாஷும் பாராட்டுக்குரியவர்கள். இவர்கள் இருவரும் 'எங்களுடைய இத்தனை வெற்றிக்கும் காரணம்' என்று குறிப்பிடுவது திரு. ஹனுமந்தராவை.

# அம்மா



வேப்பிலை மந்திரம்

அந்த மூன்றெழுத்து மந்திரம்தான் அந்த இடம் பூராவும் சூழ்ந்திருந்தது.

"எதிராஜ், ஸ்டெல்லா ரெண்டுலேயும் அப்ளை செஞ்சிருக்கேன். அம்மா எப்படி வழிகாட்டுறாளோ?"

"குழந்தைக்குக் காயலாக் கிடக்குது. அம்மாட்ட வேப்பிலை அடிச்சுட்டுப் போக வந்தேன்..."

"இங்க வந்துட்டா போகவே மனசு வரல்லே. அம்மா பாதுகாப்பிலே கிடைக்கிற இந்த நிம்மதிக்கு எத்தனை கோடி கொடுத்தாலும் ஈடாகாது..."

இப்படி 'அம்மா'வின் அருளாட்சிதான் அங்கிங்கெனாதபடி எங்கும். யாரிந்த 'அம்மா?'...

சென்னை — திருச்சி நெடுஞ்சாலையில் செங்கல்பட்டைத் தாண்டி மேல் மருவத்தூரில் குடிகொண்டுள்ள ஆதிபராசக்தி அம்மனே அங்கு நாளும் நாளும் கூடும் ஆயிரக்கணக்கான பக்தர்களிடையே இப்படி அருளாட்சி செய்கிறாள்!

'நொந்து மனம் வெந்து தெய்வமே நீயே கதி' என்று ஓடி வரும் மனிதக் கன்றுகளுக்கு 'யாமிருக்க பயமேன்' என அருள்பாலிக்கிறாள். அமைதியுற்று வாழ்வில் செம்மையுற்று அந்த அம்மாவை மறக்காமல் எங்கிருந்தாலும் ஓடி ஓடி வந்து பார்த்து நிற்கும் ஜனங்களின் கதைகள்தான் எத்தனை எத்தனை?

எளிமையே உருவாக, ஒன்றுமே அறியாத அப்பாவி முகத்துடன் பாமர ஜனங்களோடு ஜனங்களாக நிற்கும் பலர் தங்களை அறிமுகப்படுத்திக் கொள்ளும் போது தூக்கி வாரிப் போடுகிறது!

"நான் பழனிச்சாமி. மெட்ராஸ்லே அட்வகேட்டா இருக்கிறேன்."

என்கிறார் ஒருவர் பவ்யமாக. இவர் அண்ணா யுனிவர்சிடியின் வைஸ்சான்ஸலர் குழந்தைசாமியின் சகோதரர்! புகழ்பெற்ற லாயர்!

"நான் பி. டபிள்யு. டி. ஆபீசர்!"

"நான் பாடியிலே சீஃப் இன்ஜினியர்."

இவர்களா? அம்மாவின் முன் இன்ஜினியர் என்ன... இலவங்கொட்டைப் பொறுக்கும் பாமரன் என்ன... அனைவரும் சமமாக அவள் அருள் மழையிலே நனைய வந்திருக்கிறார்கள்...

எளிமை... அன்பு... கருணை... பிறருக்கு உதவுதல்... இவையே இந்த பக்தர்களின் தாரக மந்திரம்...

"ஓம் சக்தி..."

இவையே அன்னையைப் பூஜிக்கும் மூல மந்திரம்...

• • • • •

மேல் மருவத்தூர் ஆதிபராசக்தி அம்மன் ஆலயத்தைச் சுற்றிப் பார்க்கும் போது கேட்ட கதைகள், அன்னை அருள் பாலித்த நிகழ்ச்சிகளாக பக்தர்கள் சொன்னவை ஏராளம்... இவர்கள் அனைவருமே இங்கு அன்னையின் அருள் பெற்ற பங்காரு அடிகளாரையும், ஆதி பராசக்தியையும் பிரித்துக் கூறுவதேயில்லை. பங்காரு அடிகளாரையே 'அம்மா' என்றுதான் குறிப்பிடுகிறார்கள்.

பங்காரு அடிகளார் செவ்வாய், வெள்ளி, ஞாயிறு நாட்களில் அன்னையின் அருள் பெற்று அருள்வாக்குக் கூறுகிறார். அந்த நேரங்களில் ஆயிரக்கணக்கில் பக்தர்கள் கூடுகிறார்கள். இவர்கள் யாரும் 'அம்மா'விடம் தங்கள் குறைகளைக் கூறுவதில்லை. அவர் முன் போய் அமர்ந்தவுடன் தானாகவே பக்தர்கள் வந்த காரணத்தையும், அதற்கான தீர்வையும் 'கடகட'வெனக் கூறுகிறார்.

புகைப் படங்கள்: பிரஸ் போட்டோ பீரோ.

ஆதிபராசக்தி அம்மன் கோயிலைத் தங்கள் ஊரில் ஸ்தாபித்து, 'கரிகோள் விழா' செய்யலாமா எனக் கேட்டு ஊரில் இருந்து வந்திருந்தனர் இருவர்.

''கரிகோள் விழா நன்றாக நடக்க ஆசி தருகிறேன், செய் மகனே!'' என்று இவர்கள் போய் உட்கார்ந்தவுடன் கூறிவிட்டாள் அம்மா.

இப்படி, கணவரின் உடலில் பிரஷர் ஏறிவிட்டதற்காக வந்த நாகம்மைக்கு அருள் பாலித்து, இன்று தி. நகர் நாகப்பச் செட்டியார் நல்ல நிலையில் இருக்கிறார்.

அடிகளாரின்மேல் அன்னை இறங்கியவுடன் 'வேப்பிலை மந்திரம்' போடுகிறார் அவர். பூசித்து வைத்திருக்கும் வேப்பிலையை பக்தர்களின் மேல் அடிக்கிறார். இந்த 'வேப்பிலை மந்திரத்திற்காக' இடித்துக் கொண்டு வருகின்ற பக்தர்கள் நூற்றுக் கணக்கில்.

• • • • •

அண்ணா நகரில் இருந்து வந்திருந்த ஹம்சவேணி என்னும் பக்தை கோயிலைப் பற்றியும், அன்னை விதித்துள்ள பல சட்டதிட்டங்களைப் பற்றியும் விளக்கிக் கூறினார்:—

''இந்தக் கோயிலுக்கு வரும் பக்தர்கள் எல்லாம் ஏன் செவ்வாடை உடுத்துகிறார்கள் என்று கேட்கிறார்கள்.

உலகத்தில் பல பிரிவுகள் இருக்கலாம். பணத்தால் உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள்; பதவியால் வித்தியாசப்படுபவர்கள்; ஜாதி மதத்தால் ஏற்றத் தாழ்வு படுபவர்கள்; மனித மிருக ஜாதி; இப்படி எத்தனையோ!

ஆனால் பணக்காரனோ, ஏழையோ, உயர்ந்தவனோ, தாழ்ந்தவனோ, மனிதனோ, மாடோ எல்லோருடைய உடம்பிலும், எல்லா ஜீவராசிகளின் உடம்பிலும் ஓடும் ரத்தம் ஒரே நிறம்தான். அந்தக் குருதியின் நிறமான சிவப்பிலே மாறுதலே இல்லை. அதே போலத்தான் அன்னையின் முன்னிலையிலே அனைவரும் ஒருவரே என்று காட்டவே நாங்கள் அனைவரும் செவ்வாடை உடுத்துகிறோம்.

இந்தக் கோயிலைப் போல வேறெந்தக் கோயிலிலும் பெண்களுக்கு இந்த சிறப்புத் தருவதில்லை. தினமும் கருவறையிலே அம்மாவைத் தொட்டுப் பூசை செய்வது பெண்கள் தான். ஆடிப் பூரம், தைப்பூசம், சித்ரா பௌர்ணமி இந்த மூன்று நாட்களும் இந்த கோயிலில் வெகுசிறப்பாகக் கொண்டாடுவோம். ஆயிரக்கணக்கில் கலசங்களை வைத்து, யாகங்கள் வளர்த்து, பூஜை செய்வதும் பெண்கள் தான்!



சித்ரா பௌர்ணமி யாகத்திற்கு...

இதற்கெல்லாம் பெண்களுக்கு அருகதையில்லை என்று சொல்வதை ஒதுக்கி எங்களுக்கே முதன்மை ஸ்தானம் வழங்கப்படுகிறது. இன்னொரு விஷயம் — நீங்கள் கேட்டால் ஆச்சர்யப்படுவீர்கள்.

வீட்டுக்கு விலக்கான பெண்களும் கோயிலுக்கு வரலாம். 'நானே தானே மகளே அதை உனக்குக் கொடுத்தேன். அதைக் காரணம் காட்டி உன்னை நான் விலக்குவேனா' என ஒருமுறை அருள்வாக்கிலேயே சொல்லியிருக்கிறாள். எனவே மாத விலக்கு இங்கு விலக்கப்படுவதல்ல.

நாங்கள் ஆயிரத்து முன்னூறு மன்றம் இருக்கிறோம். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மன்றம் என 'முறை' வைத்துக் கோயிலுக்கு அழைக்கப்படுகிறார்கள். இவர்கள் முன்னாள் இரவே இங்கு வந்து தங்கி, அதிகாலையில் கோயிலைச் சுத்தப்படுத்தி, அம்மனுக்கு அபிஷேகங்கள் செய்து, இரவு கோயில் மூடும் வரை அனைத்துப் பணிகளையும் செய்ய வேண்டும்.

இப்படி வரும் நாட்களை தங்கள் வாழ்வின் பெரும் பேறாக நாங்கள் நினைக்கிறோம்.''

எனப் பரவசத்துடன் கூறுகிறார்.

இவர் பக்கத்தில் அமர்ந்திருந்த இன்னொரு அம்மையார்.

''எத்தனையோ பிரச்னைகள், மனக்கஷ்டங்களோடு 'அம்மா எனக்கொரு வழிகாட்டேன்'' என்று இந்தக் கோயிலுக்கு வருகிறோம். கோயிலுக்குள் நுழைந்தவுடன் மனக்கவலைகளெல்லாம் போன இடமே தெரியவில்லை. வீட்டிற்குப் போக வேண்டுமே என்று தான் இரவு போக வேண்டியதாக இருக்கிறது...

என்கிறார்.

கணவரின் உடல்நலக் குறைவு, தன்னை அடிக்கடி படுத்தும் உடல் உபாதைகள், குடும்பத்தாரின் குறைகள் என நிறையக் கஷ்டங்களோடு வந்தவர்தான் தாயாரம்மாள். இப்போது மிக்க மன அமைதியான முகமும், களையான சிரிப்புமாகச் சமையலறை சூபர்வைசர் வேலையைச் செய்கிறார்.



• அண்ணாமலை.

•• சேகர்.



# புறம் போக்கில் வளரும் மாஞ்செடி!

—பங்காரு அடிகளார் பேட்டி

இதுவரை எந்தப் பத்திரிகைக்கும் பேட்டி அளிக்காத, அன்னையின் அருள் பெற்ற பங்காரு அடிகளார் மங்கையர் மலருக்காக ஒரு மணி நேரம் பேட்டியளித்தார்—

''இந்துமதம் இப்போது கொஞ்சம் தளர்ந்த நிலையில் இருக்கிறது. இதை நிமிர்த்தி வைக்க அம்மா மேற்கொண்ட பல வழிகளில் ஒன்றுதான் என்னை அவளின் கருவியாக்கிக் கொண்டது.

நான் அவள் இட்ட பணியைச் செய்கிறேன். இன்னும் நிறையச் செய்ய பாக்கியிருக்கிறதே என்பதுதான் என்னுடைய எண்ணம்.

மனக்கஷ்டம், குடும்பக் கவலைகள், தொழில் பிரச்னைகள் என வருகின்ற ஆயிரக்கணக்கான பக்தர்கள் அம்மாவின் அருளால் ஞானம் பெறுகிறார்கள். ஆனால் ஏழ்மை நிலையில் உள்ள ரிக்‌ஷாக்காரர் போன்றவர்களையும், அன்னையின் அருளின் கீழ் இழுக்க வேண்டும் என்பதுதான் என்னோட ஆசை.

ஏழைகள் அடுத்த வேளைக் கஞ்சிக்காகவும், உடுத்த உடைக்காகவும் அலைகிறார்கள். 'அன்னையின் அருள் பெற அவர்கள் வந்தால், அவர்களின் பிரச்னைகளை அவளே தீர்ப்பாள்...'' எனும் ஞானப் பக்குவம் அவர்கள் பெற வேண்டும். அந்த நிலைக்காகவே நான் பாடுபடுகிறேன்.

ஆன்மீகத்தில் பெரிய நிலையில் இருக்கும் மற்றவர்களை நான் விமரிசிக்கவில்லை. ஆனாலும் அவர்களும் எங்கேயோ உட்கார்ந்து கொண்டு இருப்பதை விடுத்து, ஏழை மக்களின் துயரைத் தீர்க்கும் பணியில் ஈடுபட வேண்டும். அப்போதுதான் இந்துமதம் தழைக்கும்.

'புறம்போக்கில் வளர்ந்த மாஞ்செடி' போலத்தான் நாங்கள் இருக்கிறோம். எங்களுக்கென்று பெரிய பொருளோ, இடமோ இல்லை. எல்லாம் அன்னையின் அருள் பெற்ற அன்பர்கள் அளிக்கின்ற காணிக்கைகளே.

''என் குடும்பத்துல ஒவ்வொரு கஷ்டத்தையும் தீர்த்து வைத்தது அம்மாதான். என் மகளுக்குக் கஷ்டப்பிரசவம் ஆனப்ப, குழந்தை ஆடாம ஆறு மாசம் வளர்ந்தப்ப எனப் பல சந்தர்ப்பங்கள்ள அவளே கதின்னு கிடந்திருக்கோம். அற்புதங்களைச் செய்திருக்கா எங்க குடும்பத்துல. எல்லாம் அவளோட லீலை...

எனக்கு அமைதியான குடும்பத்தைக் கொடுத்தா. நான் தவறாம வாரத்துல மூணு நாள் அவளுக்கு சேவை செய்ய ஓடி வர்றேன்...''

* * * * *

இப்படி இந்தக்கோயிலுக்குச் சேவைக்கு என அன்னையின் அருள்வாக்கு மூலம் வந்தவர்கள் ஏராளம் பேர்.

நாகர் கோவிலில் இருந்து அருள்வாக்குக் கேட்க வேண்டி வந்தவர் கல்லூரி முதல்வர் கோவிந்தசாமி. அவரை ''உன் கவலையெல்லாம் நான் தீர்க்கிறேன் மகனே. நீ உன் வேலையை ராஜினாமா செய்துவிட்டு இங்கு வந்து இன்ஜினியரிங் காலேஜைக் கவனித்துக் கொள்!'' என அம்மா கூறியிருக்கிறாள்.

இன்று குடும்பம் அமைதியாக 'செட்டில்' ஆகி விட்டது. ஆதிபராசக்தி அம்மன் இன்ஜினியரிங் கல்லூரி துணை முதல்வராக மகிழ்வுடன் இருக்கிறார் இவர்.

அதேபோலத்தான் அரசாங்கத்தில் சீஃப் இன்ஜினியராக இருந்து ஓய்வு பெற்ற திரு. அண்ணாமலை தன் கதையையும் விவரிக்கிறார்—

''எனக்கும் பாலிடெக்னிக் கல்லூரிக்கும் என்ன சம்பந்தம்? ஆசிரியத் தொழிலைப் பற்றி எனக்கு என்ன தெரியும். ஆனால் மூன்று முறை அருள்வாக்கிலும் நான் பிரின்ஸிபாலாக வேண்டும் என்றே வந்தது. அன்னையின் அருளால் தன்னாலே அரசாங்கத்தில் பாலிடெக்னிக் கல்லூரி துவங்க அனுமதி கிடைத்தது. இதோ நான் முதல்வராக உட்கார்ந்து கொண்டு இருக்கிறேன்...''

என அருள்மயமான அந்தக் கதையை விரிவாகக் கூறுகிறார்.

ஆதிபராசக்தி தொழில் நுட்பக் கல்லூரியும், ஆதிபராசக்தி பொறியியல் கல்லூரியும் துவங்கி நடந்து வருகிறது. குருகுல பாணியில் அமைந்துள்ள அந்தக் கல்லூரிகளும், அமைதி பொலியும் அந்த மாணவர்களின் முகங்களையும் பார்க்கும் போது சந்தோஷமாக இருக்கிறது. கல்லூரி முதல்வர் தியாகராஜனும் அன்னையின் அருள்வாக்கின்படி நியமிக்கப்பட்டவரே.''

''நாங்களெல்லாம் பெரிய கல்விமான்களாக, பொறியியல் வல்லுநர்களாக இருக்கலாம். ஆனால் இது அம்மாவின் தொண்டு என மனத்தில் பயத்தோடு செய்தாலொழிய



கோவிலின் முகப்புத் தோற்றம்

நாங்கள் தப்பிக்க முடியாது. 'ஹா, இது என்ன பெரிய வேலை?' என யாக சாலை வரை படத்தைத் தயாரித்தால் போச்சு! எங்கேயாவது கால் இஞ்ச் இழுக்கும்.

உள்ளே இருக்கும் உக்கிராண அறை, தானே! அரை கிலோ வெல்லத்தை வீட்டுக்கு எடுத்துட்டுப் போனா யாருக்குத் தெரியப் போகுது! மனச் சலனம் வந்தால் போதும்! உடனே அருள்வாக்கு மண்டபத்திலிருந்து அழைப்பு வந்துடும்!

இங்கே ஆட்டி வைப்பது அம்மா. நாங்களெல்லாம் வெறும் பொம்மைகள்தான். உண்மையா இருக்கணும், ஏழைகளுக்குத் தொண்டு செய்யணும், பக்தியோட இருக்கணும் எனத் தவறில்லாத இதயத்தோடு இருந்தால் அவள் நல்லாசி தருவாள் என்பதற்கு இந்தக் கோவிலும், இந்தக் கோயிலிலுள்ள அதிகாரிகள் வேலைக்காரர்களிலிருந்து, பக்த கோடிகள் வரை அனைவருமே சாட்சி!''

என்கிறார்கள் ஒட்டுமொத்தமாக.

* * * * *

கோயிலில் என்னைக் கவர்ந்த மற்றொரு சிறப்பம்சம் பூஜை செய்யும் முறை. அதையே தொழிலாகக் கொண்டு தாம் என்ன சொல்கிறோம் என்பதே புரியாமல் தட்டில் விழும் காசைப் பற்றிச் சிலர் சிந்தனை செய்யும் காலமிது.

''ஓம் நின்னின் பிறரைப் பணியோம்
போற்றி ஓம்
ஓம் நின்னைப் பணிந்தே ஏத்துவம் போற்றி
ஓம்.''

என, அழகு தமிழிலே அன்னையின் சிரசு, பாதம் தொட்டுக் குங்குமத்தை வைத்துப் பூஜிக்கிறார்கள். 'இது நம் பாக்கியம்!' என வருகின்ற வழிபாட்டுமன்றப் பெண்களின் ஆத்மார்த்தமான பிரார்த்தனைகளே பூஜைகளாகின்றன. தட்டிலே காசு போடாமல் உண்டியலில் மட்டுமே காணிக்கையைச் சேர்க்க வேண்டும் என்பதால் சிறு சபலங்களுக்குக் கூட இடமில்லாமல் போய் விடுகிறது.

* * * * *

நாளும் நாளும் இங்கு வருகின்ற பக்தர் கூட்டம் அதிகமாகிக் கொண்டே போகிறது. ஆயிரக்கணக்கில் வருகின்ற பக்தர்களை அருள்பாலித்தபடி மேல் மருவத்தூரிலே புன்னகை புரிந்து கொண்டிருக்கிறாள் ஆதி பராசக்தி அம்மன்.

-மஞ்சுளா ரமேஷ்

பலரும் சொல்கிறார்கள், 'இவன் மேல் என்னவோ அம்மா வருகிறாளாமே, ஏன் பணத்தை இவனே உற்பத்தி செய்யக்கூடாது? சித்து விளையாடுவதுதானே!'' என்று.

முதலாவது பணத்தை நிறைய வசூலித்து பெரிய அளவில் கோவிலை அமைத்துவிடலாம். ஆனால் அதனால் நான் மேற்கொண்ட பணி எந்தவிதத்திலும் நிறைவேறாது. மதத்தின்மேல் பற்றுடன், பாசத்துடன் நம்முடைய பண்பாட்டின் மேல் நம்பிக்கையுடன் மக்கள் வரவேண்டும். பக்தியை ஒருவர் மனத்தில் புகுத்த முடியாது. அல்லது ஆசை காட்டி அவர்களை வரவழைக்கவும் கூடாது. தெய்வபக்தி என்பது ஒவ்வொருவர் மனத்தில் தானாக உதிக்க வேண்டியது. அப்படி உதிக்கச் செய்து, அவர்களை நம் மதத்தின் பால் ஈர்க்கச் செய்வதே என்னுடைய பணி. அவர்கள் அன்போடு தருகின்ற சிறு காணிக்கைகளே இக்கோயிலின் கற்களாகும்போதே அவர்களுக்கு இந்தக் கோவிலின் மீது ஒரு பிடிப்பும், அன்பும் ஏற்படும்.

இரண்டாவது, அம்மா பல சித்து விளையாடுகிறாள் என் மூலமாக. எனக்கே இந்தச் சித்துக்கள் பிடிப்பதில்லைதான். ஆனால் வெல்லத்தினுள் மருந்தைவைப்பதைப்போல சித்தின் மூலம் மக்களுக்கு நன்மை செய்து, அவர்களை அம்மாவின் பால் ஈர்க்கச் செய்ய வேண்டும் என்பதே அவளின் நோக்கம்.

என்னைப் பற்றிப் பல வதந்திகள் இருக்கிறது. 'நோட்டு அடிக்கிறான், அக்கிரமம் செய்கிறான்' என்றெல்லாம். நம் நாட்டில் நல்ல காரியங்களைச் செய்யும் யாரையுமே விட்டு வைப்பதில்லை. அவர்களைப் பற்றிக் கேவலமாக விமரிசிப்பதே சிலருக்குத் தொழில். இயேசுவை, காந்தியை, புத்தனை... யாரை விட்டு வைத்தார்கள்?

என் கடமையை, அம்மா எனக்குக் கொடுத்த அருளை மக்களுக்குத் தருகிறேன். நான் ஒரு கருவிதான். அவளே அனைத்துமாகி ஆட்டி வைப்பவள். ஓம் சக்தி.''

இன்றைக்கும் கோவிலுக்குத் தன்னுடைய சைக்கிளில்தான் வருகிறார் பங்காரு அடிகளார். எளிமையே உருவான இவர் அன்னையின் மகனாகி, அருள் பெற்ற அம்மாவாகி, பக்தர்களுக்குக் காட்சி தந்து கொண்டிருக்கிறார்!

பாத்திரங்கள் பளபளக்க

# ஷப்று
## கிளீனிங் பவுடர்

துணிகளின்
தூய வெண்மைக்கு

# ஷப்று
வாஷிங் பவுடர்

தரமான பவுடர்களை தயாரித்து அளிப்பவர்கள்



**M/s. ASWINI CHEMICALS**
Factory : 13-A, East Street,
Office : 88, East Street, SALEM-636 007
Phone : 68139

தமிழகமெங்கும் எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

# பேனினால் தலைமுடி உதிரும்

நறுமணம் கமழும் கென்ஸ் தைலத்தை
உபயோகித்து ஈறையும், பேனையும்
அறவே ஒழியுங்கள். தலை முடியை
பாதுகாத்துக் கொள்ளுங்கள்.



# கென்ஸ்
'சிறந்த பேன் நாசினி'

ஈறுகளையும் கொல்லும்
பென்சொகெயின் கலந்தது.

தீங்கற்றது.




PHARM PRODUCTS

பார்ம் ப்ராடக்ட்ஸ்
தஞ்சாவூர் 613 007 தமிழ்நாடு

விற்பனை விவரங்களுக்கு எழுதவும்.

Chhaya/PP/415

# எரிவாயுப் போட்டி -3

சென்ற இதழில் கேள்விகள் மிக எளிதாக இருக்கிறதே. அதனால் எல்லோரும் எளிதாகப் பதில் எழுதி விடுவார்கள் என்று எதிர்பார்த்தோம். ஆனால் ஒரு விடை கூடச் சரியாக இல்லை. (பதில்களை பக்கத்தில் காணலாம்). எனவே ஒன்பது கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதியவர்களைத் தேர்ந்தெடுத்து, அனைவரின் பெயரையும் குலுக்கிப் போட்டோம். அந்த வகையில் பரிசு பெறுபவர்கள் :—

**முதல் பரிசான இரண்டு பர்னர் ஸ்டவ் பெறுபவர்:—**

திருமதி கே. வி. சுபத்ரா,
ஏபி 1703, 103 வது தெரு,
14—வது செக்டார், கே. கே. நகர்,
சென்னை—78.

**இரண்டாவது பரிசான ஒரு பர்னர் ஸ்டவ் பெறுபவர்:—**

திருமதி புஷ்பவல்லி பாலசுப்ரமணியன்
C — 7/20 மோகன் நகர்,
சேலம் — 636 030.

**மூன்றாவது பரிசு**

இருபது இணைப்பு ரப்பர் குழாய்களைப் பெறுபவர்கள் :—

1. பி. சாரதா, பம்பாய்—24.
2. எஸ். ஜானகி, சென்னை—33.
3. பத்மா சக்கரவர்த்தி, சென்னை—17.
4. லலிதா பாஸ்கரன், சென்னை—34.
5. மீனாட்சி ராதா கிருஷ்ணன், பெங்களூர்—15.
6. பெத்ஷேபா பி. மேத்யூஸ், கோவை—43.
7. ஜெயலட்சுமி பாலசுப்ரமணியம், புது பம்பாய்.
8. சரஸ்வதி ராமனுதன், மைசூர்—11.
9. கீதா கிருஷ்ணமூர்த்தி, ஸ்ரீ ஹரிகோட்டா
10. கே. கௌரி, கோவை—22.
11. பாமதி கல்யாணம், நெல்லூர்.
12. எஸ். பத்மா, ஹைதராபாத்—28.
13. எஸ்.ஈ. ஜோன்ஸ், குன்னூர்—2.
14. அன்னபூர்ணு வெங்கடராமன், கல்கத்தா— 29
15. வி. கமலாதேவி, காஞ்சிபுரம்
16. வி. பி. பூமா, சென்னை—42.
17. ஆர். வசந்தி, சென்னை—5.
18. வெர்ஜீனியா பெர்ணண்ட், ஆசூர்.
19. டி. நித்யகல்யாணி, சென்னை—14.
20. சந்திரசேகர், சென்னை—20.

## மே மாத எரிவாயுப் போட்டி

கடந்த இரண்டு மாதங்களாக அகில இந்திய எரிவாயு விநியோகிப்பாளர் சங்கமும், அகில இந்திய எரிவாயு பயன்படுத்துவோர் சங்கமும் இணைந்து மங்கையர் மலர் மூலம் எரிவாயுப் போட்டி நடத்தி வருவது நீங்கள் அறிந்ததே!

ஒவ்வொரு மாதமும் ரூ. 1000/—க்கும் மேற்பட்ட மதிப்புள்ள பரிசுகளை வழங்கி வருகிறார்கள்.

முதல் பரிசு: இரண்டு பர்னர் ஸ்டவ்
இரண்டாம் பரிசு: ஒரு பர்னர் ஸ்டவ்
மூன்றும் பரிசு: இருபது இணைப்பு ரப்பர் குழாய்கள்.




**மே மாதப் போட்டிக்கான கேள்விகள்:—**

1. இந்தியன் ஆயில் கார்ப்பரேஷனின் தலைமை நிலையம் எங்குள்ளது?
2. எரிவாயுக் கசிவு ஏற்படாமல் இருக்க முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக என்னென்ன செய்யலாம்?
3. சிலிண்டரை மாற்றும் போது எச்சரிக்கையாக என்ன செய்ய வேண்டும்?
4. அடுப்பு நீண்ட காலம் உழைக்க வழி.
5. தீப்புண் பட்டவுடன் என்ன செய்ய வேண்டும்?
6. தீப்புண் பட்டவுடன் என்ன செய்யக் கூடாது?
7. இந்தியாவின் முதல் தனி பெட்ரோலியம் அமைச்சர் யார்?
8. இரண்டு அடுப்புக்களை இணைத்துப் பயன்படுத்தலாமா?

9. நீண்ட நாள் எரிவாயு சேமிக்க நான்கு வழிகளைக் கூறவும்.
10. இரவு, காலை நேரங்களில் பாதுகாப்பு நடவடிக்கையாக என்ன செய்யலாம்?

1. பதில்கள் ஓரிரு வரியில் இருக்க வேண்டும்.

2. இணைக்கப்பட்டுள்ள கூபன்களுடன் வரும் விடைகளே ஏற்றுக் கொள்ளப்படும்.

3. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

எரிவாயு கூப்பன்

இத்துடன் மே மாத எரிவாயுப் போட்டிக்கான விடைகளை இணைத்துள்ளேன்.
என்னுடைய முகவரி:



---

---

---

---

---

ஆசிரியர், மங்கையர் மலர், சென்னை—32.

## ஏப்ரல் மாதக் கேள்விகளுக்கான பதில்கள்:

1. நிறமற்றது; 2. கனமானது; 3. இல்லை; 4. காற்றுடன் கலந்து; 5. சிலிண்டர், ரெகுலேட்டர், இணைப்புக் குழாய், ஸ்டவ்.; 6. நாற்றத்தின் மூலம்; 7. தவறு; 8. அபாயமானதே; 9. மணமற்றது; 10. இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன், இந்துஸ்தான் பெட்ரோலிய கார்ப்பரேஷன், பாரத் பெட்ரோலியம் கார்ப்பரேஷன், அஸ்ஸாம் பெட்ரோலியம் கார்ப்பரேஷன்.

## இது டிட்டர்ஜண்டு அல்ல...
## நீலமும் அல்ல...

# இதுதான் ராணிபால்...
# வெண்மைப் பொலிவூட்டும் சாதனம்

நல்லபடி நீங்கள் சலவை செய்யலாம், துணிகள் தூய்மை அடையலாம்.
ஆனால், உள்ளம் விரும்பும் உண்மையான வெண்மை ஒளி ?
கிடைக்கவில்லையா ? சலவையில் என்ன குறை ?

உங்களுக்குத் தேவை ராணிபால்—முடிவாக அதில் ஒரு அலசல், அதுவே
முதல்படி—ஏற்றமான பளீர் வெண்மைக்கு !
கடைசீ அலசலுக்கு ஒரே ஒரு கிராம் ராணிபால்—
ஆகும் செலவோ அற்பம், ஆடை ஒன்றுக்கு ஒரே
ஒரு பைசா தான்
எனவே, மறவாதீர்கள், ராணிபால் சேர்க்காத
சலவை,முடிவுபெறாத சலவை தான்.




## சேர்ப்பீர் ராணிபால்
## ஏற்பீர் வெண்மை

ராணிபால்—பருத்தித் துணிகளுக்கு.
ராணிபால் S —சின்த்தெட்டிக் துணிகளுக்கு.



லன்கிரேஸ் தயாரிப்பு இதை அளிப்போர் ம்:.பத்லால்—
உற்பத்தியாளர்கள் : இந்தியன் டைஸ்டஃப்ஸ் இண்டஸ்ட்ரீஸ் லிட.

PROMOTION-IDI-6-85 TM



"மின்னார்த் தடமதில் சூழ் வில்லிபுத்தூர்"க் கோயிலின் கண்டாமணி, அங்கே உச்சிக்கால வழிபாடு நடந்தேறுவதற்கு அறிகுறியாக, நாத வெள்ளமாகப் பல முறை முழங்கி ஓய்கிறது. அதன் ஒலி முழக்கம் ஓய்ந்த பின்னரும் கூடப் பெரியாழ்வாரின் உள்ளத்திலே ஓங்காரமிட்டுக் கொண்டிருக்கும் உணர்ச்சி அலைகள் தணிந்து அடங்குவதாயில்லை. பல்லாண்டு பல்லாண்டாய்ப் பாசுரம் பாடிய வாய்மொழியும், நெஞ்சகம் ஓய்ந்து கிடக்க... நினைவுகளே மரத்துப் போய் விட்ட மோன நிலைக்கு உள்ளத்தைக் கொண்டு போய் நிறுத்திவிட வேண்டுமென்று அவர் தவியாய்த் தவித்துக் கொண்டிருக்கிற அந்த வேளையில், நம்பி, உள்ளே நுழைகிறான். ஆழ்வார் எழுதிப் போடுகிற பாசுரங்களை ஏடுகளில்படியெடுக்கிறவேலையைப் பக்தி சிரத்தையோடு... ஒரு தவமாகவே கருதிச் செய்கிற அந்த இளைஞன், அவரிடம் தமிழ் பயில்வதை... அதற்குக் கிடைத்த வாய்ப்பை ஓர் அரும் பேறாகவே கருதிக் கொண்டிருப்பவன்.

இன்று... புயலடித்து வீழ்த்திய ஆலமரமாய்ச் சாய்ந்து, சரிந்து, நிலைகுலைந்து கிடக்கிற பெரியாழ்வாரின் தோற்றம் நம்பியைப் பேதலிக்கச் செய்ய, அருகே சென்றுமெல்ல அவரை எழுப்ப முயல்கிறான்.

"ஐயா ...! தங்களுக்கு உடல்நலமில்லையா என்ன? மருத்துவரை வேண்டுமானால் அழைத்து வரட்டுமா ...?"

அரைக்கண் மூடிய நிலையில் ஆழ்வாரின் வாய்... "கோதை...! கோதை...!" என்று மட்டுமே உச்சரித்துக் கொண்டிருக்கிறது.

"கோதை நாச்சியாரைக் கூப்பிடட்டுமா ஐயா?" — கைகளால் வேண்டாமென மறுத்துச் சைகை காட்டுகிற ஆழ்வார், தம்மைச் சமாளித்துக்கொண்டவராய் எழுந்து உட்காருகிறார்.

"கோதை...! கோதை...! அவள் என்ன செய்து கொண்டிருக்கிறாள் நம்பி?"

"வழக்கம் போலத்தான் ஐயா! அரங்கன் மீது பாமாலைகள் புனைந்து பாடிக் கொண்டிருக்கிறார்."

என்றுபதிலிறுத்தபடியே, ஆசானின் மனநிலை சரியில்லாததை உணர்ந்து கொண்டவனாய், அங்கே சிதறிக் கிடக்கிற சுவடிகளை, அடுக்கிப் படியெடுக்க ஆரம்பிக்கிறான் நம்பி.

'ஆமாம்... இனிமேல் அந்தப் பேதைப் பெண் கோதைக்குத்தான் ...அந்த அரங்கனையும் அவனைப் பாடுகிற பாடலையும் விட்டால் வேறென்னதான் சாஸ்வதம்?' என்று தம் மனத்துக்குள் முணுமுணுத்தபடியே கண்களை மூடி அங்கேயுள்ள தூணில்சாய்ந்து கொள்கிறார் பெரியாழ்வார். மூடிய அவர் கண்களுக்குள், இதுவரை மன அறைக்குள் முடங்கியிருந்த நினைவுச் சுருள்கள் ... காட்சிகளாய்ப் பிரிந்து நீள... துளசிப் பாத்தியடியில் பஞ்சுப் பொதியாய்த் துவண்டு நெளிந்திருந்த பிஞ்சுக் கோதை, ஆட்கொள்ள முடியாத அழகு ஜ்வலிப்புடன் அசைந்துவரும் ஆண்டாளாக உருமாற்றம் பெற்ற நிகழ்ச்சியை அவர் உள்ளத்திரை ஓவியமாய் விரிக்கிறது...

* * * * *

அழகுமணித் தொட்டிலில், கையசைத்துக் காலுதைத்துக் குமிழ் சிரிப்புச் சிரித்துக் கொண்டிருக்கிறாள் சின்னக் கோதை.

"மாணிக்கங் கட்டி வ யி ர ம் இடை கட்டி..." என்று வையமளந்த வாசனுக்குத் தாலேலோ பாடியபடி அவளுக்குத் தாளியாட்டிக்களிக்கிறார்பெரியாழ்வார். அம்புலி காட்டி அவளுக்குச் சோறூட்டுகையில், சப்



# “மானிடவர்க்கென்று பேச்சுப்படில்…”

எம்.ஏ.சுசீலா

பாணி கொட்டித் தளர்நடை பயின்று அவன் நடமிட்டு வரும் அழகில்... அப்போது நீராட்டி, ஆசையோடு அவனுக்குப் பூச்சூட்டுகையில்... இன்னும்... இன்னும், அவன் காட்டுகிற பிள்ளைக் குறும்புகள் அனைத்திலும், அரவணையில் பள்ளி கொண்ட ஆண்டவனின் அழகையே கண்டவராய், அவன் புகழையே பாடிப் பாடிப் பரவசப்பட்டுப் போகிறார் அவர். காண்பதெல்லாம், கண்ணிலே காட்டப்படுவதெல்லாம் கண்ணனின் உருவாகக் கேட்பதெல்லாம் அவன் பெயராக வளருகிற கோதை, முதன் முதலாக நாவசைத்துப் பேசத் தொடங்குகிற வார்த்தையே கண்ணனின் திருப்பெயராகித் தித்தித்திருத்தல் கண்டு, பிறவிப் பயனையே அடைந்துவிட்டவராய்... அவர் பூரித்துப் போகிறார்.

சிற்றாடை கட்டிச் சிரித்துவரும் நங்கையாகப் பெண்மை அரும்புகட்டி மலர்கிறாள், ஆண்டாள். அரங்கன் பாசம் அவளது உள்ளத்திலே ஆலாய்த் தழைத்திருக்கிறது. தன் வயதுப் பெண்களுடன் சேர்ந்து கொண்டு, ஆற்று மணலைக் கொழித்து, அவர்களைப் போன்றே அவளும் சிற்றில் அமைக்கிறாள்— ஆனால், அவள் அமைக்கிற இல்லம் அரங்கனுக்காக! அவர்களோடு இணைந்து, மணப்பொடி இடிக்கிறாள், மாலைகள் தொடுக்கிறாள் — அரங்கனின் மேனியை அழகுபடுத்துவதற்காக...!

கேக் முதலியவைகளை செய்யும் போது தேவையான பதத்தில் இறக்காமல், சிறிது முன்பாகவே இறக்கி விட்டால் கவலைப் பட வேண்டாம். அவை ஆறியவுடன் ஃபிரீசரில் அரை மணி நேரம் போல் வைத்து எடுத்தால் சுலபமாக வில்லைப் போட முடியும்.

— என். குப்பம்மாள்.

''கோதை! உனக்குக் கணவனாக யார் வர வேண்டும்? சொல்பார்ப்போம்!''—எத்தனை முறை கேட்டாலும் அரங்கனின் பெயரை அலுக்காமல், சலிக்காமல் அவள் உச்சரிக்கிற அழகிலே சிலிர்த்துப் போகிற ஆழ்வார், 'என் மகளை... இந்த அழகை, அந்த அரங்கனைத் தவிர வேறு யாராலேதான், கட்டி ஆள முடியும்?' என்று நெஞ்சுக்குள் புளகித்துப் போகிறார்.

* * * * *

விண்ணகக் கனவுகளிலேயே இதுநாள் வரை சஞ்சரித்துக் கொண்டிருந்த பெரியாழ்வார்... மண்ணுலக மாயைகளிலும் கால் பதித்தாக வேண்டிய காலம் வருகிறது. அதை அவருக்கு உணர்த்துகிறாள் மாணிக்கவல்லி, ஆண்டாளின் செவிலித் தாய்.

வழக்கமாக ஆழ்வாருக்கும், கோதைக்கும் செய்ய வேண்டிய பணிவிடைகளை முடித்துவிட்டுப் பொழுதோடு புறப்பட்டுப் போய் விடுகிற மாணிக்கவல்லி... அன்று மாலை சற்றுத் தயங்கித் தாமதித்தபடி நிற்கிறாள்.

''என்ன மாணிக்கவல்லி?... ஏதேனும் சொல்ல வேண்டுமா?''

''ஆமாம் ஐயா! எல்லாம் நம் கோதையைப் பற்றிய கவலைதான்! ஒரு தாய் என்று இருந்திருந்தால் உரிய காலத்தில் எல்லாம் கவனித்திருப்பார்கள்!'' என்று அவள் நீட்டிக் கொண்டே போக, அடிபட்டாற் போலக் கலங்கிப் போகிறார் ஆழ்வார்.

''தாயார்...! நான் எந்தவகையில் கோதைக்குக் குறை வைத்தேன்? எந்தச் சீராட்டலில் நான் இளைத்துப் போனேன்...? சொல் மாணிக்கவல்லி!''

செவிலி மென்னகை செய்து கொள்கிறாள்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை ஐயா! என்ன இருந்தாலும் கோதைக்கும் வயதாகிக் கொண்டு போகிறதல்லவா? உரிய காலத்தில் தகுந்த வரனைப் பார்த்து அவளை ஒருவரிடம் ஒப்படைப்பது நம் கடமையில்லையா..? அதற்காகத்தான் சொன்னேன்!''

'ஓ... அப்படியும் ஒன்றிருக்கிறதோ...?' உலகத்தோடு ஒட்ட ஒழுகாமல் பல கற்றும் என்ன பயன்? ஆனாலும்... அதில் எந்த நெருடலும் இருப்பதாய் ஆழ்வாருக்குப் படவில்லை. தன் திருச்செல்வியை... கண்ணுக்குள் மணியான தன் அருமைக் கோதையை மணக்கும் தகுதியுடைய நல்ல ஒரு மானுடனும் கிடைக்க வேண்டுமே என்ற பொறுப்புள்ள தந்தைக் கவலை ஒன்று மட்டுமே அவரைப் பற்றிக் கொள்ள, அந்தக் கடமையினையும் நம்பிக்கைக்குரிய தம் நண்பர்களிடம் இறக்கி வைத்து இளைப்பாறல் காண்கிறார்.

வில்லிபுத்தூரில் பரவுகிற விவாகச் செய்தி, கோதையின் காதுகளுக்கும் எட்ட, அவள் துடித்துப்போனவளாய்த் தந்தையைத் தேடி ஓடி வருகிறாள். கலங்கிப் போய்ச் சிவந்திருக்கிற அவள் கண்களும், துடிக்கிற அவள் உதடுகளும்... 'அவதரித்த நாள் முதலாக அரங்கனையே எனக்கு வரித்தளித்த நீங்களுமா அப்பா... இப்படி?' என்று குற்றச் சாட்டுப் படிக்கிற போதுதான், அவளுக்குத் தாய்ப்பால் புகட்ட முடியாத குறையை ஈடு செய்கிறவிதமாக, அவள் உயிரின் ஒவ்வொரு அணுவிலும் ஜீவசத்தாகக் கண்ணனையே செலுத்திவிட்டது, தான் செய்த தவறோ என்ற எண்ணம், ஆழ்வாரின் உள்ளத்தினுள் முதன் முதலாக முளைவிட்டு உறுத்த ஆரம்பிக்கிறது.

''அம்மா கோதை! மண்ணுலகத்திலே மனிதர்கள் வடிவத்திலேதானம்மா தெய்வத்தைத் தரிசிக்க முடியும்! அதுதானம்மா இங்கே சாத்தியம்! சீதையை மணந்து கொள்வதற்

## சத்தூட்டம் நிறைந்தது குதூகலம் மிகுந்தது!



புதியது!

# ஐஸ்-க்ரீம் சுவை

# காம்ப்ளான்®

அம்மாக்களே! இதோ சத்தூட்டம், சிறுவர்கள் அநுபவிக்கத் துடிக்கும் சுவையில்: நாவூறச் செய்யும் ஐஸ் க்ரீம். அவர்கள், வெப்பத்தினால் சரியாக உணவருந்தாத போது, அவர்களுக்கு அவசியமான போஷாக்கை அளிக்க 'ஜில்'லென்று குளிர்வித்த ஐஸ் க்ரீம் சுவைகாம்ப்ளான் கொடுங்கள்.

புரதங்கள், நேரடியாக உடல் வளர்ச்சிக்கு பலனளிக்கும் சத்துக்களாகும். காம்ப்ளான், மிக மேலான புரதச் சத்துக்களையும்—அதாவது, பால் புரதச் சத்துக்களையும் (20%) மற்றும் 22 இதர மூலாதார உணவுச் சத்துக்களையும் தருகிறது. இவை வளரும் சிறுவர்களுக்கு தினப்படி தேவைப்படுவதாகும். துவங்குங்கள் காம்ப்ளான் உங்கள் குழந்தைகளுக்கு— அன்றாடம் இருவேளை.

காம்ப்ளான் ருசிமிகுந்த சாக்கலேட், ஸ்ட்ராபெர்ரி, ஏலக்காய்—குங்குமப்பூ சுவைகளிலும் மற்றும் சாதாரண ரகத்திலும்கூட கிடைக்கிறது.

பால் சேர்த்திடத் தேவையில்லை.








## காம்ப்ளான்® -திட்டமிட்ட பரிபூரண உணவு

GLC.203.12 Tam

கற்பனை பல சிறகடிக்க
இளமை ஊஞ்சலாடும் அழகி.
அவள் நெஞ்சைக் கவர்ந்தவை பல.
மெல்லத் தவழ்ந்து செல்லும் நீரோடை.
செல்லமாக வீசும் தென்றல்.
உள்ளம் கவர்ந்த கட்டழகன்.
கொள்ளை அழகு மலர்கள்.
பளபளப்பான நீண்ட கூந்தல்.
அக்கூந்தலுக்கு
வி.வி.டி.தேங்காய் எண்ணெய்...







**வி.வி.டி. தேங்காய் எண்ணெய்**

இயற்கைக் கூந்தலின் இளமை ரகசியம்




EP-VVD-6/84

கென்று ஒரு ராமன் பிறந்ததும் இந்த மண்ணிலேதானே? நீ, அந்தத் திருமகளின் அவதாரம்தான் என்று நான் நம்புவது உண்மையானால்... உனக்கென்றே அந்த மாயக் கண்ணன் எங்காவது பிறந்திருக்காமலா போய்விடுவான்?''

—அருமை மகளின் தலைமுடியைப் பாசத்தோடு வருடிவிட்டபடி அப்போதைக்கு ஏதோ சமாதானம் கூறி அவளை அனுப்பி வைக்க அவர் முயற்சித்தாலும், அதில் இருவருக்குமே முழு நிறைவு ஏற்பட்டிராததை... இருவராலும் நன்றாகவே இனம் கண்டு கொள்ள முடிகிறது.

* * * * *

உடலையே உறைய வைக்கிற மார்கழிக் குளிரின் வாடைக் காற்றோடு சேர்ந்து...

''எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே யாமாவோம்! உனக்கேநாம் ஆட்செய்வோம்!
மற்றைநம் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்!''

என்ற பாவைப் பாடலின் வரிகள்... உயிரையே உருகி நீராய் ஓட வைக்கிற ஆண்டாளின் மென்குரலில் தோய்ந்து காதுகளில் ரீங்கரிக்கத் திடுக்கிட்டுக் கண்விழிக்கிறார் பெரியாழ்வார். ஆவணியில் தொடங்கிய திருமணப் பேச்சு, ஐந்து மாதங்களாக நீண்டு கொண்டு போவது, அப்போதுதான் அடிமனத்தில் உறைக்க... ஆண்டாள், பாவை நோன்பு தொடங்கிய அந்த நாள் அவருள் வந்து நிற்கிறது.

அதிகாலையில் நீராடி, வழக்கம் போலக் கால்களில் விழுந்து வணங்கி நின்ற மகளைத் தூக்கி நிறுத்துகிறார் ஆழ்வார். இதுவரை அவர் கண்டிராத உறுதியும், தீர்க்கமும் கண்களில் மின்னலிட அவள் பேசுகிறாள்.

''அப்பா...! தாங்கள் சொன்னது போலவே, இந்த மண்ணுலகில் இருந்து கொண்டே என் கண்ணனை அடைவதற்குப் பாவை நோன்பு தொடங்க முடிவு செய்திருக்கிறேன். தாங்கள்தான் ஆசி கூறி வழிகாட்ட வேண்டும்.''

அன்று முதல் நெய்யுண்ணாது, பாலுண்ணாது, மையிட்டெழுதாது, மலரிட்டு முடியாது நாட்காலே நீராடிப் பாவை நோன்பினை ஒரு தவமாகவே இயற்றி... அவள் உடம்பை வருத்திக் கொள்ளத் தொடங்கி, இன்றோடு இருபத்தொன்பது நாட்களும் பூர்த்தி அடைந்து விட்டன! நாளை நோன்பின் இறுதி நாள்! அவள் கண்ணன்... அவளுக்குத் தரிசனம் தரப் போகிறானா?''

தன்னுடைய தேடலிலும்... ஒரு கண்ணன் கிடைக்காவிட்டாலும், ஒரு சராசரி மனிதன் கூட ஆண்டாளுக்கு வரனாக இதுவரை அகப்பட்டிராததை இப்பொழுது சங்கடத்துடன் நினைத்துப்பார்க்கிறார் பெரியாழ்வார். வில்லிபுத்தூர் முழுவதும் தன்னை மதித்துப் போற்றுகிற சான்றோர்கள், பெரியவர்கள், பட்டர்பிரான்கள் பலர் இருந்தும்... இந்த விஷயத்திலே மட்டும் தாமரை இலைத் தண்ணீராக அவர்கள் விலக்கம் காட்டுகிற காரணம், அவரது உள்ளத்துக்கு இன்னும் பிடிபடுவதாக இல்லை! தன் மகளின் தகுதிக்கேற்ற வரன் கிட்டாததே தாமதத்திற்குக் காரணம் என்று கடந்த சில மாதங்களாகத் தாமாகக் கற்பித்துக் கொண்டிருந்தது போல... இனிமேலும் பொறுத்துக் கொள்ள முடியாதது போலத் தோன்றவே இன்று எப்படியும் சடகோபரை அழைத்துவரச்சொல்லி, இரண்டில் ஒன்று முடிவாய்க் கேட்டுவிட வேண்டுமென மனத்தில் உறுதி செய்து கொள்கிறார் ஆழ்வார்.

**வெந்நீரில் நசுக்கிய கிராம்பைப் போட்டு ஊற வைத்து இரண்டு மூன்று முறைதருவதால்கர்ப்பிணிகளின் வாந்தி நிற்கும்.**

**— என். குப்பம்மாள்.**

சடகோபர் வந்து சேர்ந்ததும்... சிறிது நேரம் சுற்றி வளைத்து எங்கெல்லாமோ சுழன்று கொண்டிருந்த பேச்சு, இறுதியில் ஒரு வழியாக, மையப் புள்ளியில் வந்து நிலைப்படுகிறது.

''கோதை விஷயமாக நான் சொல்லியிருந்ததை மறந்தே விட்டீர்களா ஐயா!'' — என்று பெரியாழ்வாரே நேரடியாகத் தொடங்கி வைக்கிறார்.

சடகோபரின் முகத்தில் உடனடியாகப் பரவும் கருமையை, அவர் மறைக்க முயன்ற போதும், நுணுக்கமாய்த் துருவும் ஆழ்வாரின் கண்கள் அதைத்தப்பவிடாமல்கவனித்து விடுகின்றன.

''அதென்ன அப்படிச் சொல்லிவிட்டீர்கள் சுவாமி? கோதை வேறு... என் மகன் வேறு என்றா நான் நினைப்பேன்...? ஆனால், அதில் பாருங்கள்... எனக்கென்னவோ நம் கோதைக்கேற்றவரன், அந்தமாயக்கண்ணன் என்றுதான் மனத்தில் தோன்றிக்கொண்டே இருக்கிறது.''

பெரியாழ்வார் வறட்சியாய்ச் சிரிக்கிறார்.

''சடகோபரே...! அதை நீங்கள் வேறு ஒரு தடவை சொல்லிக் காட்ட வேண்டுமா? அப்படிச் சொல்லிச் சொல்லிக் கற்பனைகளை வளர்த்துத்தான் அந்தப் பெண்ணின் வாழ்க்கையைப் பாழ்படுத்தி விட்டோமோ என்று என் மனம் இப்போது கிடந்து அடித்துக் கொள்கிறது. அதீதமான கற்பனைகளைக் கவிதையில் வேண்டுமானால் ரசிக்கலாம். யதார்த்த வாழ்க்கைக்கும், அதற்கும் நீண்ட இடைவெளியல்லவா நிறைந்து கிடக்கிறது?''

"அது சரிதான் சுவாமி! ஆனால் கோதை நாச்சியார் கண்ணனைத்தான் மணக்க வேண்டுமென்று பாவை நோன்பு வேறு செய்து வருவதாக ஒரு செய்தி காதில் விழுந்ததே?"

"ஓ... அது பற்றியெல்லாம் நீங்கள், அச்சம் கொள்ள அவசியமே இல்லை சடகோபரே! அவளை மணந்து கொள்கிற எந்த ஆடவனிலும் கண்ணனைக் காணக் கூடிய பக்குவத்தையே அவளிடம் நான் ஊட்டியும் வருகிறேன். அவள் செய்கிற நோன்பும் கூட அதற்காகத்தான்!"

"அது மட்டும் இல்லை... சுவாமி" நெஞ்சுக்குள் விழுங்கிக் கொண்டே நெருப்பாக.... எதையோ சொல்ல வந்து மென்று விழுங்கியவராய்ச் சடகோபர் தவிக்கிறார். தெய்வ நிவேதனத்தில் கலந்து விட அஞ்சுகிற அருவைப் பொருளாக.. சொல்ல வந்ததைச் சொல்ல முடியாமல் கூசிக் குறுகிப் போகிறார்...

"...ஆண்டாளின் அழகுக்கும், பொலிவுக்கும், அறிவுக்கும், அன்புக்கும்... இந்த அற்ப மானுடர்கள் யாரும் பக்கத்தில், நெருங்கக் கூட முடியாது சுவாமி!... ஆனாலும்... ஐயோ.... அந்தை என் வாயாலும் எப்படிச் சொல்வேன் சுவாமி?... ஆண்டாளின் பிறப்பை எண்ணிப் பின்வாங்கிப் போகிறார்களே இந்தப் பேதை ஜனங்கள்...?"

பிறப்பு...! பிறப்பு...! ஆழ்வாரின் மூளையில் ஆயிரம் மின்னல்கள் ஒரேயடியாய் வெட்டியடிக்க... எங்கிருந்தோ விழுகிற பேரிடி ஒன்று, அவரது இதயத்தையே இருட்டடிப்புச் செய்து பிளந்துவிட்டுப் போகிறது. 'திருமகளே இந்த மண்ணுக்கு வந்த மாட்சியாய்... அவதரிப்பாய்த் துளசிச் செடியின் அடியிலே கிடந்த ஆண்டாள்...! அவள் பிறப்பு... இத்தனை அற்பமாகி விட்டதா இந்தக் கலக மானுடப் பூச்சிகளுக்கு...? ஆனால்.... ஆனால்... அந்த மாண்புகளெல்லாம், உன்னதங்களெல்லாம் அவராகக் கற்பித்துக் கொண்டவைதானே...! அவராக நியமித்துக் கொண்டு ஊருக்குச் சொன்னவைதாமே! உண்மையிலே ஊராருக்கு வேண்டியதெல்லாம்... சாதி, குலம், கோத்திரம்... அனைத்துக்கும் மேலாக... முறையான ஒரு வம்சாவளி...! அதை ஒழுங்காய்ச் சொல்ல முடியாத போது, ஆயிரம் ஆயிரமாய் அவள் பாயிரம் பாடித்தான் என்ன பயன்? பாதரசமாய் அவள் அழகு ஒளி விட்டுத்தான் என்ன பயன்?'

துண்டு துண்டாய்ச் சிதைந்து போய்க் கிடக்கிற ஆழ்வாரை ஆசுவாசப்படுத்திப் படுக்க வைத்து விட்டுச் சடகோபர் எழுந்து போகிறார்.

* * * * *

"இன்றுபுதிதாய் என்ன கற்றுக்கொண்டாய் நம்பி?" என்று வினவியபடியே உள்ளே நுழைகிற கோதை நாச்சியாரின் கண்களில், தன்னை மறந்து சுவரில் சாய்ந்து கிடக்கிற பெரியாழ்வாரின் தோற்றம் புலப்பட... திடுக்கிட்டுப் போனவளாய், அருகில் நெருங்கி அவரை உலுக்கி எழுப்புகிறாள். இயல்பாகவே பொலிந்து கொண்டிருக்கிற அவளது அழகுத் தோற்றம்... இப்போது நோன்புத் தவத்தால் மேலும் புடமிடப்பட்டிருப்பதைக் காணுகையில், ஆழ்வாரின் நெஞ்சு, பாசம் கலந்த விம்மிதத்தால் பொங்கி வரக் கண்கள் பனிக்கின்றன.

'நீதான் எத்தனை பெரிய தீர்க்கதரிசியம்மா...? இந்த அற்ப மானுடச் சிறுமைகளை உணர்ந்துதான், இவர்களில் யாரோடும் இணைத்துப் பேசப்படுவதில் கூட உனக்கு விருப்பமில்லை என்று அன்றே சொன்னாயோ...? உனக்கு நிகரில்லாத ஒரு மனித மந்தையில், உனக்கு ஏற்றபடி ஆள் தேடுகிற பாவத்தைச் செய்ததனால், நானே உன் அற்புதத்தை அற்பமாக்கிவிட்டேனா...?

தன் மதிப்புள்ள ஒரு மனிதப் பிறவியாக மட்டுமே ஒரு பெண்ணை மதித்து ஏற்கத் தெரியாதவர்கள் வாழும் மண்ணில்... அப்படிப்பட்ட பெண் ஜன்மங்களுக்கு ஏற்ற வரன், அந்த ஆண்டவனைத் தவிர வேறு யாராகத்தான் இருக்க முடியும்?'

"மானிடவர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய்..."

என்ற நாச்சியார் திருமொழிப் பாடலை அவரது உதடுகள் மெல்ல இசைக்க... ஆண்டாளின் கண்கள் மகிழ்வில் மின்னுகின்றன.

"ஆமாம் அப்பா! என் தவம் பலித்து விட்டது! நேற்று என் கனவில் வாரணமாயிரம் சூழ வலம் வந்து அந்த அரங்கனே என் கைத்தலம் பற்றி விட்டாரப்பா...! இனி... அவரிடம், ஒரு நல்ல நாள் பார்த்து என்னை நீங்கள் கொண்டு போய் ஒப்புவிக்க வேண்டியதுதான் பாக்கி!"

உற்சாக மிகுதியால், அவள் பேசிக் கொண்டே போக... அவரையும் அது தொற்றிக் கொள்கிறது. அவரது கைகள், அவசர அவசரமாக ஒரு சுவடியைத் தேடி எடுத்து அதில் எழுத்தாணியால் ஏதோ வரைகின்றன.

"ஒரு மகள் தன்னை உடையேன்
உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்
செங்கண்மால்தான் கொண்டு
போனான்."

காரட்டில் பஜ்ஜி செய்யலாம் தெரியுமா? காரட்டைச் சற்று கனமாக வட்ட வட்டமாய் வெட்டி, பஜ்ஜி மாவில் தோய்த்துப் போடுங்கள். காரட்டின் இனிப்பும், மாவின் காரமும் சேர்ந்து பஜ்ஜி பிரமாதமாக இருக்கும் சாப்பிட!

—எஸ். உமா.



# பெண்கள் என்ன வம்பிகளா?

வம்பு பேசப் பெண்களுக்குப் பிடிக்குமா? வம்புப் பேச்சு அவசியம்தானா? பெண்கள் மட்டும்தானா வம்புகள் பேசுகின்றனர்? இது போன்ற பல சுவையான விஷயங்களைக் காரசாரமாகச் சென்னை அபிராமபுரம் மற்றும் மந்தைவெளியைச் சேர்ந்த பத்துப் பெண்கள் விவாதித்தார்கள்.

கலந்துரையாடலில் பங்கு கொண்டவர்கள்:

1. பத்மினி ராகவன்.
2. ரஜனி ராஜேஷ்.
3. கங்கா ராமமூர்த்தி.
4. கலா பாலசுப்பிரமணியம்.
5. சரோஜா சேஷமணி.
6. எஸ். பாமா.
7. சாந்தா சினிவாசன்.
8. வேதா சினிவாசன்.
9. ஆனந்தி நாராயணன்.
10. நிர்மலா கோபாலகிருஷ்ணன்.

கலா: வம்புகள் பேச வேண்டியது அவசியம். என்ன இவ இப்படி சொல்றாளேன்னு பார்க்காதீங்க. ஒருத்தர் செய்யக் கூடாத தவறுகளுக்கு அவர்களுக்குத் தண்டனை கொடுப்பதைவிட அவர்களை விமர்சிப்பதின் மூலம் திருத்த வாய்ப்பு இருக்கிறது. ஊரார் சிரிக்கச் சிரிக்கச் சொல்வார்கள் என்று தமிழில் கூட ஒரு பழமொழி உண்டு.

பத்மினி: கலா தங்களுடைய கருத்தோட முழுமையா என்னால ஒத்துப்போக முடியவில்லை. அதாவது ஒரு விஷயத்தை நாம் தெளிவாத் தெரிஞ்சுக்கணும். வெட்டிப் பேச்சு என்பது வேறு. வம்பு என்பது வேறு. இந்த வம்பு என்பதில் கூட அடுத்தவர்களைப் பற்றி நியாயப் பூர்வமாக நாம்



விமரிசிப்போமானால் அது வரவேற்கப்பட வேண்டிய ஒன்றுதான். ஆனால் இந்த வம்பு அடுத்தவர்களைத் தனிப்பட்ட முறையில் பாதிக்குமானால் அதை நாம் தவிர்க்க வேண்டும். ஊரார் சிரிக்கச் சிரிக்கச் சொல்வார்கள் என்று சொன்னீர்கள். அடுத்தவர்களைக் கிண்டல் செய்வதை விட அவர்கள் சிந்தையைத் தொடும்படி நாம் பேசினால் அதில் பயன் இருக்கும்.

கங்கா: அதாவது வம்பு என்பதை எப்படி நாம் தீர்மானிப்பது? இது ஒரு கேள்வி. பொதுவாக எல்லோர் மனத்திலும் எழும் கேள்வி. அடுத்தவர்களைப் பாதிக்கக் கூடிய விஷயம் எதுவானாலும் அதை நாலு பேர் பேசினார்கள் என்றால் அது வம்பு தான். பொதுவாக இந்த வம்பு பேசும் பழக்கம் பெண்களிடம் ஆதிகாலம் தொட்டே இருந்து வருகிறதோ என்னவோ! மூன்று பேர் பேசிக்கொண்டிருக்கும்போது திடீரென்று ஒருத்தி எழுந்து போய்விடுமே என்று வைத்துக்கொள்வோம். மீதி இருக்கும் இந்த இரண்டு பேரும் எழுந்து போனவளைப் பற்றித் தான் பேசுவார்கள்.

சரோஜா: வாஸ்தவம்தான். கிராமங்களில் இந்தப் பழக்கம் அதிகமாக இருக்கிறது. பொழுது போக்குவதற்கு வழி தெரியாதவர்கள் திண்ணையில் உட்கார்ந்துகொண்டு இன்னிக்கு வெயில் ரொம்ப அதிகமில்லே... என்று பேச்சைத் தொடங்கி, பக்கத்து வீட்டுக்காரி, அந்த வீட்டுக்காரி என்று ஒவ்வொருத்தரையாக வசைபாடுக் கடைசியில் தன் வீட்டில் இருக்கும் மாமியார் நாட்டுப் பெண் சண்டை முதல் நாத்தனார் தகராறு வரை எல்லாவற்றையும் பேசி வம்புகள் வளர்க்கின்றனர்.

நிர்மலா: இதை கிராமத்து மக்கள் மட்டும் தான் செய்கிறார்கள் என்றோ அல்லது படிக்காதவர்கள் மட்டும்தான் செய்கிறார்கள் என்றோ நாம் குற்றம் சாட்ட முடியாது. படித்தவர்கள் கூட நகர்ப்புறங்களில் வாழ்பவர்கள் கூட வம்புகள் பேசத்தான் செய்கின்றனர்.

ஆனந்தி: நகர்ப்புறங்களில் வாழ்கிறவர்களுக்கு வம்புகள் பேச வாய்ப்புக் குறைவு. இயந்திரமான ஒரு வாழ்க்கையை மேற்கொண்டிருப்பவர்கள் நகர்ப்புற மக்கள். வேலைக்குப் போகிறவர்கள்தான் நகர்ப்புறங்களில் அதிகம்.

பாமா: வேலைக்குப் போகிறவர்களுக்கும் வம்புகள் பேச நேரமுண்டு. பஸ்ஸில் போகும் போது அலுவலகத்தில் வேலை பார்க்கும் போது எத்தனை பேர் வம்புகள் பேசுகின்றனர் தெரியுமா? அதை விடுங்கள் மாதர் சங்கத்திற்குப் போகிறோம் என்று பல பேர் சொல்கிறார்கள். மாதர் சங்கத்தில் என்ன உருப்படியான விஷயங்களையா பேசுகின்றனர்? பல மாதர் சங்கங்கள் வம்புகள் வளர்க்கும் மன்றங்கள் தானே?

# லாலாவின் புதிய சுலபமுறை சாம்பார் பவுடருக்கு நன்றி!

சுவையான சாம்பார் தயாரிக்க அதிக நேரமா ?

தேவையே இல்லை. இதோ... லாலாவின் புதிய சுலபமுறை சாம்பார் பவுடரால் நொடியில் சுவையான சாம்பார் நம் முன்னால்.

சாம்பாருக்குத் தேவையான சகல பொருட்களும் லாலாவுக்கே உரித்தான முறையில் சரியான விகிதத்தில் அடங்கியுள்ளன—புளி உட்பட. ஊறவைத்து, கரைத்து பிழியும் நேரமும் மிச்சம்.

வேகவைத்த பருப்புடன் லாலாவின் சாம்பார் பவுடரை கலந்துவிட்டு - இரண்டு கொதிப்பிற்குப் பின் அடுப்பிலிருந்து இறக்கினால் மீண்டும் மீண்டும் சாப்பிடத்தூண்டும் சாம்பார் தயார்.

சமையலறையில் முடங்கிக் கிடக்கவேண்டிய வேதனை இல்லை. சந்தோஷமான நேரத்திற்கும் குறைவு இல்லை.

---

மேலும் லாலாவின் மசாலா பவுடர், ரசம் பவுடர் மற்றும் மிளகாய்ப் பொடி இவைகளும் கிடைக்கிறது.

---

**லாலாவின் புதிய சுலபமுறை சாம்பார் பவுடர் நாவில் தங்கிடும் ருசி.**

---

பாரம்பரிய சுவைக்கு — *லாலாஸ்*

---








"டாபர் ஆம்லா கூந்தல் தைலத்தின் நெடுங்கால ரகஸ்யத்தை இப்போது நானும் அறிவேன்"

"அது என்னுடைய கூந்தலை நாள் முழுவதும் கருமையாகவும், பட்டுப் போல் மிருதுவாகவும் வைத்திருக்கிறது.

டாபர் ஆம்லா கூந்தல் தைலத்தின் மகிமையை, அழகான நீண்ட கூந்தலுடைய ஒரு இளம் பெண்ணிடமிருந்து அறிந்து கொண்டேன். அவளும், அவள் தாயாரும் பல வருடங்களாக டாபர் ஆம்லா கூந்தல் தைலத்தை உபயோகித்து வருகிறார்களாம்.

இப்போது நானும் அவர்களுடைய ரகஸ்யத்தை பகிர்ந்து கொண்டு நாள்தோறும் டாபர் ஆம்லா தைலத்தை உபயோகித்து வருகிறேன். அது எனது கூந்தலுக்குத் தகுந்த ஊட்டமளிப்பதுடன், அதன் இயற்கை எழிலையும் அதிகரிக்கச் செய்கிறது. குளுமையான, மென்மையான மணமுடைய டாபர் ஆம்லா கூந்தல் தைலம், உங்கள் கூந்தலை மிருதுவாகவும், பட்டுப்போலவும் திகழச் செய்யும்.

இது பல பெண்கள் நீண்ட காலமாக பகிர்ந்து கொண்டுவரும் ஒரு ரகஸ்யம்."




# டாபர் ஆம்லா ஹேர் ஆயில்

ஜெயபிரதா டாபர் ஆம்லா கூந்தல் தைலத்தின் ரகஸ்யத்தை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறார்.

டாபர் (டாக்டர் எஸ்.கே. பர்மன்) பி.லிட்..
ஹர்ஷா பவன், பிளாக்-இ,
கன்னாட் பிளேஸ், புது தில்லி-110001.

கலா: அப்படிச் சொல்ல முடியாது பாமா. சிலபேருக்குப்பெண்கள் சமுதாயசேவை, மாதர் சங்கம் என்று நடத்துவது பிடிக்க வில்லே. அவர்கள் சொல்லும் வம்புதான் மாதர் சங்கங்களைப்பற்றிக் குறைகூறுவது!

(எல்லோரும் சிரிக்கின்றனர்.)

ரஜனி: எத்தனேயோ மாதர் சங்கங்கள் பயனுள்ள பல பணிகளைக் கவனிக்கத் தான் செய்கின்றன. சேவை மனப்பான் மையுடன் இயங்கும் மாதர் சங்கங்களும் அதிகம்தான். என்னைக் கேட்டால் மாதர் சங்கங்களை விட இளமை, கவர்ச்சி இந்த மயக்கத்தில்அதிகம்வம்பு பேசுகிறவர்கள் கல்லூரிப்பெண்கள்தான். செல்லுலாய்ட் பிலிம்களில் வரும் உருவங்களை நிஜம் என்று நம்பி அதுவே வாழ்க்கை என்றும் நினைத்து சினிமாக்களையே எப்போதும் பேசிக் கொண்டு இருக்கும் கல்லூரிப் பெண்கள் எத்தனை பேர்? சில கல்லூரிப் பெண்களுக்குச் சினிமாப் பாடல்களைக் கேட்டுக் கொண்டே படித்தால்தான் படித்த மாதிரி இருக்கும்.

பாமா: நானும் ஒரு கல்லூரி மாணவிதான். எல்லாக் கல்லூரி மாணவிகளும் நீங்கள் சொல்கிறபடி இல்லே.

சரோஜா: எல்லோருமே வம்புதான் பேசுகி ருர்கள். அவரவர்கள் அவர்களுடைய லெவலுக்குத் தகுந்தபடிதான் வம்பு பேசு கிருர்கள்.

கலா: வம்பு பேசுவதில் கூடக் கொஞ்சம் முன் ஜாக்கிரதையாகப் பேசணும். குழந் தைகள் முன்னுடி அவர்கள் இப்படி இவள் அப்படியாக்கும் என்றெல்லாம் பேசுவது நல்லதல்ல. குழந்தைகள் மனத் தில் ஆரம்ப காலத்தில் பதியும் எண்ணம் தான் அவர்கள் வளர்ந்த பிறகும் அவர் களைப் பாதிக்கும்.

கங்கா: உண்மைதான். ஆனு வம்பு பேசுவ தையும் பெண்களேயும் பிரிக்க முடியாது. சமையலேயும் பெண்களேயும் பிரிப்பது எப்படிக் கஷ்டமோ அது மாதிரி இது வும்.

ரஜனி: இப்போ நாம பேசாமலே இருக் கோம் என்று வைத்துக் கொள்வோம். நம்மை நல்லவர்கள் என்று சொல்வார் கள். ஆனு ஒரு சில விஷயங்களே நாம தெரிஞ்சுக்காம போயிடுவோம். பக்கத்து வீட்டுக்காரர் எதிர்த்த வீட்டுக்காரர்க ளோட பேசினுல் தான் யார்யார் எப்படி என்பதை நாம தெரிஞ்சுக்க முடியும். தவ ருன ஒரு பெண் என்று ஒருவளே அடை யாளம் கண்டு கொள்வது, இன்னெ ருத்தரோடு நாம பேசுவதன் மூலம்தான். எனவே அப்படிப்பட்டவர்களோடு சிநே கம் வைத்துக் கொள்ளாமலிருக்க வம்பு பேச்சு உதவுகிறது என்றுதான் சொல்ல வேண்டும்.



கலா: இதில் ஒரு விஷயம் கவனிக்கத்தக்கது. வம்பு பேசுவதினால் சிலபெரிய அபாயங்கள் கூட ஏற்படத்தான் செய்கின்றன. உதாரணத்திற்கு ஒன்றைச் சொல்கிறேன். ஒரு மாமியாருக்கு இரண்டு மருமகள். மூத்தவள் கொஞ்சம் மந்தமானவள். இளையவள் படுசுட்டி. இந்த இளையவளை வைத்துக் கொண்டு அடிக்கடி மூத்தவளைப் பற்றி மாமியார் விமர்சிப்பாள். இது நாள் ஆக ஆக என்ன ஆச்சு என்றால் மூத்தவளுக்கு ஒரு தாழ்வு மனப்பான்மை ஏற்பட்டு அவளுடைய மனநிலையே பாதித்துவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

வேதா: அதனாலே நாம பேசுகிற பேச்சு அடுத்தவர்களுக்குத் தீங்கு இல்லாம இருக்க வேண்டும் என்று சொல்கிறீர்கள். வெட்டிப் பேச்சு மற்றவர்களைப் பாதிக்கத்தான் செய்யும்.

ஆனந்தி: அயல்நாட்டில் இருக்கக் கூடிய பெண்களிடம் இந்தப் பழக்கம் இருக்கிறதா?

நிர்மலா: இதில அயல்நாடு உள்நாடு என்று நாம் பிரித்து எல்லாம் பார்க்க முடியாது. அயல்நாட்டுப் பெண்களிடமும் வம்புப் பேச்சு எல்லாம் இருக்கத்தான் செய்கிறது.

சாந்தா: ஒருத்தரை ஒருத்தர் சிநேகம் பிடித்துக்கொள்ள எதையாவது பேசினால்தான் முடியும். பொதுவா எப்போதுமே நம்மைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்க முடியாது. அடுத்தவர்களையும் பற்றித்தான் பேச வேண்டியிருக்கும்.

வேதா: சரி, வம்புகள் பேவது பெண்கள் மட்டும்தானா? ஆண்கள் வம்பு பேச மாட்டார்களா?

பாமா: ஆண்களும் பேசுகிறார்கள். ஆனால் அவர்கள் பேசுவதை இந்தச் சமுதாயம் வம்பாக எடுத்துக் கொள்வதில்லை. பேசுவதற்குப் பிறந்தவர்கள் பெண்கள் தான் என்றும் பெண்கள் கோவிலுக்குப் போனாலும் சரி கல்லூரிக்குப் போனாலும் சரி வம்புதான் பேசுவார்கள் என்று சிலர் முடிவு கட்டிவிட்டார்கள். எத்தனை ஆண்கள் வம்புகள் பேசி கலாட்டா செய்வதில்லை?

சங்கா: எத்தனையோ ஆண்கள் அரசியல் வம்புகள் பேசத்தான் செய்கின்றனர். இந்த வம்புப் பேச்சு என்பது பெண்களிடம் மட்டும்தான் இருக்கிறது என்று சொல்ல முடியாது. ஆண்கள் பேசும் வம்புகள் வெளியில் தெரிவதில்லை. பெண்கள் பேசும் வம்புகள் வெளியில் தெரிகின்றன அவ்வளவுதான்.

நிர்மலா: சில விஷயங்களைப் பேசத்தான் வேண்டும். ஒரு நாட்டுப் பெண் எதிர்த்துப் பேசாமல், கொடுமை செய்தாலும் அடுத்தவர்களிடம் சொல்லாமல் இருந்தால் எங்க வீட்டு மருமகளுக்கு ஈடு உண்டா? அவ வம்பு தும்புக்கு எல்லாம் போக மாட்டா என்று பெருமையாகப் பேசக் கூடியவர்கள் எத்தனை பேர்?

பத்மினி: கொடுமை ஒரு பெண்ணுக்கு இழைக்கப்படுமானால் அதை அவசியம் அவள் மற்றவர்களிடம் சொல்லித்தான் ஆக வேண்டும். அதை வம்புப் பேச்சு என்று நாம சொல்ல முடியாது.

சங்கா: மனசில சுமை இருக்கக் கூடாது. மனச்சுமை இறங்க சுவரிடமாவது சொல்லி அழுதுதான் ஆக வேண்டும்.

ரஜனி: ஆமாம் நம்முடைய குறைகளை மற்றவர்களிடம் சொன்னால் ஏதோ பாரம் இறங்கின மாதிரி இருக்கும். சில சமயம் அடுத்தவர்களுடைய விஷயம்தானே நமக்கு எதுக்கு என்று இல்லாமல் நாமே கூடக் குறைகளைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். அதுவே தவிர அவர்களுடைய கஷ்டங்களைப் பார்க்கும் போது நாமே அவர்களுக்குப் பரவாயில்லை என்று தேற்றிக் கொள்ளலாம்.

ஆனந்தி: வம்பு பேசுவதினால் மன வளர்ச்சி பாதிக்கிறது என்று முன்பு ஒரு உதாரணத்தின் மூலம் சொன்னீர்கள். இப்போது வம்பு பேசுவதினால் மனச்சுமை இறங்கும் என்று சொல்கிறீர்கள்?

கலா: வம்பு பேசும் ஆள், நேரம் இவைகளைப் பொறுத்துப் பயன் அமைகிறது. அடுத்தவர்களைத் துன்புறுத்தும் நோக்கத்தோடு பேசுவதைத் தவிர்க்க வேண்டும். அதே சமயத்தில் அடுத்தவர்களைத்திருத்த அடுத்தவர்களுக்கு நிம்மதி கொடுக்க நாமே வலியப்போய் வம்பு பேசலாம் என்பது தான் என் எண்ணம்.

தொகுப்பு: கீழாம்பூர் சங்கரசுப்ரமணியன்
புகைப்படங்கள் : பால்ராஜ்.
ஏற்பாடு: பாரதி காவலர் கே. ராமமூர்த்தி

---

**ஜலதோஷம் பறந்து போக**

பச்சிளம் குழந்தைகளுக்கு, ஜலதோஷம் வந்தால், விக்ஸ் முதலியன தடவ முடியாது. எனவே, முழு மஞ்சள் (நீளமான) ஒன்றை, ஒரு முனையில் கருப்பாகச் சுட்டு, சிறிது சுண்ணாம்புடன், விழுது தயாரிக்கவும். கரண்டியில், இந்த விழுதை லேசாக சுட வைத்து, பொறுக்கும் சூடில், குழந்தையின் மூக்கு, நெற்றியில் தடவினால் ஜலதோஷம் பறந்து போய் விடும். இது அனுபவத்தில் கண்டு அறிந்தது.

—சித்ரா கோபாலன்.

# எல்லைகளின் விளிம்பில்..

**19**

"ஹாய்!" என்ற பிரமோத் குப்தாவின் குரலைக் கேட்டு, பாலுவின் நிலையைக் கண்டு அரை விநாடி பிரமித்து நின்ற மாலு சட்டென்று சுயநினைவு வந்து கதவை நன்றாகத் திறந்து பாலுவின் இன்னொரு தோளைத் தாங்கிக் கொண்டாள்.

"பாலுவின் தங்கையில்லை நீங்கள்?" என்ற பிரமோத்துக்கு,

"ஆமாம்" என்று தலையாட்டிவிட்டு "என்ன ஆகிவிட்டது இவனுக்கு?" என்றாள் மெல்லிய குரலில்.

"ஓ, ஒன்றும் பெரிய விஷயமில்லை" என்றான் பிரமோத் லேசாக.

"கொஞ்சம் அதிகமாகப் போட்டுவிட்டான். எனக்கும் ஆச்சரியம்தான். அவனை ஆறு மாதத்துக்குப் பிறகு பார்க்கிறேன்."

வாசற்கதவை ஒட்டினாற்போல் இருந்த தன் அறைக்குப் பாலுவை அணைத்துச் சென்று தன் கட்டிலில் கிடத்திய பிறகு, பிரமோத்தைப் பார்த்து, "இஃப் யூ டோண்ட் மைண்ட், வீட்டுக்கு வெளியே போய்ப் பேசுவோம். என்னுடைய பெற்றோர்கள் விழித்துக் கொள்வதை நான் விரும்பவில்லை." என்றாள்.

"நோ ப்ராப்ளம்!" என்று பிரமோத் கவர்ச்சியாகச் சிரித்து அவளைத் தொடர்ந்து வெளியே வந்தான்.

"என்ன நடந்தது?" என்றாள் அவள், மறுபடி. "பாலுவை எங்கே பார்த்தீர்கள்?"

அவன் விவரத்தைச் சொல்லி; "நத்திங் டு வொர்ரி டியலி. நாளைக்குச் சரியாகிவிடுவான்," என்றான்.

அவள் அவனை ஊடுருவும் பார்வைப் பார்த்தாள். கம்பெனிப் பார்ட்டிகளுக்குப் போக வேண்டியவனுக்குக் குடிக்கும் பழக்கம் ஏற்பட்டிருந்தாலும் இந்த நிலைமை ஏற்படும் அளவுக்குப் பாலு குடிக்கிறானா என்று நினைத்து அதிர்ச்சி ஏற்பட்டது.

"உண்மையில் பாலு இத்தனைக் குடிப்பானோ எனக்குத் தெரியாது. பார்த்து ஆறு மாசம் ஆகிவிட்டது. நான் இந்தியாவிலேயே இல்லை. பழங்கதையெல்லாம் பேச ஆரம்பித்தோம். உண்மையில் நான்தான் பேசிக் கொண்டிருந்தேன்."

"எதைப் பற்றி?"

பிரமோத் லேசான வியப்புடன் அவளைப் பார்த்தான். பிறகு சிரித்தான்.

"ஓ, ஏதோ என் சொந்த விஷயத்தைப் பற்றி... முட்டாள்தனமான பழைய நிலைமைகளைப் பற்றி... கூடப் படித்த சிநேகிதர்களைப் பார்க்கும் போதுதான் சில அந்தரங்க ஏமாற்றங்கள் வெளியில் வரும்."

மாலு மெலிதாக, பலவீனமாகப் புன்னகைத்தாள்.

"வெளியில் வரும் உங்கள் ஏமாற்றங்கள் கேட்பவன் மனசைத் தொத்திக் கொள்ளலாம்."

அவன் பேச்சைப் புரிந்துகொள்ள இயலாமல் ஒரு விநாடி விழித்து பிரமோத் குழப்பத்

வாஸந்தி



துடன் சிரித்தான். "ஓ, நோ, டோனட் டெல் மீ! பாலு அத்தனை ஸென்ஸிடிவ் ஆளாக இருக்க முடியாது!"

"ஃபர்கெட் இட்!" என்றாள் அவள் இதமாக. "இந்த வீட்டுக்கு பாலு கொண்டுவிடச் சொன்னானா?"

"இல்லை!" என்றான் பிரமோத் அவளை வியப்புடன் பார்த்தான்.

"பாலு இங்கே வசிப்பதில்லையா?"

"இல்லை. அவன் தன்னைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையா?"

"இல்லை," என்றான் பிரமோத் கூச்சத்துடன். "நான் ஒரு முட்டாள். அவனைப் பற்றி ஒரு விவரமும் கேட்கவில்லை. என்னைப் பத்தியே பேசிக் கொண்டிருந்தேன். ஆறு மாதத்தில் அவன் வாழ்விலும் மாறுதல் ஏற்பட்டிருக்கலாம் என்று தோன்றாமல் போய்விட்டது."

"பாலுவுக்குக் கல்யாணமாகிவிட்டது. மனைவியுடன் அவன் ஃபாக்டரிக்குப் பக்கத்திலேயே ஒரு வீட்டில் இருக்கிறான்."

"ஓ, குட், குட்! எனக்கு ஏன் இந்த முட்டாள் சொல்லவேயில்லை?"

"சொல்ல நீங்கள் சந்தர்ப்பம் கொடுத்திருக்க மாட்டீர்கள்!"

"ஆ, இருக்கலாம்! என்மேல்தான் தப்பு. இன்னொரு நாளைக்குச் சந்திக்கிறேன், கிளம்பட்டுமா?"

"ஓ.கே," என்றாள் மாலு தயக்கத்துடன்.

அவன் நடக்க ஆரம்பித்ததும் மாலு மெல்லிய குரலில் சொன்னாள்.

"பாலு யாரைக் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறான் என்று உங்களுக்குத் தெரிந்து கொள்ள ஆர்வமில்லையா பிரமோத்?"

பிரமோத்தின் பார்வையில் மறுபடி வியப்புத் தெரிந்தது.

"யாரை?"

"மிஸ்டர் நாகநாதனின் பெண் சித்ராவை!"

பிரமோத்தின் தாடை விழுந்தது. கண்கள் ஸ்தம்பித்து அவளைப் பார்த்தன.

"வாட்?" என்றான் மெல்லிய குரலில். "ஓ, காட், வாட் எ ஃபூல் ஐ ஹேவ் பீன்!" என்றான் அடிக்குரலில். சற்றுநேரம் எதுவுமே பேசத் தோன்றாமல் தலையை இருபுறமும் திரும்பத் திரும்ப அசைத்து அவளைப் பார்த்து ஒரு கையாலாகாத்தனப் புன்னகை செய்து தோளைக் குலுக்கி,

"இட் இஸ் ஃபன்னி! இட் இஸ் வெல்! அவனைக் கவனித்துக் கொள்ளுங்கள்!" என்றான். "இத்தனை அறிவும், பொறுப்புணர்வும் உள்ள தங்கை இருப்பது பாலுவுக்கு ஒரு பக்கபலம்..."

மாலு சிரித்தாள்.

"சுய பலம்தான் முக்கியம் பிரமோத். மற்றயாருடைய பலமும் பிரயோஜனமில்லை. தாங்க்ஸ்! குட்நைட்!"

அவள் வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்த பிறகும் அவன் சற்றுநேரம் நின்ற இடத்திலேயே நின்று அவளை யோசனையுடன் பார்ப்பதை அவளால் உணர முடிந்தது. வீட்டிற்குள் நுழைந்து ஓசைப்படாமல் தாழ்ப்பாள் போட்டு, "முட்டாள்!" என்று அடிக்குரலில் கோபத்துடன் சொன்னாள்.

நல்லவேளை, அம்மாவும் அப்பாவும் உள்ளறையில் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். பாலுவை அம்மா இப்பொழுது பார்க்கநேர்ந்திருந்தால், பதறி அழுது ஊரைக் கூட்டியிருப்பாள். தகாத காரியத்தைப் பிள்ளை செய்துவிட்ட மாதிரி அப்பாவும் முறைத்திருப்பார். அவள் மெல்லத் தன் அறைக்குச் சென்று சன்னமான மேஜை விளக்கைப் போட்டு நாற்காலிக்கடியில் அமர்ந்துகொண்டாள்.

அயர்ந்த நித்திரையில் பாலுவின் நெடிய அழகிய உருவம் நிராதரவாகத் தெரிந்தது. இதுவரை அவள் உணர்ந்தறியாத துக்கம் தொண்டையில் உருண்டு வலித்தது. அவளது இயல்புக்கு விரோதமாகக் கண்களில் நீர் திரண்டது.

இன்றைக்கு இவனுக்கு எத்தனைப் பெரிய அதிர்ச்சி ஏற்பட்டிருக்க வேண்டும் என்று புரியாமல் வாய், "முட்டாள்" என்று முணுமுணுத்த வண்ணமாக இருந்தது. பிரமோத் நிச்சயமாக இவனிடம் தனது ஏமாற்றக் கதையைச் சொல்லியிருப்பான்.

மனத்துக்கு ஏற்பட்ட அதிர்ச்சியை வெளியில் கொட்ட முடியாமல் தான் பாலு குடித்திருக்கிறான். அத்தனைப் போதையிலும் அவன் எதுவும் வெளியிடாததை நினைத்து அவளுக்கு மனசு நெகிழ்ந்தது.

இனிமேல் பாலுவுக்குச் சித்ராவிடம் ஒட்டுமா? தனது வாழ்க்கையைக் காம்ப்ரமைஸ் செய்து கொள்வானா? காம்ப்ரமைஸ் செய்து கொள்வானால் அது ஒரு பெரிய சோகம். சித்ராவைப் போன்ற பெண்கள் சினிமாக்களில்தான் கடைசி ஸீனில் மனசு திருந்தி மன்னிப்புக் கோருவார்கள். நிஜ வாழ்வில்

**காலில் புதுச் செருப்பு கடித்து விட்டதா?**

சாதாரண மூங்கில் கழியை சிறிய துண்டாக செய்து எடுத்துக் கொண்டு சொரசொரப்பான கல்லில் சிறிது தண்ணீரை விட்டுக் கொண்டு அழுத்தித் தேய்த்தால் சந்தனம் போல் விழுதாக வரும். அதை எடுத்து செருப்புக் கடித்த இடத்தில் புண் ஆன உடனேயே தாமதியாமல் தடவினால் உடனடியாக வலி நீங்கி நிவாரணம் உண்டாகிவிடும். தேவையானால் இன்னும் ஓரிரு தடவை போடலாம்.

—கல்பகம்.



கரணையில்லாத ஜன்மங்களுக்கு எப்பவுமே கரணை ஏற்படாது. பிறவி. குணங்களாகப் போய் விட்டவை எப்படி மாறும்? பாலுவின் பிறப்பு வளர்ப்பால் அவனுள்ளும் இருக்கும் சில குணங்கள் மாறுது. இந்த அடிப்படை முரண்பாட்டை இவன் எப்படிச் சமாளிப்பான்?

"உங்களைப் போல ஒரு தங்கை இருப்பது அவனுக்குப் பக்க பலம்!"

எந்த வகையில்? இந்தக் கல்யாணத்தைத் தடுக்க எத்தனை முயன்றேன்! முடிந்ததா?

கண்ணைக் கட்டிக் கொண்டுப் பிடிவாதமாகவல்லவா இதில் போய் இவன் விழுந்தான்! அம்மாவாக இருந்தால் இதைத் 'தலை விதி' என்று ஒரு வார்த்தையில் விளக்கிவிடுவாள்.

இன்றைக்குத் தூக்கம் வராது என்கிற பிரக்ஞையோடு அவள் சிறிது நேரம் ஏதோ புத்தகத்தைப் படிக்க முயன்று முடியாமல் விளக்கை அணைத்து மேஜைமேல் முகத்தைக் கவிழ்த்துக் கண்களை மூடினாள்.

காலையில் கண்ணை விழித்தபோது சமையலறையிலிருந்து சுப்ரபாதம் கேட்டது. பாலு கழுத்துக்கடியில் கைகளைக் கோர்த்து விட்டத்தைப் பார்த்தபடி படுத்திருந்தான்.

அவன் "ஹலோ!" என்றான். இயல்பாகப் புன்னகைத்துக் கட்டில் விளிம்பில் சென்று அமர்ந்தாள். அவனது தலைமயிரைக் கோதி,

"எப்படியிருக்கே?" என்றாள் மெல்லிய குரலில்.

அவன் புன்னகைக்காமல்,

"ஓ.கே!" என்றான். "கொஞ்சம் தலையை வலிக்கிறது. பிரமோத் கொண்டு விட்டானா?"

"ஆமாம். அம்மாவுடைய ஸ்ட்ராங் காப்பியைக் குடி சரியாப் போயிடும்."

அவன் சட்டென்று ஒருக்களித்துப் படுத்துக் குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தான். அவன் அழுது பார்த்தே இராத அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. இந்தத் திருமணம் இவனை எவ்வளவு பெரிய கோழையாக்கி விட்டது என்கிற பிரக்ஞை பயங்கரமாகத் தோன்றிற்று.

அவள் அவன் முதுகில் சமாதானமாகத் தட்டிவிட்டு எழுந்தாள்.

"நீ கொஞ்ச நேரம் படுத்துக்கோ. அப்பா அம்மாவுக்கு நீ வந்திருக்கிறது தெரியாது. இனிமேல்தான் சொல்லப் போறேன்" என்றாள்.

பல் தேய்த்துவிட்டுச் சமையலறைக்குச் சென்றதும்,

"அம்மா, பாலு வந்தான் நேத்து ராத்திரி. இங்கேதான் தூங்கறான்" என்றாள்.

அம்மாவின் முகம் சட்டென்று பிரசன்னமாயிற்று.

"அட, எப்போ, எனக்குத் தெரியலேயே?" என்றாள். "சித்ராவும் வந்திருக்காளா?"

"இல்லே, ஏதோ வேலை விஷயமா இந்தப் பக்கம் வந்தானும். நாழியாகிவிட்டதுன்னு இங்கேயே தங்கிட்டான். பதினொன்றரை மணிக்கு வந்தான். உங்களை எழுப்ப வேண்டாம்னு இருந்துட்டேன்."

"சரிதான், போறது. அப்படியாவது வந்தானே! அவதான் இந்தப் பக்கம் தலைகாட்டறதேயில்லே!"

"அம்மா நீ இப்ப எதையும் ஆரம்பிக்காதே!"

"உங்கிட்டேதானேடி சொல்வேன்? வெளிப்பேர்கிட்டேயா சொல்லப்போறேன்? என்னவோ எனக்கு அஞ்ஞானம்."

"அஞ்ஞானம் போய் ஞானம் வர வேண்டிய வயசாச்சு உனக்கு!"

இந்த அம்மா மாற மாட்டாள் என்கிற அலுப்புடன் காப்பி டம்ளரைத் தூக்கிக் கொண்டு வாசற்கதவின் அடியில் காத்திருந்த டைம்ஸ் ஆஃப் இந்தியாவை உருவிப் பிரித்துப் பார்க்கும்போது திடீரென்று திலீப் பானர்ஜியின் நினைவு வந்தது. அம்மா அவனைப் பற்றி விசாரிக்க, 'என்ன ஜாதி' என்றதும்தான் எரிச்சலுடன் "மனுஷ ஜாதி" என்று பதில் வெட்டியதும் ஞாபகத்திற்கு வந்து சிரிப்பு வந்தது.

பாலுவிடம் இதைப் பற்றிச் சொல்ல வேண்டும் என்கிற எண்ணம் தோன்றுகையிலேயே, இந்த அம்மாவுக்கு இன்னும் பல அதிர்ச்சிகள் காத்திருக்கின்றன என்கிற அனுதாபம் எழுந்தது. அம்மாவைப் போன்ற பெண்களுக்கு அதிர்ச்சிகளினால்தான் விவேகம் ஏற்பட வேண்டும். நல்ல மனகடைய பெண்களானாலும் சமுதாய நோக்கோ, சுயமான விவேகமோ இல்லாது போனால் இந்த மாதிரி அதிர்ச்சிகள் தேவைதான் என்று பாலு நினைத்துக் கொண்டான். அம்மாவின் பாஷையில் அவர்களது தலையெழுத்து அது.

(தொடரும்)

உடலில் காயம் ஏற்பட்டு, ரத்தம் தேங்கி, வீக்கம் ஏற்பட்டு அல்லல் படுகின்றவர்களுக்கு இதோ ஒரு எளிய நிவாரணம்:

கொட்டைப்பாக்களவு புளியையும், அதே அளவு உப்பையும் சிறிது தண்ணீரில் கரைத்து, இரும்புக் கரண்டியிலிட்டு, அடுப்பில் வைத்து கொதிக்க விடவும். பின் இளஞ்சூட்டுடன் இந்தக் கலவையை 'ரத்தக் கட்டு' மேல் கனமாக பற்று போடவும். காலை, மாலை இரு வேளைகளில் மூன்று நாட்களுக்குத் தொடர்ச்சியாக இவ்வாறு செய்துவரின் வீக்கம் மறைந்துவிடும்.

— திருமதி தேவஜுதன்.

கார் விபத்தில் திடீரென்று கணவரை இழந்த அதிர்ச்சியிலிருந்து மீளுவதற்குள் வசந்தாவுக்கு மேலும் ஒரு அதிர்ச்சி — பிராவிடண்ட் ஃபண்ட் அலுவலகத்திற்கு, தன் கணவனின் பிராவிடண்ட் ஃபண்ட் தொகையைப் பெற்றுக்கொள்ளலாம் என்று சென்றவளுக்கு — அத்தொகையைத் திருமணத்திற்கு முன்பே, தன் கணவர் தன் தாய் பெற்றுக் கொள்ளும் வகையில் எழுதியிருந்தார் என்பது தெரிந்தது. இப்போது கணவனின் அம்மா உயிருடன் இல்லை. இந்நிலையில் வசந்தாவுக்கு உடனடியாகத் தொகை கிடைக்காது. கோர்ட்டில் மனுத்தாக்கல் செய்து விசாரணை முடிந்த பிறகே தொகையைப் பெற முடியும்.

தன் தாய் இறந்தவுடனேயே, வசந்தாவின் கணவர், கவனித்து வேறு ஏற்பாடு செய்திருப்பாரேயானால் இந் நிலையைத் தவிர்த்திருக்கலாம். அதிகக் கல்வி இல்லாத, இது வரையில் வெளியுலகம் பற்றியே அறியாத வளாகிய வசந்தாவுக்கு, கோர்ட்டு; வக்கீல், மனுக்கள் போன்றவை மலைப்பாகத் தோன்றின. அதிர்ஷ்டவசமாக, அரசியலில் செல்வாக்கு பெற்ற ஒருவர் வசந்தாவுக்கு உதவ முன் வந்ததால், வசந்தாவுக்கு ஓரளவு சீக்கிரத்தில் பணம் வந்து சேர்ந்தது. பணம் வசந்தாவுக்கு வரும் வரையில் வசந்தா பல இன்னல்களுக்கு ஆளாக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

அலுவலகத்திற்குச் செல்லும் போது





பணத்தை அலமாரியில் பூட்டி சாவியைத் தாமே கொண்டு செல்லும் கணவர்கள், அன்றாடம், கறிவேப்பிலை, கொத்துமல்லிக்குக் கூடக் கணக்காக பத்து பைசா மாத்திரம் கொடுக்கும் கணவர்கள், மனைவியும் வேலை பார்க்கிறவளாக இருந்தாலும் அவளுடைய பாங்க் பாஸ்புக், செக் புக் முதலியவற்றைத் தம்மிடமே வைத்துக் கொள்ளும் கணவர்கள் போன்ற ஆண்கள் பலர் இருக்கிறார்கள்.

பொறுப்புள்ள கணவர், உயிருடன் இருக்கும் போதே, தான் இறந்து விட்டால் ஏற்படும் பிரச்னைகளை முன் கூட்டியே அறிந்து அதற்குத் தகுந்த முறையில் ஏற்பாடு செய்வார். ஆனால் சிலர் இதை அச்சாணியமாக (கெடுதலாக) நினைக்கிறார்கள். நெருப்பு என்றால் வாய் வெந்து விடாது. எனவே இக் கட்டுரையைத் தவறாக எடுத்துக் கொள்ளாமல் படியுங்கள்.

# நெருப்பு என்றால் வாய் வெந்து விடுமா?

(அப்படியே, கணவர் இது மாதிரியான ஏற்பாடுகள் ஏதாவது செய்ய முனைந்தாலும் மனைவி, ''நல்லாருக்கு. இப்போ உங்களுக்கு என்ன அவசரம்னு இதெல்லாம் செய்யறீங்க'' என்று கணவரின் செயலைத் தடுத்து விடுவதுமுண்டு.)

சில வீடுகளில், கணவன், மனைவி ஒருவருக்கொருவர் அறியாமல் பணம் கொடுக்கல் வாங்கல் நடத்துவதுண்டு. இது தவறான செயல். கூடியவரை கணவன் மனைவிக்கிடையே பண விஷயத்தைப் பற்றிய எந்த இரகசியமும் இருக்கக் கூடாது. குடும்பத் தலைவனுக்கு, சீட்டாடுவது, குடிப்பது, குதிரை பந்தயம் போன்ற சுகாதாரச் செயல்கள் இருக்கும் பட்சத்தில், அவருக்குத் தெரியாமல் குடும்பத் தலைவி சேமிப்பதில் நியாயமுண்டு. அப்போதும், தன் சேமிப்புப் பற்றி நம்பிக்கையுள்ள யாருக்காவது கூறுவது நல்லது. ஒரு வேளை அசம்பாவிதம் ஏதாவது ஏற்படுமானால், அச் சேமிப்பு, நியாயமான உரிமையாளரைச் சேர வாய்ப்புண்டு.

சீட்டாட்டம், குதிரைப் பந்தயம் போன்ற பழக்கங்கள் பொதுவாக பெண்களிடம் இல்லையென்றாலும், பக்கத்து வீட்டுக்காரியைப் போல நாமும் இருக்க வேண்டும் என்று டம்பச் செலவுகள் செய்யும் இல்லத் தலைவிகளும் உண்டு. இந்நிலையில் குடும்பத் தலைவன், தலைவிக்குத் தெரியாமல் ஏராளமாக சேமித்து வைப்பதிலும் தவறு இல்லை. ஆனாலும் இச் சேமிப்பு பற்றி நம்பிக்கை இருப்பவர் ஒருவரிடம் சொல்லி வைத்தால் நல்லது. கூடிய வரையில் ஒரு வீட்டின் பண விவகாரம், 'கணவன் மனைவி, வளர்ந்த குழந்தைகள் எல்லோருக்கும் தெரிந்திருப்பது நல்லது. இறந்தவர், மனைவிக்குத் தெரியாமல் பலருக்குக் கடன் கொடுத்திருக்கலாம். இந்நிலையில் கடன் வாங்கியவர்கள் அப் பணத்தைக் கொடுக்காமலேயே இருந்து விடலாம்.

பொதுவாக யாராக இருந்தாலும் பண விவகாரத்தில் ஒருவருக்கொருவர் செட்டில் பண்ணுவது நல்லது. இவ்வாறு ஒருவர், தன் ஆஸ்தி பற்றிய விஷயங்களை செட்டில் பண்ணுவதைத்தான் ஆங்கிலத்தில் எஸ்டேட் பிளானிங் (**Estate Planning**)என்று கூறுகிறார்கள். எஸ்டேட் என்னும் பதம், காபி, தேயிலை, ஏலக்காய் எஸ்டேட்டுக்களை மட்டும் குறிப்பது அல்ல. ஒருவருடைய சொத்து முதலியவற்றையும் அது மிகக் குறைந்த அளவில் இருந்தாலும் — எஸ்டேட் என்றுதான் குறிப்பிடுகிறார்கள்.

கணவர் இம்மாதிரியான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கியவுடன், அவர் இறந்து விடுவார் என்ற பயம் அனாவசியமானது. தன் கணவர் எல்லாவற்றையும் பார்த்துச் செய்திருப்பார் என்று மனைவி அசிரத்தையாக இருந்துவிடுவதுண்டு. இப்படிப் பல பெண்கள் பிற்காலத்தில் குழந்தைகளை வைத்துக் கொண்டு அவதிப்படுகிறார்கள்.

சிலர், நம்மிடம் என்ன பெரிய எஸ்டேட்டாப் பாழ் போகிறது என்று எந்தவித ஏற்பாடுகளும் செய்யாமல் இருந்துவிடுவதுண்டு. தயவு செய்து ஒன்றை மாத்திரம் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நம் ஆஸ்தி கொஞ்சமாக இருக்கும்போதுதான், அதிகக் கவனத்துடன் ஏற்பாடுகள் தேவைப்படும்.

இந்தச் சம்பவத்தைப் படியுங்கள். சம்பவம் கற்பனையல்ல. பெயர்கள்தாம் கற்பனை. வீணாவின் கணவர் சுரேஷ் திடீரென்று இறந்து போனார். அவர் தன் தந்தை பெயரிலிருந்த இடத்தில் வீடு கட்டி அதிலேயே தன் தொழிலையும் நடத்திக் கொண்டிருந்தார். சுரேஷின் தந்தை, உயில் எழுதாமலும், சுரேஷ் வீடு கட்டியிருந்த இடத்தைச் சுரேஷின் பெயருக்கு மாற்றாமலும், சுரேஷுக்கு முன்னரே இறந்து விட்டிருந்தார். இப்போது சுரேஷும் இறந்து விட்டபோது, சுரேஷின் இரு சகோதரர்கள், அந்த வீட்டில் தமக்கும் பங்குண்டு என்று கோர்ட்டுக்குப் போனார்கள். வீணா தன் கணவரின் தொழிலை நடத்தக் கூடிய அளவுக்குத் திறமையுள்ளவளாக இருந்தாலும், வீட்டைப் பற்றிய கேஸ் கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டு இருந்ததால், அந்த வீட்டில் தொழிலைத் தொடர்ந்து நடத்த இயலவில்லை. அவளிருந்த நிலையில் வேறு இடம் பார்த்துத் தொழிலைத் தொடர முடியவில்லை. ஆயிரக்கணக்கில் வக்கீலுக்கு வழக்காடப் பணம் கொடுத்துக் கொண்டு, மீதியுள்ள பணத்தில் வீணா தன் குழந்தைகளுடன் பட்ட கஷ்டத்தை விவரிக்க முடியாது. சுரேஷ், எல்லாவற்றையும் சரியான முறையில் திட்டமிட்டிருந்தால் வீணா இன்னல்களை அனுபவிக்க வேண்டிய அவசியமிருக்காது.

சொத்து பற்றிய திட்டம் போடுவதில், கணவன் மனைவி இருவருக்கும் பொறுப்புண்டு. இருவரும் நல்ல ஆரோக்கியத்துடன்

இருக்கும் போதே சொத்து ஏற்பாடுகளை ஒற்றுமையாகச் செய்ய வேண்டும். அப்படிச் செய்யும் போது கீழேயுள்ள குறிப்புக்களை மனத்தில் கொண்டுச் செயல்படுவது நல்லது.

1. சொத்துக்கள் பற்றிய செட்டில் மெண்ட் செய்வதற்கு, நல்ல ஆலோசகர்களை தேர்ந்தெடுப்பது முக்கியம். 'இது என்ன பிர மாதம். நாமே செய்து விடலாம்' என்று நாமே செய்து விடக் கூடியது அல்ல அது. பொதுவாக இவ்விஷயத்தில் வக்கீலின் அல்லது சார்ட்டர்டு அக்கவுண்டண்ட்டின் ஆலோசனை பெறலாம்.

2. கணவன் மனைவி இருவரையும் இணைத்து எழுதக் கூடிய ஒப்பந்தங்களே சிறந்தவையாகும். அட்வகேட்டுகளையோ, சார்ட்டர்டு அக்கவுண்டண்ட்களையோ கலந்தாலோசிக்கும் போது அவர்களுக்குப் பணம் கொடுக்க வேண்டுமே என்று நினைத்து ஏற்பாடுகளைத் தாமே செய்வது தவறு.

3. சேகரித்து ஒரே இடத்தில் வைக்கப் பட வேண்டிய விவரங்கள் எவை என்று சற்றுக் கவனிப்போம்.

**குடும்பம்:**
பிறப்பு சர்ட்டிபிகேட்டுகள், சுவீகாரம் எடுத்துக் கொண்டிருந்தால் அதற்குரிய சர்ட்டிபிகேட்டுகள், மற்றும் திருமண, விவாகரத்து பற்றிய விவரங்கள்.

**குடும்பச் சொத்து:**
நிலமாக இருந்து குத்தகைக்கு விட்டிருந்தால், அது சம்பந்தமான பத்திரங்கள், வீடாக வாடகைக்கு விட்டிருந்தால் அட்வான்ஸ் விவரம், மற்றும் சம்பந்தப்பட்ட பத்திரங்கள், விவசாய நிலத்தைப் பற்றிய விஷயங்கள், அதுபற்றிய பத்திரங்கள்.

**பாங்கில் இருக்கும் பணம் பற்றிய விவரம்:**
குடும்பத் தலைவன் இருக்கும் போதே, அந்தப் பணம் யார் யாருக்குச் சேர வேண்டும் என்பது பற்றிய விவரம், பிக்சட் டிபாசிட் ரசீதுகள் போன்றவை.

நகை, வெள்ளிச் சாமான்கள் போன்றவைகளை பேங்க் லாக்கரில் வைத்திருந்தால், பேங்க்குடைய பெயர், லாக்கர் எண், சாவி போன்ற விவரம், தபால் நிலையத்தில் ஏதாவது சேமிப்பு இருந்தால் அதுபற்றிய தகவல், கார், ஸ்கூட்டர் ரிஜிஸ்ட்ரேஷன் விவரம்.

**இன்சூரன்ஸ்:**
ஆயுள், வீடு, தொழில், விபத்து பற்றிய இன்சூரன்ஸ் தகவல்கள்.

**குடும்பத்தலைவன் வேலைசெய்யும் அலுவலகத்திலிருந்து வரக்கூடியவை:**
பிராவிடண்ட் ஃபண்ட், கிராஜுவிடி, பென்ஷன் சம்பந்தப்பட்ட தகவல்.

**வரி:**

வருமானவரி எண் (வருமான வரி கட்டுபவர் ஒவ்வொருவருக்கும் நிரந்தரமான ஒரு எண் கொடுக்கப்படுகிறது.), கடந்த மூன்றாண்டுகளில் கொடுக்கப்பட்ட வருமான வரி, சொத்துவரி போன்ற விவரங்கள்.

**தொழில் ரீதியானவை:**
இந்துக் கூட்டுக் குடும்பத்தில் தனக்குக் கிடைக்கக் கூடிய பங்கு, ஏதாவது கம்பெனிகளில், பாகஸ்தர்களாக இருந்தால் அது பற்றிய பத்திரம்.

**அட்டார்னி பவர்:**
ஒருவர், தன் சொத்து பற்றிய விவகாரங்களை நடத்துவதற்காக, இன்னொருவரை நியமித்து அங்கீகாரம் செய்யும் பத்திரம். இதைத்தான் ஆங்கிலத்தில் 'பவர் ஆஃப் அட்டார்னி' என்று கூறுகிறார்கள்.

4. மேலும் உயில் பற்றிய விவரங்கள், தனிப்பட்ட முறையில் யாருக்காவது கடன் கொடுக்கப்பட்டிருக்கிறதா? கடன் கொடுக்கப்பட்ட தேதி, திரும்பக் கொடுக்கப்பட்டிருக்கும் தொகை, கடன் வாங்கியிருந்தால் வாங்கிய தேதி, திரும்பக் கொடுக்கப்பட்ட தொகை போன்ற விவரங்கள்.

5. பலவிதமாக அர்த்தம் தரக்கூடிய வார்த்தைகளைத் தவிர்த்துக் குழப்பத்திற்கு இடமில்லாமல் உயில் எழுதப்பட வேண்டும். சரியான முறையில் உயில் எழுதப்படாமல் இருந்தால், நியாயமான வாரிசுதாரர்களல்லாத, பேராசை பிடித்த உறவினர்களுக்குச் சொத்து போய்ச் சேரும் அபாயமும் உண்டு. துக்கமாக இருக்கும் நேரத்தில் விதவைகளிடமிருந்து நயவஞ்சகமாகச் சொத்துக்களை அபகரிப்பவர்களும் உண்டு. இதற்கெல்லாம் இடம் கொடுக்காத வகையில் உயில் எழுதப்பட வேண்டும்.

—ராஜி.

**நாய்க்கடிக்கு நல்ல மருந்து!**

நாய் கடித்து விட்டதா? உடனே நாய்க்கடி ஊசி போட உள்ளூரில் வசதி இல்லையா? ஒரு ஆன்டிசெப்டிக் ஊசி போட்டுக்கொள்ள வசதியிருக்கிறதா. போட்டுக்கொள்ளுங்கள்! பிறகு மணத்தக்காளி இலைகளை நன்றாகச் சாறு பிழிந்து கடிவாயில் பிழிந்து சக்கையும் மேலே ஒட்டும்படி வைத்து விடுங்கள்... குணமாகிவிடும் மணத்தக்காளிச் சாறு நாய்க்கடிக்கு நல்ல மருந்து!

சொன்னவர்: ஏர்லைன்ஸ் பி. ஆர். சம்பத்குமார். கேட்டவர்: ஆர். பி. சாரதி.

# கோடுகள் கோலமாவதில்லை

## கோமளா வரதன்

4

எத்தனை வருஷமாகியிருக்கும் அவள் பிரிந்துபோய்!... காதம்பரிக்கு வயது ஒன்றோ இரண்டோ, இப்போது பதினாறு. சரியாக பதினாறு வருடங்கள், ராமர் வனவாசம் போன மாதிரி! இப்படிக்கண்காணாமல்போய் விட்டு வரும்படி அவ்வளவா பாதித்திருந்தது மனைவியின் பிரிவு...

தாத்தாவால் பேச முடியவில்லை. எல்லாம் மரத்துப் போன மாதிரி, எதிரில் வந்து நிற்கும் மகளைப் பார்த்துக் கொண்டேயிருந்தார்.

'அரைக்கிழமாயிட்டானே... தேஞ்சுப் போயிட்டானே...'

உற்றுப் பார்க்கப் பார்க்கக் கண்ணோரம் நீர் திரள்கிறது. கனத்திருந்த நெஞ்சம் கரையத் தொடங்குகிறதோ! கண்ணாடியில் படர்ந்த ஆவியாய் துக்கம் பார்வையை மறைக்கப் பின்னே முகம் மங்கலாய்த் தெரிகிறது. துடைக்க எடுத்த கை வெட வெடவென்று ஆடுகிறது. சதை ஆடுகிறது என்று தோன்றுகிறது காதம்பரிக்கு.

"அட சனியன்களா, அம்புட்டுச் சட்டையும் நனைச்சுக்கிட்டீங்களா, உங்கக் கூட மாரடிக்கிறதே பெரிய இழவாப் போச்சு. என்ன செய்யணும் தெரியுமா உங்களையெல்லாம்... சே...!"

திடீரென்று கேட்ட அந்த அபஸ்வரமான கத்தல், கூடத்து மௌன நாடகத்தின் உணர்ச்சி மிகுந்த கட்டத்தைக் குலைத்துக் கொண்டு வெகு கொடூரமாக ஒலிக்கிறது.

அந்த வீட்டில் அந்த மாதிரி அமைதி குலைந்ததேயில்லை. உரத்த தொந்திரவு கிடையாது. திடீரென்று ஏதோ ஒன்று சொல்லாமல் வந்து அதிரச் செய்துவிட்டுப் போனதை போல இருக்கிறது. பாசத்தின் மென்னுணர்வுகளில் நெகிழ்ந்து போயிருந்த தாத்தா உலுக்கி விட்டதைப் போல உணர்வு வரப்பெற்று முகம் களித்தார். யார் அங்கேயென்று பார்த்தார். உள்ளிருந்து ஆள் கூட ஓடிவந்து எட்டிப் பார்த்துவிட்டுப் போனான்.

காதம்பரிக்குப் பாவமாயிருந்தது.

அம்மா இடத்தில் இவள்... தாத்தாவுக்குத் தாங்குமோ...

சட்டென்று அவரை நெருங்கி ஆதரவாய் விரல்களைப் பிணைத்துக் கொள்கிறாள்.

அதற்குள் அவளே பின் கட்டிலிருந்து வருகிறாள். கைக்கொருவராக அந்த இரண்டு சிறுவர்கள். முழங்காலுக்கு மேல் தொடை வரை தூக்கிச் செருகிய சேலை. நனைந்துவிட்ட பாவாடை லேஸ் காலில் நெற்றிக் கடுக்குகிறது.

சட்டென்று அந்தப் புடவையை இழுத்துத் தொங்க விட வேண்டும் போல் காதம்பரியின் கை பரபரக்கிறது. தாத்தாவின் எதிரில்... மரியாதையில்லாமல்...

அவளை முறைக்கிறாள்.

அவளுக்கு விளங்கினால்தானே?

அந்தத் தோற்றமும் அவளுடைய திடும் பிரவேசமும் உண்டாக்கிய அதிர்ச்சி தாத்தாவின் முகத்தில் அப்பட்டமாய்த் தெரிகிறது.

அவள் எதையும் கவனிக்கவில்லை. அந்தச் சூழ்நிலையோ, எதிரே நின்ற பெரியவரோ அவள் கண்ணில்பட்டதாகவே தெரியவில்லை. நேராக வாஞ்சிநாதனிடம் வந்தாள்.

"என்னங்க இது, இப்படியே மசமசன்னு நின்னுக்கிட்டிருந்தா, சாப்பிடறதுக்கு என்ன கிடைக்கும் இங்கே... எப்போ கிடைக்கும்..."

வாஞ்சிநாதன் உள்பக்கம் பார்த்தார், காதம்பரியைப் பார்த்தார். அவள் பக்கம் பார்த்துத் தலையைத் தாழ்த்திக் கொண்டார். முதன் முதலில் ஒரு புது இடத்துக்கு வந்திருப்பதான தயக்கம், சற்றே நிதானம் எதுவும் இல்லை அவளிடம். வெடுவெடுக்கிறாள்.

"உங்க வீட்டுக்கு முதமுதல்ல வந்திருக்கேனேன்னு ஆரத்திச்சுத்திக் கொட்டாட்டாப் போவுது: வமிசத்துக்கு வாரிசுங்க வந்திருக்குதேன்னு பிள்ளைங்களைக் கொஞ்சி வரவேற்காட்டாக் கூடப் போவுது. என்னவோ பொம்மையாட்டம் அப்படி வேடிக்கைப் பார்த்துக்கிட்டு நிக்கறீங்களே எல்லாரும், என்ன விஷயம்...?"

"லட்சுமி... லட்சுமி..." மேலே பேச வாயெழும்பாமல் வாஞ்சிநாதன் கூட்டி விழுங்குவது தெரிகிறது.

தாத்தாவுக்குத் திகைப்பு.

வாஞ்சி... வாஞ்சியா இப்படி இந்த முதல் சந்திப்புத் தந்த அதிர்ச்சியாலேயே ஆடிப் போய் விட்டார் அவர்.

'ராமா!...'வென்று ஒரு பெருமூச்செறிந்தார். மறுபேச்சின்றி தன் அறைக்குப் போய் விட்டார்.

இவள் பேர் லட்சுமியா...!

மகாலட்சுமி மாதிரி சாந்தமான, உரத்துப் பேசாத, முகம் சுளித்தேயறியாத அம்மா இடத்தில்... பெயரில் மட்டுமே லட்சுமியான இவளை... தாத்தாவால் எப்படி ஜீரணிக்க முடியும்? அவருக்காக ரொம்ப சங்கடப்பட்டாள் காதம்பரி. இந்த அப்பா வராமலேயிருந்திருக்கக் கூடாதாவென்றுதான் சட்டென்று தோன்றியது.

அன்றிலிருந்து அந்த வீட்டுச் சூழ்நிலையே மாறிப் போயிற்று. ஆள் இருக்கிறார்களாவென்று சந்தேகப்படுமளவு அத்தனை அமைதியாயிருந்த வீடு அமளிதுமளிபட்டது. சதா விஷமம் செய்யும் இரண்டு துறுதுறுக்க சிறுவர்களின் நடுவில் சாமான்கள் உடைபட்டன. சின்னாபின்னமாயின. வைத்த இடம் தெரியாமல் மறைந்தன. எந்த சாமானும் இருந்த இடத்தில் இருக்க வேண்டும். தூக்கத்தில் எழுந்து கை வைத்தால் கூடத் தட்டுப்பட வேண்டும் என்று தாத்தா சொல்லுவார். பேத்தியிடமும் அந்த ஒழுங்கு படிந்திருந்தது. இப்போதோ தேடினாலும் சாமான்கள் கிடைப்பதில்லை. போதாக்குறைக்கு ஓயாமல் லட்சுமியின் பேச்சு வேறு. கணவனிடம் தன் உரிமையை நிலைநாட்டும் சாக்கில், மாமனாரிடம், 'இது தெரியாது. இது தெரியக் கூடாது. ஹூம்...!' மென்று நியாயம் கேட்கும் சாக்கில், பிள்ளைகளை மிரட்டித் திட்டுவதான விதத்தில்... சதா லட்சுமியின் குரல் கண்டாமணியாக அங்கே ஒலித்துக் கொண்டிருந்தது.

வாஞ்சிநாதனோ தனித்துச் சிந்தனையென்று ஒன்றில்லாதவர் போல அவள் எது சொன்னாலும் தலையாட்டிக் கொண்டிருந்தார்.

அந்தப் பிள்ளை வரமாட்டானாவென்று எவ்வளவு ஏங்கியிருக்கிறார். ஆனால் இப்படி வருவானென்று கனவு கூடக் கண்டதில்லையே. இந்தப் புதிய பிணைப்புக்களோடு பார்த்த போது, பாசத்தில் விரிசல் கண்டது போல் இருந்தது. அப்படியே அவன் தனிமரமாய் — தன்னைப்போல — நின்று கொண்டிருக்க வேண்டுமென்று அவர் எதிர்பார்க்கவில்லை. ஆனாலும் தாரதம்மியமில்லாமல் இங்கிதங்களேயற்ற ஒருத்தியிடம் ஈடுபட்டு... எப்பேர்ப்பட்ட அதிர்ச்சி...!

லட்சுமியோ அந்த வீட்டில் பொருந்தாமல் தனித்து நின்றாள். அவள் எண்ணவோட்டம் மற்றவர்களிடமிருந்து மாறுபட்டு எதிரலையாகப் பரவியது. இவர்கள் அகராதியின்படி நாகரீகம் என்ற வார்த்தைக்கு அர்த்தம் கூடத் தெரியாதவளாக, அவள் தோன்றினாள். பேச்சில், நடத்தையில் பண்பு தொலைப்பது



தான் நாகரீகம் என்று நினைத்த தாத்தாவுக்கு எதிராக சினிமாவில் பார்த்த உடையலங்காரங்களைக் காப்பியடிப்பதுதான் நாகரீகம் என்ற அளவில் அவள் சிந்தனை இருந்தது.

போதாக்குறைக்கு, சொத்து, ஆஸ்தி, பாஸ்தி என்றெல்லாம் அவள் பேச்சு வேறு சுதியில் ஒலிக்க ஆரம்பித்தது. இவர்களுக்கு இவ்வளவு இருப்பது தெரிந்திருந்தால் முதலிலேயே வாஞ்சிநாதனிடம் கண்டிஷனைப் பேசியிருக்கலாமேயென்று நினைப்பதுபோல் தோன்றியது.

"எங்கே பொறந்தா என்ன, பிள்ளை வயத்துப் பிள்ளைங்க, சொத்துக்கு நேர் வாரிசுங்க..." என்பாள். "போங்கடா போய்த் தாத்தா கூட விளையாடுங்கடா...?" என்று அவர்களை முன்னுக்குத் தள்ளுவாள்.

"காதம்பரி, சும்மா பெரியவர் கூட என்ன பண்றே... வயசுக்கு வந்த பொண்ணு தாத்தா வானுக் கூட கூச்சநாச்சமில்லாம இப்படியா ஒட்டிக்கறது. உன் ரூமுக்குப் போ. போய் படி..." இவளைக் கத்தரிப்பாள்.

இந்தப் பெண் காதம்பரி இப்படி ஒட்டி ஒட்டிக்கொண்டு, தாத்தாவிடம் இவ்வளவு சலுகையுடன் வளர்கிறாளே, இது தன் பிள்ளைகளைப் பாதித்துவிடுமோவென்ற பயம் வார்த்தைகளில் தொனிப்பது புரியும். அந்த அருவசிய பேச்சுக்களும், நடவடிக்கையும் தாத்தாவுக்கு அருவருத்தன. பொறுக்க முடியாமல் ஒருநாள் கத்தினார் தாத்தா.

"அத்தனையும் என் சுய சம்பாத்தியம். பரம்பரை ஆஸ்தி கொள்ளை போகல்லே, பிள்ளையும், பேரனும் கூறு போட்டுக்க. வந்தவங்க, போனவங்க, பாத்தியப்பட்டவங்க, படாதவங்க யாரு வேணு என்ன செய்யறதுன்னு எனக்குச் சொல்லித் தர வேணும்."

வினாடி நேரம் வாயடைத்துப் போனாள் லட்சுமி. அடுத்து அவள் காதம்பரியைப் பார்த்த பார்வையில் குரோதம் கொப்புளித்தது. புலம்ப ஆரம்பித்தாள்.

"பார்த்தீங்களா... நான் பாத்தியப்படாதவன்னு சொல்றாரு. கேட்டுட்டு நிக்கறீங்களே...?"

வாஞ்சிநாதன் இருபுறமும் பார்த்துக் கையைப் பிசைந்தார்.

என்ன ஒரு பிள்ளை. பளிச்சென்று ஒரு வார்த்தை சொல்லாமல்... அவள் புடவைத் தலைப்பில் ஒளிந்து கொண்டு... கர்மம்! கர்மம்...!

"என்னடா சொல்லிக் கூட்டிண்டு வந்தே இவளை...?"

"என்ன சொல்லிக் கூட்டிக்கிட்டு வரணும்? பித்துப் பிடிச்சா மாதிரி தம் போக்கிலே கத்திக்கிட்டிருந்தவரை ஒரு ஆளாத் தேத்தி ஒம்பது வருஷம் கூட வாழ்ந்திருக்கேன். ரெண்டு புள்ளைங்களாச்சு. திமுர்னு நெனச்சுக்கிட்டு, கௌம்புனீங்க, வந்திருக்கோம். லேசாச் சொல்லிட்டா ஆச்சா, பாத்தியப்படாதவங்கன்னு..."

**மல்லிகைப் பூக்கள் நிறையப் பூப்பதற்கு மல்லிகைச் செடியின் அடியிலுள்ள மண்ணை நன்றாகக் கொத்தி விட்டு செடியிலுள்ள இலைகள் பூராவையும் (ஒன்று கூட விடாமல்) உருவி மண்ணுடன் கலந்து விட்டு தண்ணீர் ஊற்றிக் கொண்டே வந்தால் புதிதாகத் துளிர் விட்டு கணுவுக்குக் கணு செடி கொள்ளாமல் மலர் பூத்துக் குலுங்குவதைக் காணலாம். மாசி, பங்குனி மாதங்களில் மல்லிகை பூக்கத் தொடங்கு முன் செய்ய வேண்டும்.**

**— கல்பகம்.**

அந்தக் குரல், அந்தப் பார்வை, அந்தப் பொல்லாப்பு...

ராமன் காட்டுக்குப் போய் வந்த மாதிரியென்று எண்ணிக் கொண்டாரே, எத்தனை அபசாரம். இந்த மாதிரி ஒரு ராட்சசியையுமா அவன் கூட்டிக் கொண்டு வந்தான்...?

ஒரு நிமிஷந்தான் யோசித்தார் தாத்தா. முடிவுக்கு வந்து விட்டார்.

"இந்தாடா வாஞ்சி. பாத்தியங்கறது வருஷக்கணக்கினாலே வரதில்லேடா. மனசினாலே வரது. பாத்த உடனேயும் வரலாம். ஆயுசுக்கும் வராமலேயும் போகலாம். இவ கேசிலே வராதுன்னு தோணறது. உங்கூட ஒம்பது வருஷம் இருந்திருக்கேன்னு என்னவோ கணக்குச் சொல்றா. உன்னை ஆளாக்கியிருக்கேன்னு வேறே சொல்றா. இப்போ பஸ்ட் ரைட் அவளுக்குத்தான். நீ அவ கூட வந்த மாதிரி, அவ கூடவே போயிடு. வெறுமே இல்லே. வேண்டியது தர்றேன். எடுத்துண்டு போயிடு. என் பிள்ளை வரவேயில்லேன்னு நினைச்சுக்கறேன்..."

நகத்தைக் கோடாரியால் வெட்டிவிட்டார் தாத்தா. அன்று வேற்றுப் போனவர்கள் தான். அவர்கள் வந்ததும், வந்த சுருக்கில் பிரிந்து போனதும், ஏதோ டிராமாவில் பரபரப்பான கிளைமாக்ஸ் சீன் ஒன்று நடந்தேறியது போல் இருந்தது காதம்பரிக்கு. யோசிக்கத் தெரிந்த வயது. யோசித்தாள்.

'அவர் வராமலே இருந்திருக்கலாம். ஏன் வந்தார்... குழந்தையில் அவள் மனத்தில் கிராதகனாய் உருவகப்படுத்தியிருந்த அப்பாவே தேவலே. அவர் சிங்கமாய் இருந்தார், அட்டகாசம் செய்தார். இவரோ... அசிங்கமாய் இருக்கிறார்.. அத்தனை வித்தியாசம்! எப்படி இந்தக் கசப்பான மாற்றம் நிகழ்ந்திருக்கும்...

மெள்ள மெள்ள அவள் மனத்திலும் பாசம் கழன்று கொண்டது.

இப்போது, இத்தனை வருடங்கள் கழித்து, ஏங்கலாமோ; மற்ற குடும்பங்களைப் போல ஒரு ஆதரவாய் அப்பா அமையவில்லை யென்று...

(தொடரும்)

# ஒரு செங்கல்லின் விலை ரூ 319/-







விளம்பரங்களைக் கண்டு ஏமாறுவதில் ஆண்களைவிடப் பெண்களே முதலிடம் வகிக்கிறார்கள் என்பதை சமீபத்தில் ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளனர். எல்லாவற்றிலும் 'ஆண்களோடு சரிநிகர் சமானம்' என்று மார்தட்டும் நம்மிடம் ஏன் இந்தப் பலவீனம்? படித்த, தெளிந்த அறிவுள்ள பெண்கள் கூட விளம்பரத் தூண்டில்களில் சிக்கிச் சுலபமாய் ஏமாந்துவிடுகின்றனர். உதாரணத்திற்கு இதோ ஓர் உண்மைக் கதை.

**பிப்ரவரி 23 — 1985:**

மைசூரில் மகாராணி கல்லூரி மாணவி குமாரி லதா. இவள் கணக்கில் புலி. பத்திரிகையில் வெளிவந்த ஒரு விளம்பரத்தைப் பார்த்தாள் லதா. அதில் குறுக்கும் நெடுக்குமாய்க் கட்டங்களைப் போட்டு, அதில் எண்களை நிரப்பி, எப்படிக் கூட்டினாலும் ஒரே விடை வரவேண்டும் என்றும், இவ்வாறு செய்தால் முதல் பரிசு ஸ்கூட்டர், இரண்டாம் பரிசு டி.வி., மூன்றாம் பரிசு டூ-இன்-ஒன் எட்செட்ரா எட்செட்ரா என்று கவர்ச்சிகரமான முறையில் செய்யப்பட்டிருந்த விளம்பரத்தில் மயங்கி, அந்தக் கணக்கைப் பூர்த்தி செய்து அனுப்பினாள். (நம் தமிழ்ப் பத்திரிகைகளிலும் இதுபோல் ஏராளமான விளம்பரங்கள் வருகின்றன.)

சில நாட்கள் கழித்து லதாவுக்கு மூன்றாம் பரிசு கிடைத்திருப்பதாயும், பார்சல் செலவுகளுக்கான தொகை ரூ.56 அனுப்பிவைத்தால் பரிசுப்பொருளான டூ-இன்-ஒன்னைப் பார்சலில் அனுப்பி வைப்பதாயும் கடிதம் வர, மகிழ்ந்துபோன லதா உடனே 56 ரூபாயை அந்த டெல்லி கம்பெனிக்கு அனுப்பிவிட்டுப் பரிசுக்காகக் காத்திருந்தாள்.

பிப்ரவரி 23-ம் தேதியன்று அவளுக்கு வி.பி.பி.யில் ஒரு பார்சல் ரூ. 263-க்கு 'டெல்லி, தீப் டிரேடர்ஸ்'ஸிடமிருந்து வந்தது. 23-ம் தேதிதான் அந்தப் பார்சலை வாங்கக் கடைசி நாள் என்பதால், அங்கே இங்கே பணம் புரட்டிக் கொண்டு, லதாவும் அவள் தாயும் போஸ்ட் ஆபீசுக்கு ஓடிப் பணம் கட்டிப் பார்சலை வாங்கி, ஆர்வமுடன் அங்கேயே பிரித்தனர். டூ-இன்-ஒன் செட்டுக்குப் பதில் ஒரு பெரிய சைஸ் செங்கல், அழகாய்க் குஷன்களுக்கும், பேப்பர்களுக்கும் உள்ளே பார்சல் செய்யப்பட்டு ஒரு அடிக்கு ஒரு அடி நீள அகலமும் அரை அடி உயரமும் உள்ள மரப்பெட்டியில் பாக் செய்யப்பட்டிருந்தது! வெறும் செங்கல்லுக்காக லதா கொடுத்த பணம் ரூ. 319/-! உடனே போய்ப் போலீசில் புகார் செய்தாள். இருந்தும் என்ன பயன்? இந்த மாதிரி ஏமாற்றுக்காரர்கள் கழுவிய மீனில் நழுவிய மீனாய்ச் சட்டத்தின் சில ஓட்டைகள் வழியே தப்பித்துக் கொண்டு விடுவார்கள்! நாம் எதுவுமே செய்ய முடியாது! எனவே யாரும் ஏமாறாதீர்கள்!

இதேபோல்தான் துணிமணி விளம்பரங்களும். "ஒரு சேலை வாங்கினால் ஒரு சேலை இனாம்!" என்று விளம்பரம் செய்கிறார்கள். 50 பைசாவுக்கு பிளவுஸ் பீஸும், 30 பைசாவுக்குக் கர்சீப்பும் தருகிறோம்; இந்த 'ஸேல்' இன்றே கடைசி என்றெல்லாம் ஆசை காட்டுகிறார்கள். தினமும் பேப்பரைத் திறந்தால் முக்கால் வாசிப் பேப்பரை அடைத்து இதே விளம்பரங்கள்தான். மயங்கி, ஏமாந்து, வாங்

குபவர்கள் ஆசையாய்க் கட்டிக் கொண்டு மறுநாள் நீரில் நனைத்தால் அவை ஒரே நனைப்பில் மோர்க் குழம்பாய்ச் சாயம் போய்ச் சுருங்கிவிட, வெளியில் சொல்லவும் முடியாமல் அவதிப்படுவார்கள்.

டீ. வி. யில் ஆரம்பித்து, சின்னக் கடிகாரம் வரை எல்லாப் பொருள்களுக்கும், 'இனாம், இலவசம் அது, இது' என்று விளம்பரம் செய்கிறார்கள். எத்தனையோ பேர் இந்த இனாம் பொருள்களுக்கு ஆசைப்பட்டே, தேவை இருக்கிறதோ இல்லையோ அந்தப் பொருளை வாங்குகிறார்கள். இந்த இனாம் பொருட்களோ மகா மட்டமானவையாக இருக்கும். திருப்தியளிப்பதாய் இருந்ததாய்ச் சரித்திரமே கிடையாது.

ஆனால் டீ. வி. முதலிய எந்தச் சாமானையும், நாம் வாங்கிய பின், உபயோகித்துப் பார்த்துக் குறைகள் தென்பட்டால் பிறகு நாம் திருப்பிக் கொடுக்க முடியவே முடியாது. கடைகளில் தரும் பில்லில் "ஒருமுறை விற்கப்பட்ட பொருள் எக்காரணம் கொண்டும் திருப்பி ஏற்கப்படாது" என்று அச்சடித்திருப்பார்கள். நாம் போய்க் குறை சொன்னால், 'சர்வீஸ் செய்து தருகிறோம்' என்று ஏதோ செய்வார்களே ஒழிய "எக்ஸ்சேஞ்ச்' செய்து தர மாட்டார்கள்.

எனவே சகோதரிகளே! இலவசமாய்ப் பெரும் பரிசுகள் தருவதாய்ச் சொல்லும் விளம்பரங்களை நம்பி ஏமாற வேண்டாம். அவற்றைப் புறக்கணித்து விடுங்கள். சேலையோ, மிக்ஸியோ, டீ. வி. யோ, சூர்சிப்போ எதை வாங்குவதாய் இருந்தாலும் பலமுறை ஆழ்ந்து சிந்தித்து, பிறகு நல்ல பெயருள்ள கடையில், கொஞ்சம் விலை கூடப் போனாலும் தரமான பொருள்களையே வாங்குங்கள். தேவையற்ற அனாவசியப் பொருட்களை வாங்கிச் சேர்ப்பதற்குப் பதில், பணமாய் அப்படியே சேமித்தாலும் ஆபத்துச் சமயத்தில் கைகொடுக்கும்!

—வி. கீதா.

ஊறுகாய்கள் போட்டுச் சிறிது நாளில், செளுப்பு வாசனை வந்துவிட்டது. பிடிக்கவில்லை என்ன செய்வது? என்று சிலர் தவிப்பர். அவர்களுக்கு ஒரு யோசனை:

அந்த ஊறுகாய்களுடன் ஒரு கரண்டி மரவள்ளிக்கிழங்கு ஊறுகாயைச் சேர்த்து கலந்து வைத்து விடுங்கள். இப்போது செளுப்பு போன இடம் தெரியாது. ஆனால் மாஹாளி, ஊறுகாய் 'வாசனை' பிடிக்குமா?' பார்த்துக் கொள்ளுங்கள்.

—இந்திராணி.

பெண்களைப் பற்றி வருத்தப்படும் விதத்திலேயே செய்திகளைப் படிக்கிறோம். பல சோகக் கதைகளையும் கேட்கிறோம். ஆனால் 'பெண் என்பவள் அப்படி இடிந்து வாழ வேண்டியவளல்ல. அவளே சக்தி. அனைத்து இயக்கங்களுக்கும் சக்தியாக நின்று உலகையே ஆடச் செய்பவள். அவளின்றி ஓரணுவும் அசையாது. எனவே பெண்களே, தைரியம் கொள்ளுங்கள்' என்று உற்சாகப் படுத்தும் நோக்கத்துடன் ஒரு கண்காட்சி சமீபத்தில் சென்னையில் நடந்தது.

ஆதிபராசக்தி, லக்ஷ்மி, மீனாட்சி எனப் பல்வேறு தெய்வங்களின் சிலைகளும், காவியத் தலைவிகளின் வர்ண ஓவியங்களும், புதிய பாணியும் பழமைக் கலாசாரமும் இணைந்த பெயிண்டிங்குகளும் இடம் பெற்றிருந்தன. நமது கலாசாரத்தின் பின்னணியில் பெண்மை பொலிந்த வாழ்வைச் சிறப்பாகச் சித்தரித்திருந்தார்கள்.

கண்காட்சியில் இடம் பெற்றிருந்த ரர்ஜ ராஜேஸ்வரியின் ஓவியம் வந்திருந்தவர்களின் கவனத்தைத் திருப்பக் கூடிய வகையில் இடம் பெற்றிருந்தது. மிகச் சிறப்பாக அம்பிகையின் வீரத்தையும், கோபத்தையும் சிகப்பு, மஞ்சள் வர்ணத்தில் காட்டியுள்ளார் ஓவியர் இளங்கோ. ஓவியத்திற்காகத் தன் வேலையையும் துறந்து வாழ்ந்து கொண்டு, அந்தக் கலையிலேயே நாளும் நாளும் தோய்ந்து வாழுகின்ற இவருக்கு உறுதுணையாக இருப்பது இவருடைய மனைவி சந்திராதானும்.

—பவித்ரா, சந்திரமௌலி.

அட்டையில்: கண்காட்சியை அமைத்திருந்த திருமதி நந்திதா கிருஷ்ணா.

அட்டையின் மேல்புறம்: இளங்கோவின் வர்ண ஓவியம்.

வண்ணப்படங்கள்: யோகா.


இளங்கோ

கூந்தலுக்கு
எழிலோ எழில்
மென்மை
சுகமோ சுகம்...
வழங்குவது
ஹேலோ
ஷாம்பூ




ஹேலோ வழங்குது
கூந்தல் எழில்—
கூந்தல் பெற்றிடும்
மென்மை சுகம்.
அதன் மணமோ
அபூர்வப் புதுமையே,
ஹேலோ உணர்வே
உன்னதமே.

வியப்பூட்டும் புதிய ஹேலோ வரிசை

ஹேலோ எக்
ஷாம்பூ—
புரத
சட்டத்திற்கானது.

புதிய ஹேலோ
கிரீன் ஆப்பிள்
ஷாம்பூ—
வியப்பூட்டும்
புத்துணர்வு மணம்
அளிக்கிறது.

புதிய ஹேலோ
ஹெர்பல்
ஷாம்பூ—
மூலிகைகளின்
இயற்கை கலவைகள்
உள்ளது.

ஹேலோ உணர்வே உன்னதமே!

..B83.29.TM

# அழகே, கொஞ்சம் பதில் சொல்லு!

விசித்ரா, திருச்சி

**கேள்வி: எனக்கு 19 வயது ஆகிறது. கன்னங்களில் சதைப் பற்று இல்லை. இதற்கு என்ன செய்யலாம்?**

பதில்: கன்னங்களில் சதைப் பற்று பெற 'முக மசாஜ்' செய்து கொண்டால் நல்லது. மேலும் கீழ்க்காணும் பயிற்சியையும் செய்து வாருங்கள்.

சும்மா இருக்கும் போது வாயில் காற்றை நிரப்பிக் கொண்டு வாயை மூடிக் கொண்டு முதலில் கன்னத்தின் ஒரு பக்கம் கொண்டு வந்து சிறிது நேரம் நிறுத்திக் கொண்டு, பிறகு மறுபக்கம் கொண்டு வந்து அதேபோல் சிறிது நேரம் வைத்திருக்க வேண்டும். இது போல்மாறி மாறி செய்து வரவும். வாய் கொப்பளிக்கும் போதும் வாயில் நீரை வைத்துக் கொண்டு இதே போல் பயிற்சி செய்து வரலாம்.



ஆண்டாள் பிரியதர்சினி, விழுப்புரம்.

**கேள்வி: என் உதடுகள் அடிக்கடி ஈரப் பசையின்றி காய்ந்து, வறண்டு விடுகிறது. எப்போதும் ஈரப்பசையுடன் இருக்க என்ன செய்ய வேண்டும்?**

பதில்: உதடுகள் வறண்டு விடாமல், ஈரப்பசையுடன் இருக்க உதடுகளின் மேல் வாஸலின் தடவிக் கொள்ளலாம். இது உதடுகளை வறண்டு போக விடாமல் தடுக்கும்.

---

ஆர். சுஜாதா, சென்னை—88.

**கேள்வி: சென்ற ஒரு வருடமாக பொட்டு வைக்கும் இடத்தில் அலர்ஜியால் கருப்பாக உள்ளது. மேலும் தொடையில் புண் ஏற்பட்டு கருப்பாக உள்ளது. இதற்கும் ஒரு வழி கூறுங்கள்!**

பதில்: அலர்ஜியாலும், புண்ணாலும் கருப்பாக ஆன இடங்களைத் தொடர்ந்து 'ப்ளீச்' செய்து வந்தால் நல்ல பலன் கிடைக்கும். 'கெமிகல் ப்ளீச்' இதற்கு சரிப்படாது. மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்படும் 'ஹெர்பல் ப்ளீச் மாஸ்க்' கொண்டு செய்ய வேண்டும். ஒரு மாதத்தில் சரியாகி விடும்.

---

கவிதா குமாரி, சேனைப்பாளையம்.

**கேள்வி: முகத்தில் வளரும் தேவையற்ற முடிகளை வேக்ஸிங் செய்து கொண்டால் மீண்டும் முடி வளர்ச்சி அருவருக்கத்தக்க முறையில் வளருமா? வளராதா?**

பதில்: முகத்தில் வளரும் தேவையற்ற முடிகளை வேக்ஸிங் செய்து கொண்டால் மீண்டும் முடி வளர சந்தர்ப்பம் உண்டு ஆனால் தாங்கள் கூறியது போல் அருவருக்கத்தக்க முறையில் அல்ல. சாதாரணமாகத்தான் வளரும். ஆனால் நாளடைவில் வளர்ச்சி கட்டுப்படுத்தப்படும். முகத்தில் வளரும் மீசையையும் வேக்ஸிங் செய்து கொள்ளலாம். அதனால் முடி வளர்ச்சி அதிகமாகாது. அதையும் தொடர்ந்து செய்து வர நாளடைவில் வளர்ச்சி குறையும்.

முடியின் வளர்ச்சியை வேரோடு நீக்க 'எலக்ட்ராலிஸிஸ்' என்ற முறை உள்ளது. ஆனால் அந்த முறையில் தோலில் சில மாற்றங்கள், அதாவது முடி எடுத்த இடங்களில் கரும்புள்ளிகளும், தோல் தடிப்பும் ஏற்படும். எனவே அது அவ்வளவு நல்லதல்ல.

வேக்ஸிங் செய்து கொண்டு மேக்கப் போட்டுக் கொண்டால் ஒன்றும் வித்தியாசமாக இருக்காது. எனவே பிறரைப் போலவே மேக்கப் போட்டுக் கொள்ளலாம்.

---

**வி. லஷ்மி, கோவை.**

**கேள்வி: வீட்டில் வேலை செய்யும் பெண்கள் நகங்கள் வளர்த்து நெயில் பாலிஸ் போட்டுக் கொள்ள முடிவதில்லை. எனவே அதற்காக டூப்ளிகேட் நகங்கள் ஏதேனும் இருக்கிறதா? வேண்டும் என்கிற சமயத்தில் பொருத்திக் கொள்வது போல?**

**புருவங்களில் ரோமமே இல்லாதவர்களுக்கு ஒட்டுப் புருவங்கள் இருக்கிறதா? (மீசை தாடி போல) இருக்கிறதென்றால் எங்கு கிடைக்கும்?**

பதில்: வீட்டில் வேலை செய்யும் பெண்கள் விரல்களில் நீளமாக நகங்கள் வளர்த்து நெயில் பாலிஷ் போட்டுக் கொள்ள முடியாத குறையைப் போக்க கடைகளில் டூப்ளிகேட் நகங்கள் கிடைக்கின்றன. அவைகளை வேண்டும் போது பொருத்திக் கொண்டு வேண்டாத போது அப்புறப் படுத்திக்கொள்ளலாம். டூப்ளிகேட் நகங்கள் எல்லா பேன்ஸி ஸ்டோர்களிலும் கிடைக்கும்.

அடர்த்தி இல்லாத புருவங்களின் மேல் இரவில் விளக்கெண்ணெய் தடவி வந்தால் புருவம் அடர்த்தியாக வளரும். வெளியே போகும் போது ஐப்ரோ பென்சிலால் தீட்டிக் கொள்ளலாம்.

---

**த. நந்தினி, கொமாரபாளையம்.**

**கேள்வி: முகத்திற்கு மேக்கப் போடும் முறைகளையும், அதற்கு வேண்டிய சாதனங்களையும் விளக்கவும்.**

பதில்: 1) முகத்தை முதலில் கழுவிக் கொள்ளவும். பிறகு உங்கள் தோல் வறண்டதாக இருந்தால் **skin freshner** — ஐப் பஞ்சில் தொட்டுக் கொண்டு முகத்திலும் கழுத்திலும் சமமாகப் பரவுமாறு துடைக்க வேண்டும். 2 **Nourishing cream** — ஐ முகம், கழுத்து ஆகிய இடங்களில் துடைத்துக் கொண்டு நன்றாக, சமமாகத் தேய்த்துக் கொள்ள வேண்டும். பிறகு ஒரு டிஸ்யூ பேப்பரினால் முகத்தில் ஒத்தி எடுத்தால் அதிகப்படியான கிரீம் வந்துவிடும். 3) உங்கள் முகத்தோல் நிறத்திற்கு ஏற்ப ஃபவுண்டேஷனை எடுத்துக் கொண்டு முகத்தில், கழுத்தில், காதில் எல்லா இடங்களிலும் சமமாகப் பரவுமாறு **Blend** செய்ய வேண்டும். 4) பிறகு சிறிதளவு பவுடர் எடுத்து லேசாக பஞ்சினால் பரவும்படி செய்து துடைக்க வேண்டும். 5) ரூஜ் — ஐ பிரஷ்ஷில் எடுத்துக் கொண்டு இரு கன்னங்களின் மேட்டுப் பகுதிகளில் லேசாகத் தடவிக் கொண்டு பரவ விடவும். 6) ஐப்ரோ பென்சிலால் புருவங்களைச் சரிசெய்துக் கொள்ளவும். ஏனென்றால் புருவங்கள் பவுடர் போன்றவை போட்டுக் கொண்டதால் நிறம் மங்கித் தெரியும். 7) ஐப்ரோ பென்சிலால் கண்களின் இமைகளின் மேல் எந்த அளவு அடர்த்தி வேண்டுமோ அந்த அடர்த்திக்குக் கோடு வரைந்துக் கொள்ளவும். பிறகு ஐ — லைனர் கொண்டு அந்தக் கோட்டின் மேலே தீட்டவும். அப்போது ஐ — லைனர் ஒரே சீராக வரும். கண்களின் உட்புறம் மை அல்லது ஐப்ரோ பென்சிலால் தீட்டிக் கொள்ளவும். 8) லிப்ஸ்டிக்கை லிப் **(lip)** பிரஷ்ஷினால் எடுத்து உதடுகளில் அவுட்லைன் வரைந்துக் கொண்டு பிறகு லிப்ஸ்டிக்கைத் தடவி உதடுகளை நன்றாக, மெதுவாக **press** செய்யவும். 9) கடைசியில் பொட்டு வைத்துக் கொள்ளவும்.

(மஸ்காரா போடும் பழக்கம் இருந்தால் ஐ — லைனர் போட்ட பின்பு போடவும். அதே போல் ஐ — ஷேடோ போடும் போதும்).

---

**ஆர். விஜயலஷ்மி, சித்தலைவாய், திருச்சி—2.**

**கேள்வி: என் முகம் எண்ணெய்ப் பசை முகம். பவுடர் போட்ட அரை மணியில் எண்ணெய் வழியும். தலையில் பொடுகு இல்லை. சுத்தமாக வைத்திருக்கிறேன். இருந்தும் தலை முடி உதிருகிறது. என் முகத்திற்கு எவ்வித க்ரீம் உபயோகப்படுத்துவது? என் மூக்கு அகலமாகவும், உதடு சற்று பெரியதாகவும் இருக்கும். எனவே தங்கள் ஆலோசனையை ஆவலுடன் எதிர் பார்க்கிறேன்.**

பதில்: தங்கள் முகம் எண்ணெய்ப் பசை உள்ளதாக இருப்பதால் தினமும் 2 அல்லது மூன்று முறை சோப்புப் போட்டு வெது வெதுப்பான நீரினால் முகத்தைக் கழுவ வேண்டும். கிரீம் எதுவும் உபயோகிக்க வேண்டியது இல்லை.

உங்கள் சருமம் எண்ணெய்ப் பசை உள்ளதாக இருப்பதால் **Skin Tonic** க்கு பதிலாக **Astringent** உபயோகப்படுத்தவும். அழகு சாதனங்கள் நல்ல தரமான கம்பெனிகள் தயாரிக்கின்றன. அவையே போதும். ரூஜ் போடும்போது மூக்கின் நடுவில் வெளிர் நிறத்திலும் மூக்குத் துவாரத்தைச் சுற்றி வெளிப்புறத்தில் அடர்த்தியாகவும் பூசலாம். உதடு பெரியதாக இருப்பதால் லிப்ஸ்டிக் போடும்போது **lip** பிரெஷ் கொண்டு உதட்டின் உட்புறமாக வெளிக்கோடு வரைந்து கொண்டு பின்பு லிப்ஸ்டிக்கைத் தடவ வேண்டும். உதட்டுச் சாயம் (லிப்ஸ்டிக்) போடும்போது காலையில் லேசான வண்ணத்தையும், மாலை, இரவு நேரங்களில் கறுத்த வண்ணமும் உபயோகிக்க வேண்டும்.

— மல்லிகா + பார்வதி

# குடும்பப் பெண்களுக்குக் கஷ்டம்தான்

ராஜீவ்காந்தி ஆட்சிக்கு வந்து 100 நாட்களாகிவிட்டன. இன்னும் பத்தாண்டுக் காலம் ஆட்சியில் இருப்பார் என்பதற்கான நம்பிக்கை அவரது செயல்முறையில் வெளிப்படுகிறது.

இந்திய நாட்டின் தீர்க்க முடியாத பிரச்னைகள் பல. தீர்க்கும் முயற்சிகளுக்கு முட்டுக்கட்டையாக இருக்கும் தடைகளும் பல. முதலில் இந்தத் தடைகளை ஒவ்வொன்றாக நீக்கி விடுவது என்ற நோக்கத்துடன் ராஜீவ் செயல்படுகிறார். இது அவருடைய யதார்த்த நோக்கையும், நிதானத்தையும் காட்டுகிறது எனலாம்.

உதாரணமாகத் தொழில், விவசாயம் ஆகிய அடிப்படைத் துறைகளின் வளர்ச்சிக்கும் நவீனப்படுத்தலுக்கும் குறுக்கே பலவிதமான கட்டுப்பாடுகள் வரிகள் இருந்தன. இவற்றைத் தளர்த்தியிருக்கிறார். 1985—86-ம் ஆண்டுக்கான பட்ஜெட்டில் காணப்படும் வரிச் சலுகைகள் தொழில் வளர்ச்சிக்கு உதவும்படியாகத் தரப்பட்டிருக்கின்றன. மூன்றாண்டுகளுக்குச் சேர்த்து ஒட்டுமொத்தமாக அறிவிக்கப்பட்டுள்ள ஏற்றுமதி—இறக்குமதிக் கொள்கை வணிகத் துறையை ஊக்குவிப்பதாக இருக்கிறது. விவசாயிகளுக்காகப் பயிர் இன்ஷூரன்ஸ் போன்ற நடவடிக்கைகள் அத்துறையில் நிலவும் பாதுகாப்பற்ற நிச்சயமின்மையைப் போக்க உதவும்.

நகரங்களில் வாழும் மத்தியதரக் குடும்பப் பெண்களைப் பொறுத்தவரை இந்த பட்ஜெட்டில் உள்ள தனிவருமான வரிச்சலுகைகள் உயர்ந்துவரும் விலைவாசிகளுக்கு ஈடுகட்டுவதற்குப் பயன்படும். ஆனால் வருமானவரி கட்டுபவர்கள் சொற்பம்தான். பெரும்பான்மைக் குடும்பங்கள் உயர்ந்துகொண்டே இருக்கும் விலைவாசிகளோடு போராட வேண்டி இருக்கும். ஆனால் தொழில் துறையில் உற்பத்தி ஓங்கினால் வருமானமும் உயர வாய்ப்புண்டு. குடும்பப் பெண்கள் பொறுத்திருப்பார்களாக.

* * * * *

பஞ்சாப் மற்றும் இலங்கைத் தமிழர் பிரச்னைகளைத் தீர்க்குமுகமாக ராஜீவ் எடுத்து வரும் நடவடிக்கைகளைக் குறைசொல்ல முடியாது. இந்தச் சூழ்நிலையில் இவ்வளவுதான் முடியும். முதலில் பொங்கும் உணர்ச்சிகளைச் சமனப்படுத்தி, ஒவ்வொரு கோரிக்கையாகப் பரிசீலித்துப் பைசல் செய்ய வேண்டும் என்பது ராஜீவ் காந்தியின் அணுகுமுறையாக இருக்கிறது. இதை வரவேற்க வேண்டும்.

* * * * *

அரசியலில் நேர்மை மீண்டும் நிலவுவதற்கான சூழ்நிலை ராஜீவ்காந்தி ஆட்சியில் ஏற்பட்டுள்ளதையும் கவனிக்க வேண்டும். எதிர்க் கட்சிகளுக்குத் தேர்தலில் அதிக வாய்ப்பு இல்லாமற்போய்விட்டாலும் அவற்றின் தலைவர்களுக்கு மதிப்புக் கொடுத்து முக்கியப் பிரச்னைகளில் அவர்களைக் கலந்தாலோசித்துச் சுமுகமான தீர்வுகளைக் கண்டு வருகிறார். கட்சித் தாவல் தடைச் சட்டம், தேர்தல்களை உரிய காலத்தில் நடத்துவது போன்றவை தேர்தல் சூழ்நிலையில் தெளிவைத் தந்து வருகின்றன. மாநிலங்களில் மாற்றுக் கட்சி ஆட்சிகளைக் கவிழ்க்கும் சதிகளை ராஜீவ் காந்தி அறவே வெறுக்கிறார் என்பது சதியில் ஈடுபடும் கட்சிக்காரர்களைக் கண்டிப்பாக ஒதுக்கி வைப்பதிலிருந்து தெரிகிறது. அந்துலே, குண்டுராவ், பாஸ்கர் ராவ் ஆகியோரின் ஆட்டங்கள் ஓய்ந்துவிட்டன.

* * * * *

விளையாட்டுத் துறையில் பெண்களின் சாதனைகள் அதிகம் கவனிக்கப்படாமலே இருக்கிறது. பத்திரிகை முதலான பிரசார சாதனங்கள் ஆண்களின் ஆதிக்கத்தில் இருப்பதே இதற்குக் காரணம் என்று சொல்லலாம்.

கிரிக்கெட் ஆட்டத்தில் புதிய தாரகையாக தோன்றியிருக்கிறார் டயானா எடுல்ஜி என்னும் 29 வயதுப் பெண். சுழல் பந்து வீச்சாளராக கிரிக்கெட் பந்தயங்களில் வெற்றிகளைக் குவித்துள்ளார். சமீபத்தில் பெண்களுக்கான கிரிக்கெட் டெஸ்டுகளில் 100 விக்கெட்டுகளை வீழ்த்திய சாதனையைச் செய்துள்ளார்.

ஆஸ்திரேலியா, இங்கிலாந்து, நியூஜிலாந்து ஆகிய நாட்டு மங்கைகளுடன் ஆடியிருக்கிறார்.

பெண்கள் கிரிக்கெட் ஆட்டத்திற்கு நல்ல எதிர்காலம் உள்ளது என்கிறார் டயானா. நகரங்களில் பெண்கள் கிரிக்கெட் கிளப்புகள் புதிது புதிதாகத் தோன்றிக் கொண்டிருக்கின்றன. பெரிய வணிக நிறுவனங்கள் பெண்கள் கிரிக்கெட் மாட்சுகளுக்கு ஆதரவு தர முன் வருகின்றன. 1969-ஆம் ஆண்டிலிருந்து கிரிக்கெட் ஆடிவரும் டயானா இதுவரை 28 டெஸ்ட்டுகளில் பங்கெடுத்திருக்கிறார். 104 விக்கெட்டுகளை வீழ்த்தி இருக்கிறார்.

— ரங்கஸ்ரீ



# இயற்கை மருத்துவம்




* பனி மற்றும் குளிர்காலங்களில் நுரையீரலில் ஈரம் சேர்ந்து கபம் கட்டிக்கொண்டு மூச்சு விடவே சிரமம் ஏற்படும். ஐஸ்கிரீம் மற்றும் சிகரெட் இவைகளைப் பயன்படுத்துவதாலும் கபம் கட்டிக் கொள்ளும். இதனைப் போக்கத் தூதுவளை இலைகளைக் கொண்டு வந்து துவையல் செய்து சாப்பிட்டால்குணம் கிடைக்கும். பகல் உணவில் இரண்டு மூன்று நாட்கள் தொடர்ந்து இதனை ரசமாகவும் செய்து சாப்பிடலாம்.

* சிலருக்குச் சிறுநீரகத்தில் அடைப்பு ஏற்பட்டுவிடும். அதோடு ஆசனத்திலும் 'கடுப்பு' இருக்கும். இதற்கு தினம் உணவில் நேந்திரங்காய் வற்றலைப் பயன்படுத்தி வந்தால்பூரண குணம் கிடைக்கும். வயிற்றில் இருக்கும் ரணங்களையும் இது குணப்படுத்த வல்லது. வாய்ப் புண் மற்றும் இரைப்பைக் கோளாறுகளையும் இது போக்குகின்றது.

* சளி பிடித்து இருமல் ஏற்பட்ட பின் சிலருக்கு உள்நாக்கு எனப்படும் தொண்டைக்கு அருகிலுள்ள சிறு நாக்கு வளர்ந்து தொண்டை அருகில் நாக்கில் லேசாக உறுத்தும். இதன் காரணமாக தொடர்ந்து இருமல்ஏற்பட்டுத்தொல்லை தரும். இரவில் தூக்கத்தையும் கெடுத்துவிடும். இதற்கு ''குருமிளகோடு'' சற்று உப்பினையும் சேர்த்துப் பொடி செய்து அந்தப் பொடியினை உள்நாக்கின் மீது வைத்து அழுத்தினால் போதும். சிறுநாக்கு (அ) உள்நாக்கு சுருங்கி இருமல் நின்றுவிடும்.

* உடலில் இரத்தம் குறைந்து, ''அனிமிக்'' என்று சொல்லப்படும் இரத்தச் சோகை நோய் உடையவர்கள் நாள்தோறும் இரவு சாப்பாட்டுக்குப் பின் ஒருபழுத்த 'விளாம் பழம்'' சாப்பிட்டு வந்தால் இரத்தச் சோகை நீங்கி இரத்த விருத்தி ஏற்படும்.

* மூல நோயை ஆபரேஷன் இன்றி குணப்படுத்த ஒரு எளிய வைத்திய முறை. இரவில் ஒரு செப்புப் பாத்திரத்தில் நீர் ஊற்றி அதில் சிவந்த நற்பவளத்தைப் போட்டு வைத்து அதிகாலையில் அந்த நீரைத் தொடர்ந்து 20 நாட்களுக்குக் குடித்துவந்தால் எப்படிப்பட்ட மூல நோயும் முற்றிலும் நீங்கும்.

* சில சமயம் உடலில் பித்தம் அதிகரிப்பதால் வாய்க் கசப்பு ஏற்படும். அதற்கு அரை டம்ளர் எலுமிச்சம்பழச் சாற்றில் சிறிது உப்பைப் போட்டுக் கரைக்கவும். பின் அதில் கொஞ்சம் இஞ்சியைத் தோல் சீவிச் சிறுசிறு துண்டுகளாக நறுக்கிப் போட்டு ஊற வைக்கவும். அதன்பின் காலை மாலை அதில் சில இஞ்சித் துண்டுகளை எடுத்துச் சாப்பிட்டால் வாய்க் கசப்பு மறையும்.

* 'பிளட் பிரஷர்' என்று சொல்லப்படும் ரத்த அழுத்த நோய்க்குத் துளசி மிக நல்ல மருந்து. துளசி இலைகளை ஒரு கைப்பிடி எடுத்து வந்து தண்ணீரில் அலசி பின் ஒரு பாத்திரத்தில் நீர்விட்டு அதனைப் போட்டு வைக்க வேண்டும். பின் இந்த நீரைத் தினமும் காலையில் ¼ டம்ளர் வீதம் குடித்து வந்தால் அது அடைபட்டிருக்கும் இரத்தக் குழாய்களை அகலப்படுத்தி இரத்த ஓட்டத்தைத் தடையின்றி ஓடச் செய்யும்.

* சில சமயம் தாய்மார்களுக்கு மார்பகத்தில் குத்தல் ஏற்பட்டுத் தொல்லை தரும். அத்திப் பட்டை அல்லது ஆலம்பட்டை கொண்டு வந்து தண்ணீரில் ஊற வைத்து இடித்துப் பிறகு அதையே மெலிதாக அரைத்து மார்பகத்தின் மீது தடவினால் குத்தல் நிற்கும். பால் கட்டிக் கொண்டாலும் கரைந்து குணமாகும்.

* குழந்தைகளுக்கு மாந்தம் வந்துவிட்டால் உடனே மாங்கொட்டைப் பருப்பினை நெருப்பிலிட்டுச் சுட்டு, சிறிது சுக்கையும் நெருப்பில் கருக்கி இரண்டினையும் சேர்த்துத் தாய்ப்பால்விட்டுக் குழைய அரைத்துக் குழந்தையின் நாக்கில் தடவ வேண்டும். மாந்தம் நீங்கும்.

* குழந்தைகள் சில சமயம் நமது அஜாக்கிரதையினால் மண்ணெண்ணெயைக் குடித்து விடுவதுண்டு. அதற்கு உடனே நிறைய பசும்பாலைக் காய்ச்சிக் குடிக்கச் செய்ய வேண்டும். உடனே பேதி ஆகும். அதில் மண்ணெண்ணெய் வெளியாகிவிடும். அல்லது உப்பைக் கரைத்தோ (அ) புளியைக் கரைத்தோ உள்ளுக்குக் கொடுத்தால் வாந்தியாகி எண்ணெய் வெளிவந்து விடும்.

* காலில் பித்த வெடிப்பு அதிகம் இருந்தால் இஞ்சிச் சாற்றையும் எலுமிச்சைச் சாற்றையும் சம அளவு கலந்து சாப்பிட்டு வந்தால் பித்தம் குறையும். இரவில் படுக்கப் போகும்போது வெடிப்பு உள்ள இடத்தில் மஞ்சளையும் வேப்பிலையையும் அரைத்துப் பத்துபோடக் குணமாகும்.



* பெண்களுக்கு உடல் உஷ்ணம் அதிகமானால் ''வெள்ளை''ப்படும். அதற்கு கசகசா 2 ஸ்பூன் எடுத்து அம்மியில் வைத்து வெண்ணெய் போல் அரைத்துப் பசும்பாலில் சர்க்கரையுடன் சேர்த்துக் தினம் காலையில் வெறும் வயிற்றில் குடிக்கக் குணம் தெரியும்.

* குழந்தைகளுக்கு வயிற்றுப் போக்கு ஏற்பட்டால் அதனை நிறுத்த ஒரு லிட்டர் தண்ணீரில் 12 டீஸ்பூன் சர்க்கரையையும் 1 ஸ்பூன் உப்பையும் கலந்து வைத்துக் கொண்டு அவ்வப்போது கொஞ்சமாக உள்ளுக்குக் கொடுத்து வந்தால் வயிற்றுப் போக்கு நிற்கும்.

* குழந்தையின் சளித் தொல்லையைப் போக்கக் கற்பூரத் தைலத்தை கழுத்து, நெஞ்சு, முதுகு ஆகிய இடங்களில் பூசினால் தொல்லை நீங்கும்.

* சில பெண்களுக்குத் தங்கள் மார்பகங்கள் வளர்ச்சி இன்றி இருக்கிறதே என்ற ஏக்கம் உண்டு. இவர்கள் மாதுளம் தோலைத் தூள் செய்து கடுகு எண்ணெயில் கலந்து காய்ச்சி மேல்பூச்சாக உபயோகித்து வந்தால் மார்பகங்கள் 15 நாட்களில் நன்கு விம்மிப் புடைத்துக் கவர்ச்சிகரமாக மாறிவிடும்.

பனாரஸ் பட்டுப்புடவைகளில் இருபுறமும் கெட்டியான ஜரிகை வேலைப்பாடமைந்த கரைகள் நெய்யப்படுகின்றன. ஆனால் புடவையைக் கொசுவி இடுப்பில் சொருகிக் கொள்ளுமிடத்தில் இந்தக் கரை நெய்யப்படுவதில்லை. இவ்வாறு செய்யும் போது, சுமார் இரண்டு மீட்டர் நீளத்திற்கு ஜரிகை இல்லாததால் புடவையின் விலையும் குறைகிறது; சொருகிக் கொள்ளும் போது வயிற்றின் மேல் தடிமனாக இல்லாமலும் இருக்கிறது. இதே முறையை நம் காஞ்சிபுரம் பட்டுப்புடவையிலும் ஏன் பின்பற்றக் கூடாது?

—சித்ரா மூர்த்தி.

* பிரசவித்தபின் கர்ப்பப் பை சுருங்க இலவங்கப்பட்டையை 35 கிராம் எடுத்து அரை லிட்டர் நீரில் இட்டுப் பாதியாகக் காய்ச்சி ஒரு அவுன்ஸ் வீதம் காலையில் மாத்திரம் கொடுத்து வந்தால் கர்ப்பப்பை சுருங்கிவிடும்.

* உற்றவயது வந்தும் பருவமடையாத பெண்களுக்குச் ''செம்பரத்தை''ப் பூவைச் சாறெடுத்து உள்ளுக்குக் கொடுத்து வந்தால் ருது ஏற்படும்.

தொகுப்பு:
''பாஞ்சசன்யன்.''

''இயற்கைமருத்துவம்'' என்றநூலிலிருந்து

### சர்க்கரை வள்ளிக் கிழங்கு போளி!

இது சர்க்கரை வள்ளிக்கிழங்கு சீஸன்.

அரைக் கிலோ கிழங்கை வாங்கி நன்றாக வேகவிட்டுத் தோலுரித்துக் கட்டியில்லாமல் உதிர்த்து வைத்துக் கொள்ளுங்கள். கால் கிலோ வெல்லத்தைக் கெட்டியாகப் பாகு வைத்து, உதிர்த்த கிழங்கு கொஞ்சம் ஏலப்பொடி சேர்த்துக் கிளறுங்கள். கெட்டியான பூரணம் ரெடி! மைதா மாவைப் பிசைந்து இந்தப் பூரணத்தை வைத்துப் போளி தட்டி எடுத்தால் ருசியாக இருக்கும். மூன்று நாட்கள் வரை கமகமவென்றிருக்கும். கெடாது!

—எஸ். உமா.



# ஏலக்காய்த் தோல் ஓவியம்



படம்—2-ல் காணப்படும் ஜப்பானிய ஆலயம் ஏலக்காய்த் தோலை ஒட்டிச் செய்யப்பட்டிருக்கிறது. 18'' அகலம், 26'' நீளம் அளவுள்ளது. படம் 2-ல் காணப்படும் பறவைகள் ஓவியம் 15'' அகலம், 22'' நீளம். இவ்வோவியம் பருப்பு வகைகள் மற்றும் உலர்ந்த விதைகளால் செய்யப்பட்டிருக்கிறது. இதுபோல சிறு பொருட்களை ஒட்டிச் செய்யப்படும் சித்திரங்களுக்கென சில பொது முறைகள் உண்டு.

முதலில் தேவையான அளவுள்ள 'ப்ளைவுட்' 'போர்டில்' அழுத்தமான நிறமுள்ள 'வெல்வெட்' பேப்பரைச் சுருக்கமில்லாமல் ஒட்டி உலர வைத்துப் படத்திற்கான 'பேக்ரௌண்டைத்' தயார் செய்து கொள்ள வேண்டும். வெல்வெட் பேப்பரை முன் புக்கம் சிறிதும் பெவிகோல் படாமல் சுத்தமாக இருக்கும்படி ஒட்ட வேண்டும். கைபட்டு அழுத்திவிட்டாலும் பளபளப்புக் குறைந்து விடும். எனவே மென்மையாகக் கையாள வேண்டும். பிறகு படத்தில் கொடுக்கப்பட்டுள்ள டிசைனை வெல்வெட் பேப்பரில் ட்ரேஸ் செய்து கொள்ள வேண்டும்.

**ஏலக்காய்த் தோல் ஓவியம்:**

தேவையான ஏலக்காய்த் தோலிற்கு வீட்டில் விசேஷங்களுக்கு உபயோகப்படுத்தும் ஏலக்காய்த் தோல்களைச் சேர்த்து வைத்துக் கொள்ளலாம். அல்லது கல்யாண வீடுகள், ஹோட்டல்களில் கேட்டு வாங்கிக் கொள்ளலாம். தோல்களை இதழ் இதழாகத் தனியாக முனை உடையாமல் பிரித்து வைத்துக் கொள்ளவும். படம் பூராவும் ஏலக்காய்த் தோலில் செய்யப்பட்டிருந்தாலும் கண்ட கண்ட இடத்தில் ஒட்டாமல் படத்தைப் பகுதி பகுதியாகப் பிரித்துக் கொண்டு நிறுத்தி ஒட்டவும். உதாரணமாக மேல் பகுதியிலிருந்து படத்தை ஒட்ட ஆரம்பித்தால் முதலில் கலசம் போன்றிருக்கும் பாகத்தை ஒவ்வொரு இதழாக ஒன்றின்கீழ் ஒன்று ஒட்டி முடித்ததும் கோபுர பகுதிகளை மேல் பகுதி, கீழ்ப்பகுதி என்று தனித்தனியாகப் பிரித்துக் கொண்டு ஒட்டவும்.

முதல்கோபுரத்தின் மேல்பகுதியில்தோல் இதழ்கள் பூராவும் சாய்வாக ஒட்டப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். அவ்விதமே சாய்வாக அந்தப் பகுதிபூராவும்முதலில்வெளிக் கோடுகளை ஒட்டி முடித்த பிறகு உட்பகுதிகளையும் ஒட்ட வேண்டும். முதல் கோபுரத்தின் அடிப்பகுதிகள் நேர் நேராக ஒட்டியிருப்பதைப் படத்தில் காணலாம்.

இவ்விதமே படம் பூராவும் இதழ்களைச் சாய்வாக உள்ள இடங்களில் சாய்வாக, நேராக உள்ள இடங்களில் நேராக, இடம் வலமாக இதழ் ஒட்டப்பட்டிருக்கும் இடங்களில் அவ்விதமே என்று படம் பூராவும் செய்து முடிக்கவும்.

பிறகு வெளிர் மஞ்சள், வெளிர் ஆரஞ்சு பெயிண்ட்டை ஏலத்தோல் பட்டத்திலிருந்து பிரிந்து வராமல் நிறுத்திப் பெயிண்ட் செய்து கொள்ளவும். இம்மாதிரி பெயிண்ட் செய்வதால் படத்தின் அழகு கூடுவதுடன் படம் நீண்ட நாட்கள் கெடாமல் இருக்கும். கடைசியாகப் படத்தின் சுற்றுப்புறங்களில் உள்ள புல், கொடி இலைகள், ஆகாயம் முதலிய

வற்றை அரிசி பெயிண்ட் மூலம் செய்து கொள்ள வேண்டும். இதற்குக் கண்ணாடி யுடன் கூடிய பிரேம் போடலாம்.

### பருப்பு வகைகளில் வண்ண ஓவியம்:

பூக்கொத்துக்கள், ஜோடிப் பறவைகள், வண்ணத்துப்பூச்சி என்று மனத்திற்குப் பிடித்த வண்ண ஓவியங்களை இந்த முறைப்படி செய்யலாம். அநேகமாக இதுபோன்ற வண்ண ஓவியங்கள் பெரிய அளவில் காலண்டரில் கிடைக்கும். இயற்கையான நிறத்தில் இவ்விதம் கிடைக்கும் ஓவியங்களையோ அல்லது கலர்ப் புகைப்படங்களையோ மாடலாக வைத்துக் கொண்டு மாடலில் எந்த எந்த வண்ணங்களைப் பார்க்கிறீர்களோ அதே வண்ணக் கலவையைப் பருப்பு வகைகள், விதைகளை ஒட்டி மாடலில் இருப்பது போன்றே எஃபக்டைக் கொண்டுவர வேண்டும்.

உதாரணமாக இந்தப் பறவைகள் ஓவியத்திற்குத் (படம் 1) தேவையான வண்ணங்களை எப்படிக் கொண்டு வருவது என்று பார்க்கலாம். கேசரிப் பருப்பு, பாசிப் பருப்பு (உடைத்தது தோல் எடுத்தது) வெள்ளை உளுத்தம் பருப்பு முதலியவைகளைக் கொண்டு ஆரஞ்சு, மஞ்சள், வெள்ளை நிறக் கலவைகளாகப் பூக்களின் இதழ்களை ஒட்டி உருவாக்க வேண்டும். மேற்கூறியபடி முதலில் கோடுகளையும் பிறகு உட்புறம் இடை வெளி இல்லாமல் நிறுத்தி ஒட்ட வேண்டும். முழுப் பாசிப் பச்சைப் பருப்பு, பச்சைநிற வெண்டை விதைகளை இலைகளுக்கு ஒட்ட வேண்டும். இவற்றின் மூலம் அழுத்தமான பச்சை, வெளிர்நிறப் பச்சை எஃபக்டை இலைகளில் கொண்டு வரலாம்.

வெள்ளை மொச்சைப் பருப்பு ஒரு பறவையின் உடலிற்கும், ஆழ்ந்த ப்ரௌன் நிற சோயா பருப்பு மற்றும் ஒரு பறவையின் உடலுக்கும் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. பறவையின் முகத்திற்கு அவரை விதைகள் உபயோகப்படுத்தப்படுகிறது. அவரை கருப்பு விதைகளின் நடுவில் வெள்ளைக் கோடுடன் அழகாக இருக்கும். இதில் வெள்ளைக் கோடு தெரியும்படி ஒரு பறவையின் தலையும், வெள்ளைக் கோடு தெரியாமல் பூராவும் கருப்பு நிறத்தில் மற்றொரு பறவையின் தலையும் செய்யப்பட்டிருப்பதைப் படத்தில் காணலாம். மொச்சைப் பருப்புப் போன்ற பெரிய பருப்பை ஒட்டும் போது பருப்பை நிமிர்த்தி வைத்து இடைவெளி விடாமல் அருகருகே ஒட்ட வேண்டும்.

படத்தின் முக்கியமான பாகமாகிய பறவைகளை சோயா, மொச்சை போன்ற பெரிய பருப்புக்களைக் கொண்டு ஒட்டி அவை தனியே புளிச்சென்று தெரியும்படி செய்ய வேண்டும். மற்ற பகுதிகளாகிய பூக்கள் காம்புகளை சிறிய பருப்புக்களைக் கொண்டு செய்வதால் முப்பரிமாண எஃபக்டையும் ஓரளவு கொண்டு வரலாம். பறவையின் மூக்கு, கண்கள், உடம்பு, இறகுகளை வடிவம் கெடாமல் கோடுகளை முதலில் ஒட்டிக் கொண்டு செய்ய வேண்டும். பெவிகோல் தடவி ஒட்டுவதால் அந்த வாசனைக்குப் பூச்சி அரிக்காமல் இருக்கும். எனவே கண்ணாடி இல்லாமல் வெறும் பிரேமே போடலாம்.

மாதங்கி சுந்தரராஜன்



தோசை, இட்லி, கொழுக்கட்டை, சப்பாத்தி இவைகளைச் சூடு ஆருமல் மூடி வைத்தால் வேர்த்து விட்டு ஊசல் நாற்றம் வரும். திறந்து வைத்தாலோ, வற வறத்துப் போகும். மெல்லிய வெள்ளைத் துணியை தண்ணீரில் நனைத்து ஒட்டப் பிழிந்து பலகாரம் (தோசை (அல்) இட்லி) மீது மூடவும். இப்போது மிருதுத் தன்மை குறையாது. ஊசல் வாடை, வற வறப்பு இரண்டும் ஏற்படாது

— கனகவல்லி.

### மேஷம்



இந்த மாதம் உடல்நிலை பற்றித் தீவிரமாகக் கவனம் செலுத்துவது நல்லது. உஷ்ண சம்பந்தமான பாதிப்புக்கள் ஏற்படலாம். சிலருக்கு வெளியூர்ப் பிரயாணங்கள் செல்ல வேண்டிய கட்டாயமும் ஏற்படலாம். நெருங்கிய உறவினர் ஒருவரின் மூலமாக மகிழ்ச்சியான செய்தி கிடைப்பதுடன், புதிய உறவுகளும் ஏற்பட வாய்ப்புண்டு. பொருளாதார நிலை சீரானதாகவே இருக்கும். குழந்தைகளின் காரணமாகச் செலவினங்கள் அதிகரிக்கும்.

### ரிஷபம்



தெய்வ சம்பந்தமான ஒருவர் உங்கள் வாழ்க்கையில் அறிமுகமாகி, அதனால் எதிர்பாராத தீர்மானங்களை எடுக்க வேண்டியதாக இருக்கும். நிதானத்துடனும், தீர ஆலோசித்தும் காரியங்களைச் செய்வீர்களேயானால் ஒளிமயமான எதிர்காலம் உண்டாகும். கைத்தொழில் சம்பந்தப்பட்ட தொழிலை மேற்கொண்டவர்களுக்குப் பொது ஜனங்களிடையே புகழும், பொருள்வரவும் உண்டாகும்.

### மிதுனம்



கடந்த சில நாட்களாக மனநிம்மதி இல்லாமல் இருந்த நிலைமை மாறி ஓரளவு ஸ்திரமான வாழ்க்கை உண்டாகும். புனிதப் பயணம் ஒன்று ஏற்படுவதால் மனசாந்தி ஏற்பட்டுப் புத்துணர்வும் புதிய லட்சியங்களும் ஏற்படும். பண விஷயத்தில் கடினமான நிலைமை இருக்காது. செலவை விட வரவு அதிகமாகவே இருக்கும். மாத இறுதியில் தனலாபம் ஏற்படவும் வாய்ப்புண்டு.

### கடகம்



குடும்பச் சூழ்நிலையில் இருந்து வந்த மனவேறுபாடுகளும், சண்டை சச்சரவுகளும் நிதானப்பட்டு, மாத நடுவில் அமைதியான நிலைமைக்கு வந்துவிடும். இம்மாதம் கடன் தொல்லைகள் ஓரளவு அதிகமாகவே இருக்கும். செலவை மிகவும் கட்டுப்படுத்தி வைத்துக் கொள்ளுதல் நல்லது. குடும்பத்தாரின் ஒத்துழைப்பால் சிக்கலான நிலைமை வெகு விரைவில் சீர்ப்பட்டுவிடும். சிலருக்கு வெளியூர்ப் பிரயாணங்களும் ஏற்படும்.

### சிம்மம்



இம்மாதம் பிரகாசமான எதிர்காலத்தைத் தரக்கூடிய மாதமாகவே இருக்கும். சமூகத்தில் புகழ்பெற்ற பிரமுகர்களைச் சந்திக்கும் வாய்ப்பு எதிர்பாராமல் கிடைக்கும். கலைத்துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு அரசாங்க விருதுகள் கிடைக்கக் கூடும். நீண்ட நாளாக எதிர்பார்த்து இருந்த நல்ல செய்தி வெளிநாட்டிலிருந்து வந்தடையும். குழந்தைகளின் காரணமாக உல்லாசப் பிரயாணங்களை மேற்கொள்வீர்கள்.

# ராசிபலன் மே '85

## கன்னி



ஓரளவு அலைச்சல் மிகுந்த வாரமாகவே இம்மாதம் இருந்தாலும், எதிர்பார்த்த லாபமும் தனியார்த் துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்குக் கிடைத்துவிடும். வீட்டில் சுபநிகழ்ச்சிகள் உண்டாவதுடன் தெய்வ காரியங்களுக்காகப் பணச் செலவும் ஏற்படும். திருமணத்தை எதிர்நோக்கி இருப்பவர்களுக்கு நல்ல வரன்கள் அமையும். பொருளாதார நிலைமை நன்றாகவே இருக்கும்.

## துலாம்



விசேஷங்கள் எதுவுமில்லாது அன்றாடக் கடமைகள் மிகுந்த மாதமாகவே இம்மாதம் விளங்கும். வரவுக்கேற்ற செலவு என்ற நிலைமையிலேயே செல்லும். புதிய தொழில்களைத் திட்டமிடுபவர்கள் தகுந்த ஆலோசகர்களின் கூட்டுறவுடன் செயலைத் தொடங்குவது நல்லது. அனாவசியமான விவாதங்களில் ஈடுபடாமல் அலுவலகத்திலும், குடும்பத்திலும் ஒதுங்கி இருப்பதே நல்லது.

## விருச்சிகம்



அரசாங்க வேலையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு மேலதிகாரிகளின் பரிவு கிட்டுவதுடன், சிலருக்கு விரும்பிய வெளியூர் மாற்றங்களும் கிடைக்கும். வீடு, மனை வாங்க முயற்சி செய்பவர்கள் இரண்டாம் வாரத்தில் முயற்சிகளைத் தொடங்குவீர்களானால், விரைவில் நல்ல விளைவுகள் கூடி வரும். கலைத்துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு எதிர்பாராமல் சந்திக்க இருக்கும் பிரமுகரால் நல்ல அதிர்ஷ்டமொன்று காத்திருக்கிறது.

## தனுசு



கோர்ட் வழக்கில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு சமரச முயற்சிகள் ஏற்படும் நிலைமை வருவதுடன், கூடிய விரைவில் சுமுகமான விளைவுகளும் உண்டாகும். அதிகமான பணவிரயம் என்ற நிலைமை மாறிச் செலவுகள் கட்டுப்பாட்டிற்குள் வந்துவிடும். உறவினர் ஒருவரின் முயற்சியால் குழந்தைகளுக்கு நல்ல எதிர்காலம் ஏற்படும். சிரமப்பட்டு வந்த நாட்கள் மாறி அமைதியான வாழ்க்கைக்குத் திரும்பும் நாட்கள் இவை.

## மகரம்



தனியார்த் துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு யோகமான காலமிது. நீண்ட தூரப் பிரயாணங்களும், அதனால் உங்களுடைய லட்சியத்தை விரைவில் அடையும் மாற்றங்களும் உண்டாகும். பண விஷயத்தில் எந்த விதச் சிரமமும் இருக்காது. குடும்பத்தாரின் எதிர்பாராத ஒத்துழைப்பின் காரணமாக மிக விரைவில் வளமான எதிர்காலத்தைக் காண்பீர்கள். குழந்தைகளினால் இல்லத்தில் மகிழ்ச்சி நிலவும்.

## கும்பம்



நீண்ட நாட்களாக நீங்கள் திட்டமிட்டு வந்த காரியத்தை நிறைவேற்றச் சரியான நாட்களிவை. கூட்டுசேர விரும்பும் நண்பர்களை மிகவும் ஆராய்ந்து பார்ப்பது நல்லது. கூடியவரை தனியாகவே லட்சியத்தை அடைய முற்படுவதே சிறந்த பலனைக் கொடுக்கும். வாக்குறுதிகளைக் கொடுக்கும் போது யோசித்துக் கொடுங்கள். அதனால் குடும்பத்தாரிடையே விரிசல் ஏற்படுவதுடன் எதிர்காலத்திற்குப் பகையாகவும் முடியும்.

## மீனம்



கணவன் மனைவி உறவில் சுமுகமான நிலைமை உண்டாகும். மற்றவர்களின் மனசஞ்சலம் தூண்டப்பட்டு வருத்தப்பட்ட நாட்களைக் கடந்து அமைதியான வாழ்க்கைக்குத் திரும்புவீர்கள். திருமணம் ஆகாதவர்களுக்கு இனிய அந்தரங்கமான நட்பு ஒன்று ஏற்பட வாய்ப்புண்டு. அதனால் வாழ்க்கையில் பல பிரச்னைகள் ஏற்படுமானாலும் முடிவு உங்களுக்குச் சாதகமாகவே அமையும்.

## வீட்டுக்கு வீடு வரவேற்கப்படுவது சாந்தா



# சாந்தா

## டில்ட்டிங் வெட் கிரைண்டர்







கிரைண்டை சாய்த்து கைபடாமல்
மாவை எடுக்க வசதி உள்ளது.
அரவை செய்யும் கீழ்பகுதியும் மேல்
பகுதியும் சேர்ந்து சுழல்வதால்
தேய்மானம் இல்லை. உட்பாகங்களை
துப்புரவாக கழுவ வசதி உள்ளது.
உட்பாகங்கள் எவர்சில்வரினாலானது.
சப்தமில்லாத ஓட்டம்
அதிக சுகாதாரம், குறைந்த எடை
மின் செலவு குறைவு

அளவுகள் : $\frac{1}{4}$ லி முதல் 1 லி
$\frac{1}{2}$ லி முதல் 2 லிட்டர்கள்
மற்றும் 1 லி முதல் 5 லிட்டர்கள்

**சாந்தா இண்டஸ்ட்ரியல்ஸ்**
158, அவிநாசி ரோடு,
பீளமேடு, கோயமுத்தூர்-641 004
போன் : 32429

SASI/SI/13/T

* திருமணமான இளம்பெண்களைத்தான் வரதட்சணைக்காகக் கொடுமைப்படுத்துகிறார்கள் என்று எண்ணியிருந்ததற்கு மாறாக, இரண்டு பெண்களையும், இரண்டு பையன்களையும் பெற்றெடுத்த அந்தப் புண்ணியவதிக்கு ஏற்பட்டுள்ள நிலையைக் காணும்போது என்னே மனித ஜன்மம் என்ற ஒரு 'வித வெறுப்புதான் உண்டாகிறது.
என். பாலகிருஷ்ணன். கோவை—43.

* 'இவர் ஒரு முன்னோடி' என்ற உண்மைக் கதையில் குறிப்பிட்டு இருக்கும்படி 'மூல' நட்சத்திரப் மாமியாரை மூலையில் தள்ளி விடும் என்ற கருத்து உண்மையானதுதான். ஆனால் இது பெண்தான் 'மூல' நட்சத்திரமாக இருக்கக் கூடாது. ஆண் மூலம் அரசாளும் என்பதே உண்மை. எப்படி இருந்தாலும் மாமா, அத்தை உறவுகளுக்குள் திருமணம் என்றால் பொருத்தம் பார்க்காமலே செய்யலாம் என்று சொல்கிறார்கள். பாவம், அந்தப் பெண்மணிக்கு அது தெரியாதோ!
எஸ். முத்துலக்ஷ்மி. சென்னை—49.

* கேரள நாட்டின் பழம்பெரும் கலையான, ''கதகளி''யைப் பற்றிப் பல, சிறப்பான, சுவையான தகவல்களைத் தந்த கட்டுரை அருமையாக இருந்தது!
ஆர். கோவிந்தகுமார். நீடாமங்கலம்.

* ''இளசுகளின் திருமணமே இன்று அரிதாய் இருக்கும்போது — கமலாவுக்கு அறுபதாம் கல்யாணம் நடத்தி வைத்த கோகிலா ராமன் (கமலாவுக்குக் கல்யாணம்) பாராட்டுக்குரியவர்.
க. கண்ணன். மதுரை—19.

* கோடை வெயிலில் வெறும் தண்ணீரை நாங்கள் குடித்துக் கொண்டிருக்க, நீங்கள், மிகவும் எளிதான முறையில் தந்த ''கோடை ஸ்பெஷல்'' அருமையான முறையில் இருந்தது. படித்தபோதே குடித்த மாதிரி இருந்தது.
ஆர். ஆனந்தி. கும்பகோணம்.

* 'வயது ஒரு தடையா?' என்ற கட்டுரையின் மூலம் பெண்களின் திறமையின் மதிப்பை

# சொல்ல விரும்புகிறோம்

உணர வேண்டும். எத்தனையோ பெண்கள் வயதின் காரணமாக முடங்கியிருக்கிறார்கள். கட்டுரை ஆசிரியை உஷா சுப்பிரமணியம் அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டு சென்றால் பி.ஏ., எம்.ஏ. படித்துவிட்டு வீட்டில் இருக்கும் சகோதரிகள் பயனடைவோம். வயது வரம்பை உயர்த்தி எங்களின் திறமையைக் காட்ட அரசு சந்தர்ப்பம் அளிக்க வேண்டும். தக்க சமயத்தில் பயனுள்ள கட்டுரையாக அமைந்தது.
ரா. கவிதா. மன்னார்குடி.

எண்ணெய் விலை ஆகாயம் அளவுக்கு போய் விட்டது. கோடைக் காலத்தில் குடிப்பதற்குக் கூடத் தண்ணீர் கிடைக்குமா என்பது சந்தேகம். இந்த நிலையில் ''எண்ணெய்க் குளியலால் பயனுண்டா?'' கட்டுரை உண்மையிலேயே வயிற்றெரிச்சலைத்தான் கிளப்பியது.
குமரி ராஜ். சென்னை—5.

* சிறு வயது முதல் வாரம் தவறாமல் எண்ணெய் தேய்த்துக் குளித்து வந்த நான் கடந்த இரண்டு ஆண்டுக் காலமாகச் சோம்பேறித்தனத்தின் காரணமாக நிறுத்திவிட்டேன். மங்கையர் மலரில் ''எண்ணெய்க் குளியலால் பயனுண்டா?'' கட்டுரையைப் படித்தது முதல் மீண்டும் எண்ணெய் தேய்த்துக் குளிக்கத் துவங்கிவிட்டேன்.
இரா. சுவாமிநாதன். சீர்காழி.

* கொண்டை 85 வெகு ஜோர். என் தோழிக்குப் போட்டுவிட்டேன். இவளா என் தோழி என்றிருந்தது. அந்தளவு அழகாகி விட்டாள்!
மா. வை. கலைவேணி. மயிலாடுதுறை.

* உலையே உயிருக்கு உலையா நமக்குள்ளே ஒரு கடிதம் மிக அருமையான கடிதம். மங்கையர்க்குத் தேவையான தகவல்கள் வெளியிட்டதற்கு நன்றி.
எஸ். பிரபா. காரைக்குடி.

* கருவும் உறவும் ஆபாசக் கலப்பில்லாமல், மருத்துவ ரீதியில் கூறப்பட்ட யோசனையாக இருந்தது. சிந்தித்துச் செயல்படும் விதமாக வரவேற்கத்தக்க மருத்துவ ஆலோசனை அது!
எஸ். கணேசன். திருநெல்வேலி—7

# அன்பெனும் விதைகள்...

குறுநாவல்

வித்யா சுப்ரமண்யம்

வாசலில் டாக்ஸி வந்து நின்ற சப்தம் கேட்டு ஆவலுடன் எட்டிப் பார்த்தாள் சாவித்திரி.

"வாங்க அத்தை வாங்க! வா சுதா சௌக்கியமா எல்லாரும்?" மனம் நிறைய வரவேற்றாள்.

சப்தம் கேட்டுக் கல்யாணியும் எட்டிப் பார்த்தாள். நாத்தனாரும் அவள் பிள்ளை, மாட்டுப் பெண் குழந்தைகளும் வந்திருக்கிறார்கள் என்று தெரிந்ததும் காரியங்களை அப்படியே போட்டுவிட்டு வரவேற்க வந்தாள்.

"என்ன மாமி லெட்டரே போடாம திடுதிப்புனு வந்துட்டோம்னு திகைச்சுப்போயிட்டீங்களா? என்ன பண்ண? திடீர்னு லீவு கிடைச்சுது. கிளம்பி வந்துட்டோம்" என்று விஷுரித்தான் ரமேஷ்.

விசாரிப்புகள் நடந்து கொண்டிருக்கும் போதே வந்தவர்களுக்காக காப்பிக்குத் தண்ணீர் வைத்துவிட்டு அவர்களுக்கு இரவுச் சாப்பாட்டுக்காக அரிசி களைந்து குக்கரில் வைத்து மறுதினத்துக்காக நறுக்கி வைத்திருந்த காய்கறிகளையும் வேகப் போட்டாள் சாவித்திரி.

அத்தனையும் ஒன்றுவிடாமல் கவனித்த அத்தை அம்புஜம், 'அடடா, என்ன சமத்து' என்று வியந்தாள். அதோடு நில்லாமல் கல்யாணியிடமே, "பரவால்லயே உன் மாட்டுப் பொண்ணு படு சமர்த்தாக் காரியம் செய்கிறாளே!" என்று மெச்சினாள். அதைக் கண்டு சுதாவின் முகம் சுருங்கியது.

"ஆமாமாம். சாவித்திரி வேலைக்குக் கேக்கணுமா? மகா சமர்த்து. இறக்கை கட்டிண்டு பறி சமர்த்தாக் காரியம் பண்ணுவா நிமிஷமா!" என்று மாட்டுப் பெண்ணைப் பற்றிப் பெருமையாகச் சொல்லிக் கொண்டாள் கல்யாணி.

கல்யாணியையும் சாவித்திரியையும் பார்ப்பவர்கள் அவர்களை மாமியார், மாட்டுப் பெண் என்று ஒப்புக் கொள்ளவே மாட்டார்கள். ஒருவருக்கொருவர் அவ்வளவு அன்புடன் பழகினார்கள். அவர்களைத் தெரிந்த அனைவருமே இவர்களின் இந்த அந்நியோன்னியம் கண்டு ஆச்சரியப்பட்டார்கள்!

அன்று இரவு ரமேஷ் மனைவியிடம் சிசுத்தான். "பார்த்தாயா சுதா! ரெண்டு பேரும் எவ்வளோ ஒத்துமையா இருக்காங்க. மாட்டுப் பொண்ணை மெச்சிக்கற மாமியாரும் இருக்கான்னு அப்போ அந்த மாட்டுப் பொண் எவ்வளோ நல்ல மாதிரியா அவளைக் கோணும நடந்துப்பான்னு நீயே யோசி" என்றான்.

"ஆமாமா! நான் மட்டும் என்ன உங்கம்மாவைப் பாடாப் படுத்தறேனா என்ன? அவளுக்கு என்னமோ என்னைக் கண்டாலே ஆகலே. ஆரம்பத்துலேர்ந்தே கரிச்சுக் கொட்டறா. அதுக்கு நா என்ன பண்ணட்டும்? நா மட்டும் வீட்டுக் காரியம் பண்றதில்லையா என்ன? எதப் பண்ணினாலும் குத்தம் குறை சொல்லிக்கிட்டிருந்தா யாருக்குப் பிடிக்கும்? இந்த மாதிரி மாமியார் எனக்கு வாய்ச்சிருந்தா இவளை விட நல்ல பேர் தான் நானும் வாங்கி இருப்பேன். சாயங்காலம் நீங்களே பார்த்தீங்களே! அவங்ககிட்டே உன் மாட்டுப் பொண் ரொம்ப சமத்துன்னு சொல்லிக்கிட்டே எப்படி என்னை எரிச்சலோடப் பார்த்தா மட்டம் தட்டறா மாதிரி! இதெல்லாம்தான் எனக்குப் பிடிக்கலே" படபடப்பாகப் பேசிவிட்டாலும் சுதாவுக்கும் அவர்கள் சுமுகம் வியப்பாய்த்தான் இருந்தது. அந்த ஒற்றுமையின் பக்கபலம் என்னவாய் இருக்கும் என்று அவளும் யோசித்தாள். மறுநாள் முதல் அவர்களின் ஒவ்வொரு நடவடிக்கையையும் ஊன்றிக் கவனித்தாள்.

"என்ன கல்யாணி, காலையில சமையல் மாட்டுப் பொண்ணோடதாக்கும்" என்று அம்புஜம் வம்புக்கு உட்கார்ந்தாள்.

"ஆமாம் அத்தை! ராத்திரி சமைக்கத் தான் அம்மா என்னை விடறதேயில்லே. பகல்லயும் அவங்களே சமைச்சா எங்கேர்ந்து ரெஸ்ட் கிடைக்கும்? பகல் பூரா கொழந்தை

களோட வேற போராட வேண்டியிருக்கு. அதான் கார்த்தால நான்தான் சமைப்பேன். நீங்க பக்கத்துலேயே வரக்கூடாதுன்னுக் கண்டிப்பாச் சொல்லியிருக்கேன்'' தானே முன் வந்து பதிலளித்தாள் சாவித்திரி.

''அதுசரி, பகல் முழுக்க ஆபீஸ்ல கைவலிக்க, மார் வலிக்க டைப் பண்ணிட்டு வரா அவளும்தான்! களைச்சு வந்துட்டு மறுபடியும் விட்டுக் காரியம் பண்ணினா உத்தியோகம் பார்க்கற பொண்ணுக்கு உடம்பு என்னத்துக்காகும்? அதனாலதான் காப்பி டிபனைச் சாப்பிட்டுட்டுப் பேசாம ரெஸ்ட் எடுத்துக்கோ, ராத்திரி சமையலை நானே பார்த்துக்கறேன்னு நானும் கண்டிப்பாச் சொல்லிட்டேன்'' என்றாள் அம்புஜம் விட்டுக் கொடுக்காமல்.

அவர்கள் பேச்சைக் கேட்டு ஆச்சரியப்பட்டாள் சுதா. இருவரும் ஒருவருடைய கஷ்டத்தை ஒருவர் புரிந்து கொண்டு எப்படி விட்டுக் கொடுத்துக் காரியத்தைப் பகிர்ந்து கொள்கிறார்கள் என்று வியந்தாள்.

காலை ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து சமைத்து, மத்தியான டிபனுக்கும் அரைத்து கரைத்து வைத்துவிட்டு, துணி தோய்த்துப் போட்டுவிட்டு ஆபீஸுக்குக் கிளம்புகிறாள், சாவித்திரி.

கொத்துக் கடலையை (கொண்டக் கடலை) சமையலில் சேர்ப்பதற்கு முன் தினமே ஊற வைக்க மறந்து விட்டால் கவலையில்லை. கடலையை எண்ணெய் விடாமல் நன்கு வறுத்து குக்கரில் வேக வைத்தால் நன்றாக வெந்து விடும்.

ஒரு நாளாவது நாம் இப்படி ஐந்து மணிக்கு எழுந்திருக்கிறோமா என்று நினைத்தாள். ஆறரை மணிக்குக் குறையாமல் எழுந்திருக்க முடியாது அவளால். இரவு வெகு நேரம் பத்திரிகைகள் படிப்பதால் இந்த லேட் விடியல்! அதற்குள் வேலையாகாமல் மாமியார் எரிச்சலுடன் முனக ஆரம்பிப்பாள். புகச்சென்று இவளுக்குக் கோபம் வரும். ஆக தினமும் சண்டைகளே பூபாள மலரும் நாட்களை நினைத்தால் இப்போது வெட்கமாக இருந்தது அவளுக்கு. சீக்கிரம் எழுந்திருந்தால் வேலைகளும் விரைவாக முடிய சற்று ஓய்வும் எடுத்துச் செல்ல வாய்ப்பிருக்கும் என்பதைப் புரிந்துகொண்டாள்.

மாலை அனைவரையும் பக்கத்திலிருந்த அம்மன் கோவிலுக்கு அழைத்துச் சென்றாள் அம்புஜம். கோவிலில் ஏதோ காலட்சேபம் நடந்து கொண்டிருந்தது. பெரியவர்கள் இருவரும் உற்சாகமாக உட்கார்ந்து விட்டனர். குழந்தைகள் படுத்தவே சிறிது நேரம் இருந்துவிட்டுச் சுதா மட்டும் கிளம்பிவிட்டாள்.

வாசற்கதவைத் திறந்து கொண்டு ரேழி வரை வந்தவள் பேச்சுக் குரல் கேட்கவே தயங்கி நின்றாள்.

''இதோ பாருங்க, அம்மாவா வாயைத் தொறந்து தனக்கு இது வேணும்னு கேக்கவே மாட்டா. அதுக்காக நாமளும் பேசாம இருக்க முடியுமா? தினப்படி கட்டிக்கற புடவை எல்லாம் நஞ்சிப் போக ஆரம்பிச்சாச்சு. இருக்கற ரெண்டு பட்டுப் புடவையும் ரொம்பப் பழசாயாச்சு. எங்காவது போகணும்னா பாவம் நல்லதா புடவையே கிடையாது. கண்டிப்பா இந்த வாட்டி ஒரு பட்டுப்புடவையும் ரெண்டு கோடம்பாக்கம் புடவையும் எடுத்தே ஆகணும்.''

''என்ன சாவி இது! நிலமை புரியாம பேசறியே பட்டுப்புடவையும் ரெண்டு தினப்படிப் புடவையும் எடுக்கற அளவுக்குப் பணம் எங்க இருக்கு? மத்தவங்களுக்கும் எடுக்க வேண்டாமா? ஏதாவும் ஒண்ணு இப்போ எடுப்போம். அப்புறம் பணம் புரளும் போது மத்ததைப் பார்த்துப்போம்.''

''அதெல்லாம் முடியாது. எனக்கு வேணா புடவை வேணாம். ஏகப்பட்ட புடவை இருக்கு எங்கிட்ட. சாஸ்திரத்துக்கு அம்பது ரூபால ஒரு காட்டன் சாரி எடுத்துக்கறேன். நா வேணா ஆபீஸ்ல கொஞ்சம் லோன் போடறேன். எப்படியாவும் நீங்க வாங்கித்தான் ஆகணும்'' பிடிவாதம் பிடித்து அவனைச் சம்மதிக்க வைத்தாள் சாவித்திரி.

மனசு குத்த அப்படியே நின்றுவிட்டாள் சுதா. வருடத்திற்கொரு முறை இரண்டு... அது கூட ஆர்ட் சில்க் புடவைதான் மாமியாருக்குக் கணவனை எடுத்துக் கொடுக்க அனுமதிப்பாள். தேவேந்திரா புடவை நல்லாயிருக்காம் என்று எத்தனையோ முறை நாசூக்காய்த் தன் விருப்பத்தை அவள் சொன்ன போது கூட அதெல்லாம் ஏகப்பட்ட விலை என்று நிர்த்தாட்சண்யமாய்க் கூறி மறுத்திருக்கிறாள். ஆனால் தனக்கு மட்டும் ஷிபான் என்ன டெக்ஸரைஸ்ட் என்று எப்படி எடுத்துக் கொள்வாள். அவற்றை இப்போது நினைத்துப் பார்த்தால் அவமானமாக இருந்தது அவளுக்கு.

இரவுச் சாப்பாட்டின் போது காலட்சேபம் கேட்டதன் தொடராக அந்த ஊர் அப்படி, அந்தக் கோவில் அப்படி என்று அம்புஜமும், கல்யாணியும் பேசிக் கொண்டிருக்கும் போது கல்யாணி எதேச்சையாய்,

''ஒருதரம் பாரேன், என்னமோ பேச்சுல கும்பகோணம் பார்த்ததே இல்லேன்னு சொன்னாலும் சொன்னேன், சாவித்திரிக்குத் தாங்கலை. உடனே அவனை அரிச்சுப் பிடுங்கி மறு மாசமே கும்பகோணத்துக்குக் கூட்டிக் கிட்டுப் போக வெச்சுட்டா! அப்புறம் தான்

# தேநீரும் விருந்தோம்பலும் ஸாகர் ஸ்கிம் மில்க்கும்

உங்கள் இல்லத்திற்கு வருகை தரும் நண்பருக்கு முதலில் வழங்குவது எது? நல்வரவு என்று சொல்லும் புன்னகையும் நல்லதொரு கோப்பை தேநீரும் தானே! அது வழி வழியாய் வரும் உங்களுடைய கலாசாரத்தின் பிரதிபலிப்பு.

இம்மாதிரி சமயங்களில் பால்பாட்டில் காலியான பரிதவிக்கும் நிலையில் நீங்கள் இருந்தால்? உடன் புதிய பால் கிட்டாத நிலையாகுமோ?

ஸாகர் ஸ்கிம் மில்க் பவுடர் உங்கள் பாரம்பரிய விருந்தோம்பலை நீங்கள் பேண உதவுகிறது. சிக்கனமாக, விரைவாக, எளிதாக. இனிப்புகளுக்கும் புட்டிங்குகளுக்கும் இது ஈடு இணையற்றது.

புதிய மணங்கவரும் பேக்கில்




ASP/SMP/5/84R

# ஸாகர்
## ஸ்கிம் மில்க் பவுடர்

**கொழுப்பு இல்லாத பாலின் உன்னதமான குணங்கள் உண்டே இதில்.**



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத்.

நிம்மதியாத் தூங்கிறு.''

''அப்டியா?'' என்று வாயைப் பிளந்த அம்புஜத்தைப் பரிதாபமாகப் பார்த்தாள் சுதா. பாவம், இவளும்தான், ''காஞ்சிபுரம் பார்த்ததேயில்லே. ஏகப்பட்ட கோவிலாமே. அங்க பெரியவா வேற இருக்காங்களே'' என்று எத்தனை முறை பூடகமாய்த் தன் ஆசையைச் சொல்லி இருக்கிறாள். மெட்ராஸிலேயே இருந்து கொண்டு கூட அவளை அழைத்துச் சென்றதில்லே. ''சும்மா வேற வேலே கிடையாது உங்கம்மாக்கு. செலவு வெக்கணும்னே எங்கயானம் கிளம்பத் துடிப்பா'' என்று எப்படி வெடுக்கென்று பேசி வேதனைப்படுத்தி இருக்கிறாள். அவளுக்குக் கஷ்டமாக இருந்தது.

அப்போது குமார் தன் நண்பர்கள் சிலருடன் வந்தான். அந்த நேரத்திலும் வற்புறுத்தி அவர்களைக் காப்பி சாப்பிட வைத்து ஆளுக்குக் கொஞ்சம் பட்சணமும் கொடுத்து உபசரித்தாள் சாவித்திரி. அந்த நண்பர்கள் கூட தமாஷாய்,

''டேய், படவா உன் பாடு ஜாலிதான் போ! ஒய்ஃபுக்கும் மதருக்கும் ரொம்ப ஒத்துமை. ஒரு ப்ராப்ளம் கிடையாது. எங்க வீட்டை எடுத்துக்கோ. தினம் குருக்ஷேத்திரம்தான். ஒரு சாமான் ஒற்றை எண்ணிக்கையில் வாங்க முடியாது. எல்லாம் ரெண்டு ரெண்டா வாங்கினாத்தான் நம்ம தலை தப்பும். இவளுக்கு வாங்கின அவ மூஞ்சியைத் தூக்கி வச்சுப்பா. அவளுக்கு வாங்கின இவ மூஞ்சி அறுந்து தொங்கும். ஏண்டா கல்யாணம் பண்ணிண்டோம்னு ஆய்டும்'' என்றனர்.

வாஸ்தவம்தான். ஒருநாள் எதேச்சையாய் நன்றாக இருந்தது, சீப்பாகக் கிடைத்ததென்று ஒரு அழகான ஒயர் கூடை வாங்கி வந்து, 'உனக்கு வெச்சுக்கோ'ன்னு தாயிடம் ரமேஷ் கொடுத்த போது இரவு எப்படி அவனுடன் சண்டை போட்டாள்! அந்த சின்ன சாமானுக்காக! மறுநாள் அவனைத் தேடி வந்த நண்பர்களுக்குக் காப்பி கூட கலக்க மறுத்து ''உங்கம்மாவையே கலந்து தரச் சொல்லுங்க'' என்று எப்படி எடுத்தெறிந்து பேசி அவமானப்படுத்தினாள்! தன் தவறுகள் அவளை உறுத்தின.

அவளுக்கு மட்டுமா உறுத்தல்! அம்புஜத்திற்கும் கூடத்தான்.

ஆபீஸ் கிளம்பும்போது சமயத்திற்கு அறுந்துவிட்ட செருப்புக்கு அவசரமாய் ஒரு பின்னைப் போட்டுக் கொண்டு ஓடின சாவித்திரிக்காகப் பிள்ளையிடம் சண்டைக்குப் போனாள் கல்யாணி.

''நானும் ஒரு வாரமா பார்க்கறேன். அறுந்த செருப்பையே தெச்சுத் தெச்சுப் போட்டுண்டுப் போறா. அவளா புதுச் செருப்பு வாங்கிக்க மாட்டான்னு தெரியாதா உனக்கு? தினம் எவ்வளோ தூரம் பஸ் ஸ்டாண்டுக்கு நடக்க வேண்டியிருக்கு. நீயானும் நல்லதா அவளுக்குச் செருப்பு வாங்கக் கூடாதோ? நீதானே அவளுக்கு ஏது வேணும்னுப் பார்த்து வாங்கிக் குடுக்கணும்?''

அவள் பேசப் பேசத் திகைத்துவிட்டாள் அம்புஜம். எத்தனை நாள் அறுந்த செருப்பைப் பையில் போட்டுக் கொண்டு வெறுங் காலுடன் வீட்டிற்கு வந்திருப்பாள் சுதா. அப்பொழுதெல்லாம் நன்றாக வேண்டும் என்றல்லவா நினைப்பேன்! அவள் கூடத் தான் கணவன் சம்மதமில்லாமல் எதுவும் வாங்கிக் கொள்ள மாட்டாள். ஒரு நாளாவது அவளுக்குப் பரிந்து போயிருப்போமா? முதன்முறையாய் மாட்டுப்பெண்ணுக்காகப் பரிதாபப்பட்டாள் அம்புஜம். அதுமட்டுமா, வெளியில் போய்விட்டு வரும்போதெல்லாம் வளையல்கள், உள் பாவாடை, ரவிக்கைத்துணி, என்று ஆசையுடன் சாவித்திரிக்கு வாங்கி வந்த கல்யாணியைப் பார்த்து வெட்கப் பட்டாள். இன்று வரை அந்தப் பொண்ணுக்கு நா என்ன செஞ்சிருக்கேன். மசக்கை சமயத்துல கூட வாய்க்கு ருசியா எதுவும் வாங்கிக் கொடுத்ததில்லையே என்று வேதனைப்பட்டாள்.

✿ ✿ ✿ ✿ ✿

**நகச் சுற்று நீங்க**

சிறிது மருதாணி இலைகளுடன், சிறிது படிகார உப்பைச் சேர்த்து விழுது போல அம்மியில் அரைத்து எந்த நகத்தில் நகச் சுற்று இருக்கிறதோ அந்த நகத்தில் இரவில், மருதாணி இடுவது போல் இட்டுக் கொண்டு காலையில் எடுத்தால் நகச் சுற்று சுத்தமாக நீங்கி விடும்.

— பத்மினி

ஆபீஸ் முடிந்து வீட்டிற்கு வந்த தாயைக் கட்டிக் கொண்டாள் குழந்தை நித்யா.

''அம்மா பாட்டி கோவிச்சுக்கிட்டா என்னை'' என்று கம்ப்ளெயின்ட் செய்தாள்.

அதை அணைத்துக் கொண்ட சாவித்திரி, ''பாட்டி அப்படி கோச்சுக்கமாட்டாளே உன் கிட்ட? கோச்சுக்கும்படியா நீ என்ன கண்ணே அமர்க்களம் பண்ணினே?'' சிரித்தபடியே கேட்டாள்.

''தண்ணில அளைஞ்சேன்.''

''ம்! அது தப்புதானே? தண்ணில அளைஞ்சா, ஜுரம் வரும். டாக்டர் ஊசி போடுவா. உனக்கு வலிக்கும் இல்லையா? அதான் பாட்டி அளையாதேன்னு சொல்லியிருக்கா. அதுக்குப் போய் கோவிச்சுக்கலாமா, பாப்பா! நித்யா குட்டிக்கு ஏதானும் வந்தாப் பாட்டிக்குத் தாங்காதும்மா. போ. போய் சமர்த்தா விளையாடு'' சமாதானப்படுத்தி அனுப்பினாள்.



"அம்மா பாட்டி பத்திரமாவைம் என்னை அடிச்சா."

"எதுக்குடா கண்ணா?"

"குடிக்கத் தண்ணி எடுத்துப்பேன்னு சொன்னேன். போடான்னுத் திட்டினா."

"ஏன் அதுவே எடுத்துக்கிட்டா என்ன? எங்க ஆண்டியாப் பாழாயிடப் போறது? எதுக்கு அநாவசியமா அதைக் கரிச்சுக் கொட்டறீங்க?"

"யாரு நானா? நான் பிள்ளைய கரிச்சுக் கொட்டறேன்? தானே தண்ணி எடுத்துக்கத் தெரியுமா அதுக்கு? விட்டா எல்லாம் தண்ணியாக் கிடும் நிமிஷமா. குடிச்சாலும் தேவலை! யாரால நாள் பூராத் தொடைக்க முடியும்?"

"அப்பப்பா! பிள்ளைக் குழந்தை ஓடி ஆடி விளையாடறதே ஒருத்தருக்கும் பொறுக்காதே! கொழுந்தையோடயா ஒத்தைக்கு நிப்பா?"

"ஆமாண்டி எனக்குதான் பொறுக்கலே. நான் பூராக் கண்ணுல எண்ணெயக் கொட்டிண்டு பார்த்துக்கறேனே. எனக்கு இதுவும் வேணும், இன்னமும் வேணும்?"

"எதுக்கு இப்படிப் பொலம்பறீங்க. யார் பிள்ளையப் பார்த்துக்கறீங்க? இதென்ன வேற வீட்டுக் கொழுந்தையா? எங்க பிள்ளையோட பிள்ளையாக்கும் பார்த்துக்க உங்களுக்குப் பாத்யதை இருக்கு. அதைப் போய்ப் பெரிசாச் சொல்லிக் காட்ட வேண்டாம். முடியாதுன்னு சொல்லுங்க ஆயிரம் கிரீச் இருக்கு. கொண்டு விட்டுக்கறேன்."

° ° ° ° °

கடவுளே! ஒன்றுமில்லாத விஷயத்தைப் பெரிதுபடுத்தி எவ்வளவு சண்டைப் போட்டு எப்படி அவள் மனத்தைப் புண்படுத்திப் பேசியிருக்கிறோம். அதே சாவித்திரி தான் எத்தனை அழகாகப் புத்தி சொல்லுகிறாள். பாட்டிக்கும் பேத்திக்கும் இடையில் அன்பு விட்டுப் போகாமல் எப்படிப் பாலமாய் இணைக்கிறாள். இந்தப் பக்குவமும் பண்பும் ஏன் தனக்கில்லாமல் போயிற்று. நினைக்க நினைக்கச் சுதாவுக்குத் தன் மீதே எரிச்சல் வந்தது. எதுவும் பிடிக்காமல் சோபாவில் பொத்தென்று உட்காரும் போது வேகமாய் உள்ளே வந்தான் குமார்.

"உன் மாட்டுப் பொண் லட்சணத்தைப் பார்த்தாயாம்மா. தயிர் சாதத்தை மாரடைக் கரு மாதிரிப் பிசைஞ்சு வெச்சுப்புட்டுத் தொட்டுக்க ஒண்ணுமே வெக்கலே. அவ்வளோ என்ன மறதி? எப்படி மனுஷன் சாப்படறது?" வந்ததும் வராததுமாகக் கத்தினான்.



அவனை ஏற இறங்கப் பார்த்த கல்யாணி, "சரி, தப்புத்தான். அவதான் மறந்துட்டா. தினம் போறதுக்கு முந்தி டிபன் பாக்ஸைத் தொறந்து பார்ப்பியே. இன்னிக்குப் பார்த்தியா, நீ? ஏன் மறந்து போனே? பார்த்துச் சொல்லியிருந்தா வெச்சுக் குடுத்திருப்பா. வேணும்னு மறந்து போனா? காலேலெழுந்தா அவளுக்கும் ஆயிரம் வேலே! பம்பரமாச் சுத்தறா பாவம்!"

"ஆமாமாம். உன் மாட்டுப் பொண்ணை ஒரு வார்த்தை சொன்னா உனக்குப் பொறுக்காதே!".

"அப்படியில்லடா. ஞாபக மறதி எல்லாருக்கும் சகஜம். அதை எல்லாம் தப்புன்னு சொல்லிக் கத்தறதே தப்புத்தான். அந்தத் தப்பைச் செய்யாதன்னு சொன்னேன். வேற என்ன?"

"சரி. மறந்துதான் போய்ட்டு





நாளைக்கு டபுள் பங்கா வெச்சுடறேன். தோப்புக்கரணம் வேணா போடட்டா?” கன்னக் குழியாக் கண்கள் பளிச்சிடச் சிரித்த மனைவியைக் கண்டுக் கோபம் மறையத் தானும் சிரித்தான்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த அம்புஜத்தின் நினைவு சட்டென்று பின் தாவிற்று.

“கார்த்தால யாரு எனக்கு டப்பா கட்டினது?”

“ஏன் நான்தான்” என்றாள் சுதா.

“ஏன்னு கேட்கற? என்னை மனுஷன்னு நெனச்சயா? மாடுன்னு நெனச்சயா?”

“எதுக்குக் கத்தறீங்க இப்போ?”

“பின்ன என்னடி வறட்டு வறட்டுன்னு நாலு சப்பாத்திய மட்டும் தொட்டுக்க ஒண்ணுமில்லாம வெச்சா எவன் சாப்படறது?”

“அச்சச்சோ! சாரி மறந்தே போயிட்டேன். அதுக்குள்ள அடுப்புல கறி தீய ஆரம்பிச்சதுன்னு எறக்கப் போனேனா மறந்துட்டேன்.” வருத்தத்துடன் கைகளை உதறிக் கொண்டாள் சுதா.

“மறதியில்லடா அது! திமிர்! என்னை எடுத்து வெக்கச் சொன்னா. எனக்குக் கை ஒழியலை. நீயே வெச்சுடேன்னேன். அந்த ஆத்திரம். கறியையும் தீய வெச்சுட்டுத் தொட்டுக்கவும் ஒண்ணும் வெக்காம இருந்திருக்கா.”

“இவ்வளோ குத்தம் சொல்றீங்களே அப்ப நீங்களே ஒழுங்கா வெக்கறதுக்கென்ன? உங்களுக்கும் திமிருதானே அப்போ?”

“பாத்தியாடா! எதுக்கெடுத்தாலும் இப்டிதான் வாயாடறா. பெரியவான்னு மட்டு மரியாதையே துளிக்கூட இல்லாமப் பேசறாளே.”

“மரியாதை குடுக்கும்படியா இருந்தாத் தானே தர்றது?”

அவ்வளவுதான் ஏற்கெனவே எரிச்சல், இரண்டு பேரின் அர்த்தமில்லாத சண்டை எல்லாம் சேர பளார் என்று ஒரு அறை விட்டான் மனைவியை.

“அப்டிதான் நாலு குடு. அப்பத்தான் திமிர் அடங்கும்.”

* * * * *

நினைக்கும் போதே கஷ்டமாக இருந்தது அம்புஜத்திற்கு.

வேலைக்கும் போய்க் கொண்டு வீட்டிலும் சிரமப்படும் சின்னஞ்சிறுப் பெண்ணுக்கு அனுசரணையாய்ப் பேச நமக்குத்தான் தெரியவில்லையோ என்று மருகினாள்.

ஒன்று மட்டும் அம்புஜம் சுதா இருவருக்குமே நன்றாகப் புரிந்தது. எதைப் பிறருக்குக் கொடுக்கிறோமோ அது கண்டிப்பாய்த் திரும்பும் என்பது! அன்பைக் காட்டினால் அன்பே கிட்டும். பாசத்தைப் பொழிந்தால் அதுவே திரும்பும். தவறு செய்வது மனித இயல்பு! ஆனால் தன்னுடையதை உணராமல் அடுத்தவர்களுடையதை மட்டும் மலையளவு பெரிதாக்கிப் பேசும்போதுதான் சண்டை ஆரம்பமாகிறது. இதை உணராமல் எட்டிக்குப்

# மலிவுடன் பொலிவு
# சிறிய அளவிலும் உறுதி குன்றாத
# சுவை கூட்டும் பிரஷர் குக்கர்.







## ஜீவல்
பிரஷர் குக்கர்

IS : 2347




அத்தாட்சி பெற்றது

- உறுதியான உடலமைப்பு—முற்றிலும் சுத்தமான அலுமினியத்தினாலானது
- எவர்சில்வரினால் ஆன ''வெண்ட் பைப்''
- வசதியான 2.5, 3.5, 4.5, 5.5, 7.5, 8.0, 9.0, 10.5, 12.5 லிட்டர் அளவுகளில் அலுமினியம் or எவர்சில்வர் உட்பாத்திரங்களுடன் கிடைக்கிறது.
- நாடெங்கிலும் உள்ள விற்பனை மற்றும் சேவைப் பிரதிநிதிகள், உதிரி பாகங்களையும் வழங்குகிறார்கள்.
- ''ஆட்டோமேட்டிக் லிப்டிங் சிஸ்டம்''—சமையலுடன் மற்ற வேலைகளையும் கவனிக்க வசதி புரிகிறது.
- எல்லா அளவு ஜீவல் பிரஷர் குக்கர்களின் மூடிகளுக்கு ஏற்றாற்போல் பிரஷர் பான்களும் கிடைக்கிறது.

## ஆனந்தா ஏஜன்ஸீஸ்
45-46 தெற்கு ஆவணி மூல வீதி, மதுரை-625 001.
போன்: 30576

எல்லா பிரபல கடைகளிலும் கிடைக்கும்











# அமிர்தாஞ்சன் அறியும் தலைவலியின் கடுமையை



எளிதாகப் பூசிட ஏற்ற மிருதுவான
அடிப்படைப் பொருள் கொண்டது.

புத்தம் புதிய, கார்க்கினாலான
உள் அமைப்பு மருந்தின்
சக்தியைப் பாதுகாக்கிறது.








1984 ஒலிம்பிக் போட்டி
இந்திய விளையாட்டு
வீரர்களுக்கு பெய்ன்-
பாம் சப்ளை செய்ய
அங்கீகாரம் பெற்றவர்கள்.

# அமிர்தாஞ்சன்

துரித நிவாரணம் உறுதியுடன் அளிப்பது.

தீய பின்விளைவுகள் இல்லாதது.

OBM 8708 TM

போட்டியாய் இருந்து கொண்டு ஐந்து வருட வாழ்க்கையை எப்படி வீணடித்து நரகமாக்கிக் கொண்டு விட்டோம் என்று நினைத்த பொழுது துக்கம் பந்தாய்த் தொண்டையை அடைக்கத் தனியே போய் உட்கார்ந்து விசும்பத் தொடங்கினாள் சுதா.

அம்புஜமும் தான் சோகமாய் இருந்தாள்.

இவர்கள் இருவரின் நிலைமையும் பார்த்து அர்த்தத்துடன் குமாரைப் பார்த்துச் சிரித்தான் ரமேஷ். சில நிமிடங்கள் கழித்து இருவரும் வெளியே சென்றனர்.

"தேங்க் யூ குமார். அஞ்சு வருஷமா என்னால முடியாததை அஞ்சே நாள்ள நடத்திக் காட்டிட்ட."

'நோ, நோ. அப்படிச் சொல்லாத ரமேஷ். இயல்பாவே ரெண்டு பேருமே மனசளவுல நல்லவங்கதான். ஆனா விட்டுக் கொடுக்கத் தெரியலே. அவ்வளோதான். அதான் ஒரு வாரம் எங்கம்மாவையும் சாவித்திரியையும் பார்த்து அவங்களோட நேசத்தையும் பாசத்தையும் பார்த்துப் புரிஞ்சுக்கிட்டாங்க. கண்டிப்பா மாறிடுவாங்கன்னுதான் உடனே உன்னை குடும்பத்தோட வரச் சொல்லி எழுதினேன். அம்மாக்கும் சாவித்திரிக்கும் கூட இது தெரியாது. எப்படியோ ரெண்டு பேரும் மனசு மாறிட்டா. இனிமே சௌஜன்யமா இருப்பான்னு நெனக்கறேன்."

"ம்ம்! அப்படி உடனே நினைக்க முடியாது. மறுபடியும் வேதாளம், முருங்கை மரம் கதையாக் கூட இருக்கலாம். எதுக்கும் டெஸ்ட் பண்ணிப் பார்த்துடலாம் என்ன சொல்ற?"

"ம். உன் இஷ்டம்."

✿ ✿ ✿ ✿ ✿

"தீபாவளிக்கு இங்கேயே, உனக்குப் புடவை வாங்கிட்டேம்மா" ரமேஷ் ஒரு கோடம்பாக்கம் புடவையை எடுத்துக் காட்டிய போது பாய்ந்து வந்தாள் சுதா. "ரொம்ப மோசம் நீங்க. ஒரு பட்டுப்புடவை நல்லதா எடுத்துக்குடுத்தா தேஞ்சாப் போய்டுவீங்க? இது இருக்கட்டும். மொதல்ல அம்மாக்கு நல்லதா ஒரு பட்டுப் புடவை எடுத்துண்டு வருவோம் கிளம்புங்க. பாவம் நல்ல புடவையே இல்லே அம்மாட்ட!"

மாட்டுப்பெண்ணின் பரிவில் சட்டென்று திகைத்து, முகம் மலர்ந்து பிறகு,

"எனக்கெதுக்குடா இப்போ பட்டுப் பொடவை? சின்னஞ்சிறுசு அவளுக்கு மொதல்ல பண்டிகைக்கு எடு. எனக்கு இது போறும். நா என்ன வெளில வாசல்லயா போறேன். இனிமே? பட்டெடுக்கற காசுக்கு அவளுக்கே ஆரஞ்சு கட்டிண்டு போறாப்பல நாலு புடவையெடுத்துடு."

சுதா சிநேகமாய் மாமியாரைப் பார்த்து,

சிரித்தாள். "சரி, உங்க இஷ்டப்படி நானும் எடுத்துக்கறேன். நானும் என் இஷ்டப்படி உங்களுக்கும் வாங்கிடறேன் சரிதானே?" மனமும் முகமும் குளிர பரவசப்பட்டுப் போனாள் அம்புஜம். அப்பப்பா சின்னச் சின்ன தியாகங்களில் தான் என்ன சுகம்!

இதுநாள் வரை முட்களும் கள்ளிகளும் நிறைந்திருந்த அந்த மனங்கள் சுத்தமாய் உழப்பட்டு இப்போது அதில் அன்பும் பாசமும் உறுதியாய் வேர் விட்டிருக்கின்றன என்பதைப் பரிபூரணமாக உணர்ந்து கொண்ட ரமேஷ் நிறைவாகச் சிரித்தான்.

எந்தப் பாத்திரத்தில் சமைத்தால் என்ன விளைவு 'ஏற்படும்' என்ற கட்டுரையில், தற்காலத்தில் ஒரு வகையான அடிப்பிடிக்காத சமையல்... இப்பாத்திரங்களில் சமைப்பது பாதுகாப்பானது என்றும் குறிப்பிட்டுள்ளார்கள். ஆனால், **'Teflon Coating non stick'** பாத்திரங்களில் சமைப்பது மிகவும் கெடுதல் என்றும் கேன்சர் வரும் என்பதால் அமெரிக்கா போன்ற நாடுகளில் இதன் விற்பனையைத் தடை பண்ணி உள்ளதாகக் கூறுகிறார்களே. இது உண்மையா?

— மாலதி, ஈரோடு

இதைப் பற்றி ஒரு பிரபல பாத்திர விற்பனையாளரை அணுகிக் கேட்ட போது —

"அடிப்பிடிக்காத சமையலுக்காக டெஃப்லான் பாத்திரத்தை உபயோகப்படுத்துவதால் சில கெடுதிகள் வரலாம் என்பது உண்மை. இது கட்டுரையிலேயே தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. அதைத் தடுக்க எடுத்துக் கொள்ள வேண்டிய பாதுகாப்பு பற்றியும் கட்டுரையில் கூறப்பட்டுள்ளது.

அடிப்பிடிக்காமல் இருக்க இப்போது காப்பர் பாட்டம் பாத்திரங்கள் வந்துள்ளது. இந்தப் பாத்திரங்கள் அடிப்பிடிக்காமல் இருக்கக் காரணம் உஷ்ணம் சீராக அடிப்பக்கம் முழுவதும் பரவுவதால்தான். டெஃப்லான் கோட்டிங் பாத்திரங்களில் உள்ள கெடுதல்கள் இதில் வர முடியாது. ஏனென்றால் சமைக்கும்போது உணவு ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஒன்றைத்தான் தொடுகிறது."



ஞாயிற்றுக்கிழமை என்றால் சிலருக்கு மகிழ்ச்சி. அன்று காலை தூங்கி எழுந்திருக்கும் போதே, அப்பாடா! இன்று லீவு, ஆபீஸ் போக வேண்டாம் என்ற நினைப்பில் போர்வையை இழுத்துப் போர்த்துக் கொண்டு இன்னும் சிறிதுநேரம் தூங்குபவர்களும் உண்டு. சிலருக்குக் கஷ்டமாகவும் இருக்கும். உங்களுக்கு எப்படி என்று சில பெண்களைக் கேட்ட போது அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்று பார்க்கலாம்...

''எனக்கு ஞாயிற்றுககிழமை திங்கட்கிழமை எல்லாமே ஒன்றுதான்'' என்கிறார் சமூக நலத்துறை அமைச்சர் திருமதி. கோமதி சீனிவாசன்..

''அன்றும் வழக்கம் போல் எழுந்து வேலையைத் துவங்கி விடுவேன். காலையில் ஒரு ஏழு மணிக்கே பார்வையாளர்கள் வரத் தொடங்கிவிடுவார்கள். அவர்களைச் சந்தித்து அவர்கள் குறைகளைக் கேட்டு ஆவன செய்துவிட்டு, பின்பு சமையல் அறையில் என் கைவண்ணத்தை அன்று கொஞ்சம் காண்பிப்பேன். அன்று சமையலில் நிச்சயம் அசைவம் இருக்கும். சாப்பாட்டிற்குப் பின் சிறிதுநேரம் ஓய்வெடுப்பதற்குள் மூத்த பெண் கார்த்திகா பெண்ணரசியும் அடுத்த இரட்டைக் குழந்தைகளான ஆர்த்தி, அகஸ்த்தி எல்லோரும் தூங்கி எழுந்துவிடுவார்கள். அவர்களுடன் சிறிதுநேரம் விளையாடிக் கொண்டிருந்துவிட்டு மீண்டும் மாலையில் பார்வையாளர்களைப் பார்த்து முடிந்ததும், சில நாட்கள் விழாக்கள் அல்லது கூட்டங்கள் இருக்கும். அவற்றை முடித்துக் கொண்டு வீடு திரும்புவதற்கு இரவு வெகு நேரமாகிவிடும். சாப்பாட்டுக்குப் பிறகு சிறிதுநேரம் புத்தகம் படித்து விட்டுத்தான் தூங்குவேன், சரித்திர மாணவியானதால் சரித்திர நாவல்களை நான் விரும்பிப் படிப்பேன்'' என்று முடிக்கிறார் அமைச்சர்.

* ரேகா, பிரபு, திவ்யா இவர்களின் தாயான சூபரின்டென்டெண்ட் ஆஃப் போலீஸ் திருமதி திலகவதி குமரன் கூறுகிறார்:

''என்னுடைய தொழிலே ஒரு சமூக சேவைதான். ஆறு நாட்களும் சமூக சேவை செய்யும் நான், ஞாயிற்றுக்கிழமை அன்று என் குழந்தைகளையும், கணவரையும் வீட்டையும் கவனிக்கத்தான் விரும்புகிறேன்.

மற்ற நாட்களில் நான் காலை எழுந்து குழந்தைகளை ரெடி செய்து பள்ளிக்கு அனுப்பி நானும் கிளம்பத்தான் நேரம் சரியாக இருக்கும். பெரும்பாலும் நான் வீடு திரும்ப இரவு எட்டு மணிக்கு மேல் ஆகிவிடும்.

ஞாயிற்றுக்கிழமை வழக்கம் போல் எழுந்து விடுவேன். புதுமையான சமையல் குறிப்புக்களை முயற்சி செய்வேன். அன்று முக்கியமாக ஸ்டோர் ரூமில் எனக்கு நிறைய வேலைகள் இருக்கும். சளுகாய் போன்ற பொருட்களை வெய்யிலில் எடுத்து காய வைத்து எடுத்து வைக்க வேண்டும். குழந்தைகளின் துணிகளைத் துவைத்துக் காய வைத்து, அவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து, அவர்களின் கிழிந்தபுத்தகங்களுக்கு அட்டை போட்டுக் கொடுத்து... இதுவே சரியாக இருக்கும்.

மேலும், அன்றுதான் என்னை வீட்டில் பார்க்க முடியுமென்பதால் விருந்தினர்கள் வருவார்கள். அவர்களைக் கவனிக்க வேண்டும்.

நான் ஒரு புத்தகப் புழு என்றே சொல்லலாம். எல்லா வேலையும் முடித்துக் கொண்டு வெகுநேரம் புத்தகம் படிப்பேன்.''

# உங்களுக்கு ஞாயிற்றுக்கிழமை எப்படி?

கோமதி சீனிவாசன்



திலகவதி குமரன்



ஜானகி



உஷா



* ரிசர்வ் வங்கியில் டெபுடி கண்ட்ரோலராகப் பணிபுரியும் திருமதி உஷா தோரட் கூறுகிறார்:

''ஞாயிற்றுக்கிழமையும் வழக்கம் போல் எழுந்து என்னுடைய வேலையைத் துவங்கி விடுவேன். சுருட்டை முடியான என் தலைதான் என்னுடைய பெரும் பிரச்னை. நான் எண்ணெய் தேய்த்துக் குளித்து என்னுடைய இரண்டு பெண்கள் அபாவிற்கும் அதிதிக்கும் எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டுவேன். சாப்பாட்டில் பிரியாணி மற்றும் ஒரு இனிப்பு வகை இருக்கும். சாப்பாட்டுக்கு முன்னால் சிறிதுநேரம் என்னுடைய சிறிய தோட்டத்தில் சிறிது வேலை இருக்கும். நான் அலுவலகத்திற்கு தினமும் காட்டன் புடவைதான் உடுத்திக் கொள்வேன். அவற்றைப் பார்த்து வண்ணானிடம் போட்டு, குழந்தைகள் யூனிபாரம் மற்ற துணிகளைப் பார்த்து, ஃப்ரிட்ஜை டிஃப்ராஸ்ட் செய்து சுத்தம் செய்வது இப்படிச் சில்லறை வேலைகள் இருக்கும்.

ஞாயிற்றுக்கிழமை காலையில் என்னுடைய மற்றொரு முக்கியமான வேலை யோகா செய்வது. மற்ற நாட்களில் இதற்கு அதிக நேரம் ஒதுக்க முடியாது. ஞாயிற்றுக்கிழமை ஒரு மணி நேரம் யோகா செய்வேன். சாப்பாட்டிற்குப் பிறகு ஒரு நல்ல தூக்கம். மாலையில் என்னுடைய கணவர் புல்லாங்குழல் கற்றுக் கொள்ளும்போது அவருடன் சிறிது நேரம் இருந்து இசையைக் கேட்பேன். எங்களுடைய வீட்டில் தொலைக்காட்சிப் பெட்டி இல்லாததால் எங்களுடைய நேரம் அதிகமாக வீணாவதில்லை. மேலும், நாங்கள் இருவருமே திரைப்படம் பார்ப்பதையும் விரும்புவதில்லை. நேரம் கிடைக்கும் போது சாஸ்திரீய சங்கீதத்தை ரசிக்கவும், குழந்தைகளுடன் மகிழ்ச்சியாக இருக்கவுமே விரும்புகிறோம்.''

* அப்பப்பா ஞாயிற்றுக்கிழமையா? வேண்டவே வேண்டாம் என்கிறார் திருமதி ஜானகி அம்மாள்.

''மற்ற நாட்களில் காலை ஒன்பது மணிக்கெல்லாம் எல்லாம் அடங்கிவிடும். பிறகு எனக்குப் பகலில் ஓய்வுதான். ஆனால் ஞாயிற்றுக்கிழமை வேலையே ஆகாது. அன்று எல்லோரும் எழுந்திருக்கவே நேரமாகிவிடும். பிறகு ஒவ்வொருவராகக் காப்பி குடிக்க வருவார்கள். அன்று சமையல் கொஞ்சம் ஸ்பெஷலாக இருக்கும். சாப்பாட்டுக் கடை முடியவே பன்னிரண்டு மணி ஆகும். மேலும், படுத்த படுக்கையாக இருக்கும் என் கணவருக்கு அன்று தான் குளிப்பாட்டி, படுக்கை எல்லாம் சுத்தம் செய்ய வேண்டும். சாப்பாடு லேட்டாகச் சாப்பிடுவதால், மாலை டிபன் கிடையாது. காப்பிப் போட்டுக் கொடுத்து இரவு சமையலுக்கு ஏதாவது செய்து வைத்து விட்டு முகம் அலம்பிப் பொட்டு இட்டுக் கொண்டு தொலைக்காட்சியில் படம் பார்க்க ரெடியாகிவிடுவோம் என்கிறார்.

''காலையில் எழுந்தவுடனேயே, காலேஜுக்குக் கிளம்ப வேண்டாம் என்பதே சுகமான ஓர் எண்ணம். லேட்டாக எழுந்து, நிதானமாக எண்ணெய் தேய்த்துக் குளித்து, பேசிக் கொண்டே ரசித்துச் சாப்பிட்டுவிட்டு நிம்மதியாக டெலிவிஷன் பார்ப்பேன். பாட்டு கேட்பேன்; ஏதாவது எழுதுவேன்; விலாவாரியாகப் பேப்பர் படிப்பேன். இதைத் தவிர, எல்லோரும் அரட்டை அடிப்போம்; ஏதாவது விளையாடுவோம். ஆனால், படிக்கிற குமகன் மட்டும் மாறாது. முந்திய வாரத்துப் பாடங்களை அன்றைக்குத்தான் லீஷராகச் செய்ய முடியும். ஞாயிற்றுக் கிழமைகளில், மற்ற நாட்களில் இருக்கிற வேகமும், சுறுசுறுப்பும் இருக்காது என்றாலும், சண்டேலே இருக்கிற சுகமே தனிதான்.''

இது கல்லூரி மாணவி உஷா.

பேட்டி: கலாமூர்த்தி.

அவசரக் கேஸ்களைப் பார்க்கப் போகும் போது டாக்டர் வைத்தியநாதனின் உற்ற வழித்துணை – நிப்போ.



# நம்பினோர் கைவிடப் படார்"

''என் டார்ச் லைட்டில் கட்டாயம் நிப்போ ஸ்பெஷல்தான் போடுவேன். சீரான, நம்பிக்கையான சக்திக்கு அதுவே ஆதாரம். கும்மிருட்டில், தொலைவான இடங்களிலுள்ள நோயாளிகளுக்கு வைத்தியம் செய்ய அவசரமாகப் போகும்போது, அதன் அத்தியாவசியம் எனக்குத் தானே தெரியும்! பளிச்சென வெளிச்சத்தைத் தந்து வழிகாட்ட உதவுகிறது, என் நிப்போ ஸ்பெஷல். அதே நிப்போ பாட்டரியை என் டிரான்சிஸ்டருக்கும் போடலாம் என்பதும் எத்தனையோ சௌகரியம்!

ஆக, அன்றாட அலுவல்களில் எனக்கு அத்தியாவசியமானது நிப்போ என்றே சொல்வேன்''

National **NIPPO**

**Batteries**

**''ஆம்! நிப்போவை நம்பினோர் என்றும் கைவிடப்படார்''.**




**நிப்போ பாட்டரிகள்: நேஷனல்-ஜப்பானின் தொழில் நுட்பத்தில் தயாரானவை**

INL/6C/84/TAM

# சேவைத் துறைக்கு ஒரு சரோஜினி

கும்பகோணத்தை அடுத்த சிறு கிராமம் சேங்கனூர். இன்று உழவர் சமுதாயத்திற்கே நல்வாழ்வுக்கு வழிகாட்டியாக சேங்கனூர் ஒன்றியம் சிறந்து விளங்கி ஒரு எடுத்துக் காட்டாக அமைந்ததற்கு பெரும்பங்கு காரணமாக இருந்தவர் திருமதி சரோஜினி அவர்கள். சுமார் முப்பது வருஷங்களாகப் பொது வாழ்வில் ஊக்கம் காட்டி வருபவர்



இந்த அம்மையார். மகளிர் மன்றத் தலைவியாகவும் உழவர் விவாதக் குழு அமைப்பின் செயற்குழு உறுப்பினராகவும், பிராம்மண சங்க அங்கத்தினராகவும் பல பொறுப்புக்களை ஏற்று திறம்பட செயல்பட்டு வருகிறார்.

1974 ம் ஆண்டு சமூக நலத்துறை அதிகாரிகளால் இவரது 'மகளிர் மன்றம்' பார்வையிடப்பட்டு விசேஷ பாராட்டுக்களைப் பெற்றது. நாட்டின் நலனுக்குக் கல்வி அவசியம். அது போலச் சத்துணவும் அவசியம் என்பது அவர் கருத்து. அரிசியைத் தவிர கம்பு, கேழ்வரகு, சோளம் போன்ற பிற தானியங்களிலும் பல சுவையான பலகாரங்களைத் தயாரிக்கும் முறைகளை செய்து காண்பித்தார். நூல் நூற்றல், தையல், பாய் பின்னுதல் ஆகியவற்றிற்கு இவரது மன்றத்தில் பயிற்சி பெற்று இன்று பயன் பெறுவோர் பலர். 'சர்வோதயா' மூலம் 50 சர்க்காக்கள் வழங்கச் செய்தார். இவரது முயற்சியால் சேரிப் பகுதிகளுக்கு நூறு மின் விளக்குகள் இணைப்புக் கொடுக்கப்பட்டன.

1981 ல் வானொலியில் 'சிறந்த மகளிர்' என்ற பாராட்டுப் பெற்று சுழல் கேடயம் வழங்கப் பெற்றார். விவசாயம் மற்றும் பல துறைகளிலும் முன்னணியில் வந்தமைக்கு ரேடியோ, கடிகாரம், குத்து விளக்கு, விசைத் தெளிப்பான், இட்லிப் பாத்திரம் போன்ற பல பரிசுகளை 'வானொலி' மூலம் பெற்றார். கணவனால் கைவிடப்பட்டவர், இளம் விதவைகள் போன்றவர்களுக்கு சமூக நலத் துறை மூலம் இலவசமாகத் தையல் மிஷின்கள் வழங்க உதவியிருக்கிறார். இவர் நடத்திய முதியோர் கல்வி மூலம் பயன் பெற்றவர் அனேகம். சிறுதொழில்களுக்கு வங்கிகள் மூலம் நிதி உதவி வழங்கச் செய்திருக்கிறார்.

அவ்வூர் சிவாலயத்திற்கு திருப்பனந்தாள் மடத்தின் மூலம் பூஜைக்கு வழி வகுத்து சிறுவர்கள் பள்ளிக்குச் செல்ல 'வேன்' வசதியும் ஏற்பாடு செய்துள்ளார். சேவைத் துறையில் சிறந்து விளங்குவதோடு இவர் ஒப்பற்ற ஒரு இல்லத்தரசியாகவும் திகழ்கிறார். ஜாதிமத வேறுபாடு பாராட்டாது இடம் தேடிச் சென்றும் இவர் செய்யும் தொண்டு பாராட்டுக்குரியது. ஒரு எளிய கிராம வாழ்க்கையை மேற்கொண்டு இந்த அளவுக்கு சேவைத் துறையில் முன்னேற்றம் காண்பது அவரது ஒரு அரிய சாதனை என்றே சொல்ல வேண்டும்.

— செல்லம்

---

முகத்தில் வெடிப்பு போன்றவற்றிற்கு எளிய வழி:

தயிருடன் (புளிப்பில்லாதது) சிறிது மஞ்சள் பொடியைக் கலந்து, முகத்தில் தடவி வர முகத்தின் தசைகள் வெண்மையாகவும், மென்மையாகவும் பளபளக்கும். அம்மாதிரியான வெடிப்பு, பரு போன்றவைகளும் வராது. தொடர்ந்து இரு வாரங்கள் தடவி வந்தாலே நல்ல மாற்றத்தைக் காணலாம்.

— மயிலை சந்தானம்

தக்காளி தோசை:

தக்காளி மலிவான காலத்தில் செலவு அதிகம் இல்லாமல் தோசை செய்யலாம். பழுத்த தக்காளி 5 or 6 அரிசி 1/2 படி, உளுந்த பருப்பு 1 கரண்டி, சிறிது அளவு வெந்தயம், உப்பு, மிளகாய், பெருங்காயம் தேவையானால் வெங்காயம் சேர்த்து அரைத்து செய்யலாம்.

— V. பட்டம்மாள்.



# நவ நாகரிக குடும்பத்தலைவிகள் மிக்ஸி வாங்கப் போனால் அவர்கள் மீனுமிக்ஸியையே தேர்ந்தெடுப்பார்கள்.

ரேணு மிக்ஸி வாங்கவேண்டும் என்று எண்ணியபோது பிளேடுகள் நிரந்தரமாய்ப் பொருத்தியவைதான் வேண்டும். தன்னால் அடிக்கடி பிளேடுகளை மாற்றிக்கொண்டிருக்கமுடியாது எனக் கருதினாள். மீனுமிக்ஸியில் இதேவித அமைப்பு என்றதும் அவளுக்குப் பெரு மகிழ்ச்சி

தீபாவின் விருப்பம் வேறுவிதம். இரண்டு எவர்சில்வர் ஜாடிகள் பொருத்தப்பட்டவைதான் சுலபமானவை என்பது அவள் கருத்து. மீனு மிக்ஸியில் எவர்சில்வர் ஜாடிகளைப் பார்த்ததுமே வாங்கிவிட்டாள் ஒரு மீனுமிக்ஸ்.

தீபாவின் தோழி கலர் பொருத்தம்தான் முக்கியம் என்று கருதுபவள். தனது சமையலறையின் அமைப்பிற்கேற்ற கலரில் மிக்ஸி அமையவேண்டும் என்பது அவள் கனவு. மீனுமிக்ஸி விற்பனையாளர் பல வண்ணங்களில் காட்டியதுமே— அவள் விருப்பம் நிறைவேறியது.

மற்றொரு பெண்மணி தன் கணவர் ISI முத்திரை என்று சொன்னதை கருத்தில் கொண்டிருந்தாள் — உழைப்பிற்கு உத்திரவாதம் அவள் கருத்து. மீனுமிக்ஸிதான் முதன்முதலில் ISI முத்திரை பெற்ற மிக்ஸி என்றறிந்ததும் மீனுமிக்ஸியே வாங்க முடிவு செய்துவிட்டாள்.

மீனுமிக்ஸி எல்லா வகையிலும் உங்களுக்கு சிறந்த சேவை செய்யக் கூடிய ஒரு சாதனத்தை அளிப்பதில் மிகவும் அக்கறை எடுத்துக் கொள்கிறார்கள். இது தெரிந்துதான் குடும்பத் தலைவிகள் பெரும் அளவில் மீனுமிக்ஸியையே விரும்புகிறார்கள்— இது இயற்கை தானே.

**MeenuMix®**

உங்களின் திறமைமிக்க சமையலறை நண்பன்.



## மீனு எக்விப்மெண்ட்ஸ்

கோயம்புத்தூர், சென்னை, கொச்சின், பெங்களூர், ஐதராபாத்.

முதல் பரிசு: சூர்யா தூக்கு

## மீ

இது ஒரு சீன, மலேசிய உணவு. கோதுமை மாவினை (½ கிலோ) முட்டையுடன் (அ) டால்டாவுடன் சற்று நீர் சேர்த்துப் பூரி மாவைப் போலத் தயாரித்துச் சப்பாத்திக் கட்டையால் தட்டையாகச் செய்து சிறு கத்தியால் நீள நீளமாக அறுத்து வெயிலில் உலர்த்தி நூடுல்கள் போல் தயாரித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

# இம்மாத இல்லத்தரசி


பாத்திமா மணி


செலின் ராஜ்

2 கப் தண்ணீரோடு மேற்படி தயாரிப்பில் 200 கிராம் நூடுல்களை இட்டு பிரஷர் குக்கரை மூடி நன்கு எரியும் அடுப்பில் வேக வைத்து நீரை வடிக்கட்டி ஆற விடவும்.

6 காய்ந்த மிளகாய் வற்றலை நீர்விட்டுச் சாந்தாக அரைத்துக் கொள்ளவும்.

1 முழு பூண்டினை உரித்துப் பரல்களை சிறுசிறு துண்டுகளாக்கிக் கொள்ளவும். வாணலியில் சிறிது எண்ணெய் (அ) டால்டா விட்டு மிளகாய் சாந்து மற்றும் பூண்டுத் துண்டுகளை வதக்கிப் பிறகு வேக வைத்த நூடுல்களை அதில் போட்டு 5 நிமிடங்களுக்குப் பின் இரண்டு முட்டைகளை அதில் உடைத்து ஊற்றி நன்கு கலக்கி வெந்த பிறகு இறக்கிச் சூடாக பரிமாறவும்.

—எம். பாத்திமா மணி.

இரண்டாம் பரிசு: பேசின்

## ஸ்பெஷல் பிரதமன்

தேவையான பொருட்கள்:

250 கிராம் சம்பா கோதுமை (ரவையை விடப் பெரிதாக உடைத்தது. ½ கிலோ உருண்டை வெல்லம், ½ மூப்பான பதத்திலுள்ள பெரிய தேங்காய் 1, முந்திரிப் பருப்பு, 50 கிராம், நெய் 50 கிராம், கனிந்த ரஸ்தாளி வாழைப்பழம் 2, தேங்காய்ப்பல் கீறியது 2 ஸ்பூன்.

செய்முறை:

கோதுமை அரிசியை அது மூழ்கும் அளவுக்கு ஒரு பாத்திரத்தில் கொதிக்கும் வெந்நீரில் சுமார் 1 மணி நேரம் ஊற வைக்கவும். வெல்லத்தை ஒரு கப் நீரில் சேர்த்து ஒரு அடி கனமான பாத்திரத்தில் கொதிக்க விடவும். இதிலுள்ள அழுக்கு, கல் ஆகியவற்றை நீக்கி வடித்துக் கொள்ளவும்.

ஊற விட்ட கோதுமையை ஒன்றுக்கு இரண்டு என்ற கணக்கில் நீர் சேர்த்துக் குக்கரில் நன்கு வேக விடவும். (குக்கரில் வெயிட் போட்டு நன்கு சத்தம் வரத் தொடங்கிய பின் சுமார் 10 நிமிடங்கள் வேக விடலாம். எவ்வளவு வெந்தாலும் அவ்வளவு நல்லது தான் இதற்கு) அடுத்ததாக வடிகட்டிய வெல்லக் கரைசலை நன்கு கொதிக்க விடவும். வெல்ல வாசனை போகச் சுமார் 5 நிமிடங்கள் கொதித்த பின் இதில் வெந்த கோதுமையைப் போட்டு அடி பிடிக்காமல் கிளறிக் கொடுக்க வேண்டும்.

தேங்காயைத் துருவி கல்லுரலில் அரைத்து, முதல், இரண்டாம், மூன்றாம் பால் எடுத்துக் கொள்ளவும். மூன்றாம் பாலை முதலில் கோதுமையுடன் சேர்க்கவும். பின்னே வாழைப்பழங்களை அரை வட்ட வடிவில் சன்னமான வில்லைகளாக நறுக்கிப் போட்டு அதையும், இரண்டாம் பாலையும் சேர்த்துக் கிளறிக் கொடுக்கவும். பிரதமன் கொதித்து, சற்று இளகி வரும் பதம் ஆனவுடன் அதில் முதல் பால் 'திக்'காக எடுத்து வைத்துள்ளதையும் கொட்டி ஒருதரம் கிளறிக் கொடுத்து உடனே இறக்கி விடவும். இது கொதிக்கக் கூடாது. என்றால்தான் உடனே இயற்கையான தேங்காய் மணத்தில் பிரதமன் இருக்கும்.

பிறகு, ஒரு வாணலியில் நெய்யை விட்டு அது காய்ந்ததும் முந்திரிப் பருப்புத் துண்டங்களையும், நறுக்கிய தேங்காய்ப் பல்லையும் போட்டு நன்றாகவே சிவக்க வறுத்து எடுத்து நெய்யுடன் பிரதமனில் கொட்டி எல்லாவற்றையும் சேர்த்துக் கலக்கவும்.

(இதைச் சிறுசிறு கப்களில் விட்டு ஃபிரிஜ்ஜில் குளிர வைத்து மாலை நேரம் குழந்தைகளுக்குக் கொடுத்தால் விரும்பி உண்பார்கள் அல்லது ஐஸ்கிரீம் ஃப்ரீஸரில் வைத்து நன்கு கெட்டியான பின்னும் கொடுக்கலாம். இந்த ஸ்பெஷல் பிரதமனை!)

—லட்சுமிப்ரியா.

---

மூன்றாம் பரிசு: டிஷ்

# கோதுமை வெஜிடபிள் ஷிஃபான்

**தேவையான பொருட்கள்:**

கோதுமை மாவு — 2 கப்
மைதா மாவு — 1 கப்
ஈஸ்ட் — 2 டீஸ்பூன்



சூரியகாந்தி எண்ணெய் அல்லது டால்டா — முக்கால் கப்
பால் பவுடர் — முக்கால் கப்
துருவிய காரட் — ½ கப்
துருவிய பூசணி — ½ கப்
வறுத்த வேர்க்கடலை — ½ கப்
சீஸ் கட்டி — 50 கிராம்
செர்ரி பழங்கள் (விரும்பியவர்கள் மட்டும்) — 50 கிராம்
உப்பு — 1½ டீஸ்பூன்.

**செய்முறை:**

1 கப் வெதுவெதுப்பான நீரில் ஈஸ்டைக் கரைத்து, அதனுடன் உப்பு, மைதா மாவு இவற்றைக் கரைத்து ஒரு கரண்டியால் நன்றாக நுரை பொங்க 2 நிமிடம் அடிக்கவும்.

பின்பு ½ கப் கோதுமை மாவையும் எண்ணெய், பால்பவுடர் ஆகியவற்றைக் கலந்து மறுபடியும் கரண்டியால் 2 நிமிடம் அடிக்கவும். அதன்பின் மீதமிருக்கும் கோதுமை மாவைக் கலந்து சப்பாத்தி மாவு பதத்தில் பிசையவும். அதனுடன் துருவிய காரட், பூசணி, வறுத்த வேர்க்கடலை இவற்றைச் சேர்த்து நன்றாக 5 நிமிடம் அடித்துப் பிசையவும்.

ஒரு அகலமான பாத்திரத்தில் அடியில் (உள் பாகத்தில்) டால்டா தடவி அதில் பிசைந்த மாவைப் போட்டு ஒரு மெல்லிய துணியால் மூடி 30 நிமிடங்கள் வைக்கவும். மாவு பொங்கி இருக்கும்.

அதன்பின் மாவை மறுபடியும் எடுத்து பூரி கட்டையால் ஒரு அங்குல கனத்திற்குத் தட்டையாகத் தேய்த்து அதன்மீது எண்ணெய் தடவி நான்காக மடித்து மறுபடியும் 1" கனத்திற்குத் தேய்த்து எண்ணெய் தடவிய பாத்திரத்தினுள் வைத்து ஓரத்தைப் பாத்திரத்தின் பக்கவாட்டில் மடித்து விடவும். அதாவது பாத்திரத்தின் வடிவத்திலேயே கிண்ணம் போல் மடித்து விடவும். பாத்திரத்தை ஓவனில் 10 நிமிடங்கள் வைத்துச் சூடேற்றவும். நன்றாக வெந்து விடும்.

அதன்பின் எடுத்துச் சீவிய சீஸ் கட்டிகளையும் விரும்பியவர்கள் நறுக்கிய செர்ரி பழங்களையும் நடுவில் தூவி மறுபடியும் 10 நிமிடங்கள் ஓவனில் சீஸ் உருகிப் பொன்னிறம் ஆகும் வரை வைத்து எடுக்கவும்.

ஆறியவுடன் நீண்ட சதுரங்களாக வெட்டிப் பரிமாறவும். இத்துடன் தொட்டுக் கொள்ள புதினா சட்னி சுவையாக இருக்கும்.

— ஆ. செலின் ராஜ்

---

ஆறுதல் பரிசு: சமபுடம்

## கேஹூதால் கசௌரி

**தேவையான பொருட்கள்:**

கோதுமை மாவு — ½ கிலோ
உளுத்தம் பருப்பு — 250 கிராம்
பச்சை மிளகாய் — 15
தேங்காயத் துருவல் — 1 கோப்பை
இஞ்சி — 1 துண்டு
உப்பு, காயம் — தேவையான அளவு
கறிவேப்பிலை
டால்டா — ½ கிலோ
ஸோம்பு (பெரும் சீரகம்) — 1 கரண்டி
பேக்கிங் ஸோடா — 1 ஸ்பூன்

**செய்முறை:**

கோதுமை மாவைச் சலித்து தேவையான அளவு தண்ணீர் சேர்த்து பூரிக்குப் பிசைவது போல் நன்றாகப் பிசைந்து ஓர் ஈரத்துணி

---

# இம்மாத இல்லத்தரசி போட்டி

பொருள்: முளை கட்டிய தானியங்கள் : கடைசி தேதி: 15.5.85

## சமையல் கூப்பன்

.................. என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

பாசிப் பருப்பு வைத்து ஒரு மணி நேரம் ஊற வைக்க வேண்டும். உளுத்தம்பருப்பை ஊற வைத்து ஒன்றிரண்டாக வடைக்கு அரைப்பது போல் அரைக்க வேண்டும்.

பொடியாக நறுக்கிய இஞ்சி, பச்சை மிளகாய், கறிவேப்பிலை, சோம்பு, காயம், தேங்காய்த் துருவல் அரைத்த மாவுடன் கலந்து ஒரு வாணலியில் ஒரு கரண்டி எண்ணெய் விட்டு மேற்கூறிய கலவையை ஈரம் போகும் வரை கிளற வேண்டும். கிளறிய மாவை நெல்லிக்காய் அளவு உருண்டைகளாக உருட்டி வைத்துக் கொள்ள வேண்டும். பின்பு கையளவுபூரி இட்டு அதனுள் உளுந்து உருண்டையை வைத்து நன்றாக மூடிப் பூரியாக இட்டு எண்ணெயில் பொரித்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

வெல்லமும் புளியும் கரைத்துமண் அரித்து கெட்டியாகக் கிளறிச் சுண்ட வைத்தால் தொட்டுக்கொள்ள நன்றாக இருக்கும். கசோரி வெல்லம், இரண்டு நாட்கள் ஈ வராது. கெடாது. மெதுவாக இருக்கும்.

— ஆர். சரஸ்வதி.

ஆறுதல் பரிசு:

சம்புடம்

## இருசுவை அப்பம்

தேவையான பொருட்கள்:

கோதுமை மாவு — 2 டம்ளர் (சற்று நெய் விட்டு வறுத்துக் கொள்க.) சீனி வள்ளிக் கிழங்கு — ½ கிலோ (ஆவியில் வேக வைத்துத் தோலுரித்து நன்கு மசிக்கவும்.)

வெல்லம் — ½ கிலோ (மெல்லியதாகச் சீவிக் கொள்ளவும்.)

சிறிது நெய், ஏலப்பொடி சிறிது.

அப்பம் சுடுவதற்குத் தேவையான நெய் அல்லது எண்ணெய்.

வெங்காயம் — 1 அரிந்து கொள்ளவும்

தேவையான அளவு உப்புத்தூள்.

செய்முறை:

கோதுமை மாவு வறுத்ததில் பாதியும், மசித்த கிழங்கில் பாதியும் வெல்லம், நெய், ஏலப்பொடியும் கலந்து நன்கு பிசைந்து சிறு உருண்டைகளாக்கி வாழையிலையில் சற்று மெல்லியதாய்த் தட்டி தோசைக்கல்லில் சுட்டு எடுக்கவும். தேங்காய்ப்பூவும் சேர்க்கலாம். போட்டுக் கலந்து கொள்ளலாம்.

மீதி உள்ள கோதுமை மாவு, கிழங்கு மசித்ததையும் போட்டு, அதில் தேவையான அளவு உப்புப் போட்டு, அரிந்த பச்சை மிளகாய், வெங்காயம் வதக்கிப் போட்டுப் பிசைந்து, தேவைப்பட்டால் சிறிது தயிர் கலந்து பிசைந்து, இனிப்பு அப்பம் போல மெல்லியதாகத் தட்டித் தோசைக் கல்லில் போட்டுச் சுட்டு எடுக்கவும். சர்க்கரை வள்ளிக் கிழங்கு கிடைக்காவிடில், மர வள்ளிக் கிழங்கிலும் செய்யலாம்.

— பி. கம்சம்மாள்.



வேலூர் அரிமா நங்கையர் சங்கத்தின் ஆண்டுவிழாவிற்குச் சென்ற போது, அங்கு உற்சாகமான மங்கையர் மலர் வாசகிகளை 'நேருக்கு நேர்' உரையாடல் நிகழ்ச்சியில் சந்திக்க முடிந்தது. அப்பா, என்ன ஆர்வம் ஒவ்வொருவருக்கும்!

"மங்கையர் மலரைப் பிரித்தவுடன் முதலில் படிப்பது சமையல் குறிப்புக்களைத்தான். அது எப்படி அவ்வளவு சரியாகச் செய்முறைகளைப் போடுகிறீர்கள்? ஒன்று கூடச் சரியாக வராமல் போவதில்லை..."

"இந்த பட்ஜெட்டைக் கண்டித்து நீங்கள் ஏன் ஒரு கட்டுரை எழுதக் கூடாது? விலைவாசியின் உயர்வால் திண்டாடுவது பெண்களாகிய நாம்தானே...?"

"வெறுமே எழுதுவதோடு நிறுத்தக் கூடாது. எல்லாப் பெண்களும் சேர்ந்து, பலமான ஒருசக்தியை உருவாக்கவேண்டும்.

அப்போதுதான் நமக்கும் ஒரு தைரியம் ஏற்படும். அவர்களுக்கும் ஒரு பயம் தோன்றும்..."

ஏன், எப்பொழுது பார்த்தாலும் மெட்ருஸ் நியூஸையே போடுகிறீர்கள். வெளியூர் நிகழ்ச்சிகளை ஏன் போடுவதில்லை?"

"கதைகள் எல்லாம் வெறும் பொழுது போக்குக்காக இல்லாமல் ஏதாவது ஒரு பிரச்னையைச் சொல்வதாக இருக்கிறது. அதுதான் எனக்குப் பிடிக்கிறது."

மங்கையர் மலரின் முதல் பக்கத்திலிருந்து கடைசிப் பக்கம் வரை விமரிசித்துத் தீர்த்து விட்டார்கள்: வந்திருந்த அனைத்துப் பெண்களுமே தங்களுக்கு உகந்த தோழியாக மங்கையர் மலரைக் கருதிப் பேசிய போது சந்தோஷமாக இருந்தது. ஆக்கப்பூர்வமான பல யோசனைகளையும் கூறினார்கள். மொத்தத்தில் அந்த மூன்று மணி நேரம் போனதே தெரியவில்லை.

—மஞ்சுளா ரமேஷ்.

# ஸாபுதாணு

வற்றலோடு நீங்களும் வெயிலில் காய்கிறீர்களா? அந்தக் கவலையில்லாமல் இதோ அறையிலேயே இடும் வடாம்—

**தேவையான பொருட்கள்:**

ஜவ்வரிசி, தரமான உருளைக் கிழங்குகள், உப்பு, பச்சை மிளகாய், எலுமிச்சம் பழம் அல்லது புளித்த மோர்.

**செய்முறை:**

ஜவ்வரிசியை இரவே தண்ணீரில் களைந்து அழுக்குப் போக இறுத்து விடவும். பிறகு வெந்நீர் காய்ச்சி, ஜவ்வரிசி முழுகி, அதன் மேல் விரற்கிடை தங்கும்படி விட்டு மூடி வைத்துவிடவும்.

காலையில் உருளைக் கிழங்கை முழுசாக (அழுக்குப் போக அலம்பி) குக்கரில் வைத்து, வேக விடவும். பிறகு தோல் உரித்து, கொப்பரைத் துருவலில் துருவிக் கொள்ளவும். (ஸாபுதாணு) ஜவ்வரிசி, பொலபொலவென்று ஊறி இருக்கும். அதை மிக்ஸியில் மாவாக்கவும். தேவையான உப்பு, மிளகாய் அரைத்த விழுது, எலுமிச்சம் சாறு சேர்த்து நன்கு கலந்து கொள்ளவும். ஜவ்வரிசியும், உருளைக் கிழங்கும் (துருவலும்) சம அளவில் இருக்கலாம்.

மாவு தயாரானதும், ஒரு ப்ளாஸ்டிக் காகிதத்தைப் பிரித்துப் போடவும். சுத்தமான ப்ளாஸ்டிக் கவர் எடுத்துக் கொள்ளவும். பால் கவரில் சிறிது எண்ணெய் தடவவும். மாவை (தண்ணீர் ஒரு கிண்ணத்தில் வைத்

# அழகு சாதனங்கள் மிச்சம்

எண்ணெய்க் குளியல் அவசியமா? அனாவசிய ச் செலவில்லையா? என்றுதான் இன்றைய பெண்கள் கேட்கிறார்கள்.

எண்ணெய் தேய்த்துக் குளிப்பதால் எவ்வளவு அழகு சாதனங்கள் வாங்க வேண்டிய அவசியமில்லாமல் பணத்தை மிச்சப்படுத்தலாம் தெரியுமா?

எப்படி எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டும்?

1. எண்ணெயை லேசாகச் சுட வைக்க வேண்டும். இது இளகிக் கொஞ்சமான எண்ணெய் நிறைய பரவலாக தேய்க்க உதவும்.

2. கைமுட்டு, கால் முட்டு, குதிகால் போன்ற சொரசொரப்பான பகுதிகளிலும், மூக்கின் இருபுறமும், கண்களைச் சுற்றியும், நகக் கண்களிலும், கால் விரல் இடுக்கிலும், நன்றாக எண்ணெயைத் தடவித் தேய்க்க வேண்டும். இப்படித் தேய்ப்பதால் சருமத்தில் உள்ள அழுக்கு எல்லாம் எண்ணெயில் கரைந்துவிடும். எண்ணெயைத் தடவிக் கொண்டு பின் குளிப்பதால் சருமத்தின் மிருதுத்தன்மை கெடாமல், சருமத்தை வறண்டு போகச் செய்யாமல் பாதுகாக்கிறது.

3. எண்ணெயை விரல் நுனிகளால் தொட்டு, தலையில் ஒவ்வொரு இடமாக, எல்லா மயிர்க்கால்களிலும், படும்படியாகத் தேய்க்க வேண்டும். இது வறண்ட தலையைப் பதப்படுத்தி, வெய்யிலில் உலர்ந்த எண்ணெயைத் திரும்ப அளித்து, மயிர்க்கால்களைப் பாதுகாத்து, மயிருக்குச் சிறந்த போஷாக்காகிறது.

இப்படி எண்ணெய் தடவிக் கொள்வது க்ரீம் க்ளீன்சர், மாய்ஸ்ச்சரைஸர், ஸ்கின் ஸாஃப்ட்னர், ஹேர் கண்டிஷனர், க்ரீடிகிள் ரிமூவர் எல்லாமாகச் செயல்படுகிறது.

சீயக்காய் உபயோகப்படுத்தித் தேய்ப்பதால் சருமத்தின் இறந்த செல்களை உதிரச் செய்கிறது. சருமத்தை வழவழப்பாகச் செய்கிறது. இதற்காக க்ரெய்ன் க்ளின்ஸர் வாங்க வேண்டாம்.

—ஜெயா. வி. ராமன்.

ஆறு வயதில் கற்றுக் கொள்ள ஆரம்பித்து, பதினோராவது வயதில் (77—ல்) அரங்கேற்றம். (குரு — "சுவாமிமலை எஸ். கே. ராஜரத்தினம்") சென்னை மற்றும் வெளியூர்களில் தொடர்ந்து நடன நிகழ்ச்சிகளைத் தருகிறார்.

பாரதியார் கவிதைகள், பரத நாட்டியத்தில் மிருதங்கத்தின் பங்கு, பரதத்தில் சஞ்சாரி பாவம் என்று லெக்சர் — கம் — டெமான்ஸ்ட்ரேஷன்கள் அளித்திருக்கிறார்.

ஸ்டெல்லாவின் இரண்டாவது வருட இலக்கிய மாணவி. கல்லூரியின் 'பெஸ்ட் டான்ஸர்' விருது சுஜாதாவுக்குத்தான்.

தற்போது பேராசிரியர் எஸ். ராமநாதனிடம் கர்நாடக இசை பயிலுகிறார். மிருதங்கமும் கற்றுக் கொண்டு வருகிறார் (ஜஸ்ட் ஃபார் நாலட்ஜ் ஸேக்).

அப்பா சீனிவாசன் ஹிக்கின்பாதம்ஸில் எக்ஸிகியூட்டிவ்.

நிறையப் பத்திரிகைகளில் சுஜாதாவின் படம் வெளிவந்திருக்கிறது. அவற்றையெல்லாம் ஓர் ஆல்பத்தில் வைத்திருக்கிறார். இதில் லேட்டஸ்ட் அட்ஷன் சென்ற இதழ் (ஏப்ரல் மாத) மங்கையர் மலர்.

எஸ். சந்திரமௌலி.

வண்ணப் படம்: யோகா.

துக் கொள்ளவும்.) தண்ணீர் தொட்டுக் கொண்டு பதமாக உருட்டிக் கொள்ளவும். (மாவு அதிக கெட்டியாகத் தோன்றினால் சிறிது நீர் தொட்டுத் தளர்த்திக் கொள்ளவும்.) விரித்த காகிதத்தில் டம்ளரை வைத்து, பால் கவரின் எண்ணெய் தடவிய பாகத்தை அதன் மேல் வைத்து, கைவிரல்களால் அழுத்தவும். கைவிரல்களால் தடவி இலேசாவு நெகிழ்ந்து பரவும். வட்டமாக இடவும். பால் கவரை எடுத்து விடவும்.

இதுபோலவே அருகருகே செய்து கொண்டு போகவும். சாப்பிட்டுவிட்டே இதைச் செய்யத் தொடங்கலாம். வெய்யில் போய்விடுமே என்ற டென்ஷன் வேண்டாம். அறையின் உஷ்ணத்திலேயே உலர்ந்து விடும். மறுநாள் சிறிது நேரம் வெய்யிலில் வைத்து எடுத்துவிட்டால் போதும். ஜவ்வரிசியை சேவை செய்யும் மிஷினிலும் போட்டுப் பிழிந்து பார்க்கலாம்.

இட்லி வசதி உள்ளவர்கள் இட்லி வுடன் வெயிலில் வைக்கலாம். இதையே அச்சில் போட்டும் பிழியலாம். (வெயிலில்.)

—இந்திராணி.

சுஜாதா சீனிவாசன்





# திருமண மலர்

இந்து ரெட்டியார் இனத்தைச் சேர்ந்த இந்திய விமானப் படையில் பணிபுரியும் 29 வயது நிரம்பிய 6' 1'' உயரமுள்ள மாதம் 1500 ரூ சம்பாதிக்கும் பட்டதாரி வரனுக்கு, அதே வகுப்பைச் சார்ந்த 5' 4'' க்கு மேல் உயரமுள்ள குடும்பப்பாங்கான படித்த (வேலைக்குச் செல்பவராக இருந்தால் நல்லது) பெண் தேவை. வரதட்சிணை எதுவும் எதிர்பார்க்கவில்லை. தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2163.

திருநெல்வேலி சைவ வேளாளர் இனத்தைச் சேர்ந்த மத்திய அரசுப் பணியில் ரூ 1000/– சம்பளம் வாங்கும் 26 வயது 5' 5'' பையனுக்கு அதே இனத்தைச் சேர்ந்த மத்திய/மாநில/வங்கியில் வேலை பார்க்கும் பெண் தேவை. தொடர்பு கொள்க. பெட்டி எண்: 2164.

நல்ல அழகும், பண்பும், குணமும், குடும்பப் பாங்குமுள்ள கார்காத்தார் சைவ வெள்ளாள வகுப்பைச் சேர்ந்த மணமகன் சென்னையில் பிரசித்தி பெற்ற தனியார் தொழில் நிறுவனமொன்றில் ரூ 1350/– சம்பளத்தில் பணியாற்றும் 30 வயது மணமகனுக்கு தேவை. பெண்ணின் ஜாதகம் இதர விபரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2165

சமார்த்த தேஸிஸ்த மராட்டி பேசும் எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்த 29 வயது பிராம்மண பெண்ணுக்கு மணமகன் தேவை. மாத்வ தேஸிஸ்த மராட்டி பேசும் மணமகனாக இருந்தாலும் சம்மதம். பெண்ணின் கோத்ரம் காசிபம், நட்சத்திரம் விசாகம். பெட்டி எண்: 2166

சோழிய வேளாளர் வகுப்பு பி. ஏ. படித்த, 24/150 செ. மீ., மாநிறமுள்ள, போஸ்டல் அஸிஸ்டெண்ட் ஆக ரூ 750/– வருமானமுள்ள, குடும்பப் பாங்கான பெண்ணுக்கு 30 வயதிற்குள், பட்டம் பெற்று அரசு அலுவல் பார்க்கும் மணமகன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். குடும்ப விபரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2167.

சோழிய வேளாளர், வயது 34, பி. ஏ. படித்த அழகும், இளமையான தோற்றமும், குடும்பப்பாங்கான, தெய்வ பக்தியும் உடைய பெண்ணிற்கு சோழிய அல்லது மற்ற வேளாளர் (பிள்ளை) இனத்தைச் சேர்ந்த 43 வயதிற்குள் அரசு 'அல்லது தனியார் துறையில் நிரந்தர நல்ல வருமானம் உள்ள நல்ல மணமகன் தேவை. மனைவியை இழந்து குழந்தையில்லாதவர்களும் விண்ணப்பிக்கலாம். ஜாதகம் அனுப்பவும். பெட்டி எண்: 2168.

இந்து அகமுடையர் (தேவர்) 36 வயதும், 5' 6'' உயரமும் எம். காம். படிப்பும், தமிழ் நாடு மின்சார வாரியத்தில் சீனியர் அஸிஸ்டெண்ட்டாக பணியாற்றும் மாதம் ரூ 1500/– வருமானமுள்ள வரனுக்கு. அகமுடையர் வகுப்பைச் சார்ந்த பட்டம் பெற்று அரசு அலுவலகங்களில் அல்லது ஆசிரியர் பணியில் இருக்கும் மணப்பெண் தேவை. பெட்டி எண்:2169.

சென்னையில் கம்பெனியில் இளார்க் வேலை. வருவாய் 750/–. வயது 30. பிற்பட்ட ஜாதி. அழகிய தோற்றம். 5 1/2 அடி உயரம். தீய பழக்கம் இல்லை. ஒழுக்கம், பக்தியுள்ள பையனுக்கு சென்னையில் வேலை அல்லது வேலைக்கு வயது கல்வித் தகுதி உள்ள பெண் தேவை. இந்து எந்த ஜாதியும் சம்மதம். பெட்டி எண்: 2170.

கௌண்டின்ய கோத்ரம், பிரஹசரணம் சித்திரை நட்சத்திரம் 2ம் பாதம், திருச்சியில் மத்திய அரசு நிறுவனத்தில் மாதம் ரூ 1000/– வருமானம் உள்ள 27 வயது பெண்ணுக்கு திருச்சியில் பணி புரிகின்ற மணமகன் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விபரங்களுடன் எழுதவும். வயது 35க்குள் இருக்க வேண்டும். பெட்டி எண்: 2171.

விவாஹரத்து பெற்ற எந்த வில்லங்கமும் இல்லாத வேலைக்குச் செல்லும் 29 வயது பிராம்மண பெண்ணிற்கு மணமகன் தேவை. தாரமிழந்தவராகவும் அல்லது விவாஹரத்து பெற்றவராகவும் இருக்கலாம். பெட்டி எண்: 2172.

திருநெல்வேலி சைவ வேளாளர் குடும்பத்தைச் சேர்ந்த அரசாங்க அதிகாரியின் 28 வயது மகளிற்கு நடுத்தர/ஏழை குடும்பத்தைச் சேர்ந்த மணமகன் தேவை. சுமாரான வேலையில் இருந்தாலும் பரவாயில்லை. நல்ல வசதி செய்து தரப்படும். பிறந்த நட்சத்திரத்துடன் விண்ணப்பிக்கவும். ஜாதகம் தேவையில்லை. பெட்டி எண்: 2173

24 வயதுடைய தெலுங்கு நாயுடு வகுப்பைச் சேர்ந்த செவ்வாய் தோஷமுள்ள நல்ல குடும்பப்பாங்கான பெண்ணுக்கு செவ்வாய் தோஷமுள்ள நாயுடு வகுப்பைச் சேர்ந்த மணமகன் தேவை. (நாயுடு உட்பிரிவுகள் சம்மதம்). பெட்டி எண்: 2174.

கௌண்டின்ய கோத்ரம், மிருகசீரிஷம் நக்ஷத்திரம் உள்ள 34 வயதுடைய பட்டதாரி தெலுங்கு பிராமண பெண்ணிற்கு தெலுங்கு பிராமண இனத்தை மட்டுமே சேர்ந்த கௌரவமான குடும்பமும், நல்ல உத்தியோகமும் உள்ள வரன் தேவை. வயது 35 க்கு மேல் 40 க்குள் இருத்தல் உத்தமம். உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 2175

பிரஹசரணம் கௌசிகம் கேட்டை 6.8.1957ல் பிறந்த எஸ். எஸ். எல். ஸி. படித்த பெண்ணுக்கு வேலையில் உள்ள வரன் தேவை. எளிய திருமணம். இரண்டாந்தாரமும் ஏற்கப்படும். 22 வயதிற்குள் எத்தகைய ஊனம் உள்ள பெண்ணாக இருந்தாலும் பெண் எடுத்து பெண் கொடுக்கவும் சம்மதம். பெட்டி எண்: 2176.

மாநில அரசில் சென்னையில் நிரந்தர வேலை. சம்பளம் 1075. வயது 33. சைவம் திருமணமாகாதவர், இளமைத் தோற்றம் உள்ள பெண்ணுக்கு ஏழை அல்லது நடுத்தர குடும்பத்து இளார்க் வேலைக்கு குறையாத பையன் தேவை. சென்னைக்கு மாற்றலாகி வர வேண்டும். இந்து எந்த ஜாதியும் சம்மதம். பெட்டி எண்:2177.

நைத்ருப காசிப கோத்ரம், ஐயங்கார், சுவாதி, எஸ். எஸ். எல். சி. 5' 3'' உயரம், வீட்டு நிர்வாகம் நன்கு தெரிந்த 27 வயது பெண்ணிற்கு, மிகவும் பரந்த மனமுடைய சுமாரான வருமானம், நிரந்தர வேலை பார்க்கும் மணமகன் தேவை. எளிய திருமணம். பெண்ணின் தமக்கை கலப்புத் திருமணம். பெட்டி எண்: 2178.

தமிழக அரசில், சென்னையில், பணி புரியும் சொந்தத்திலும் தொழில் செய்யும் எஸ். எஸ். எல். சி. வரை படித்த 32 வயதுள்ள கம்மவார் நாயுடு வகுப்பைச் சேர்ந்த மணமகனுக்கு அதே வகுப்பைச் சார்ந்த படித்த, நல்ல வேலையில் உள்ள, நிறமுள்ள மணமகள் தேவை. ஜாதகம், இதர விபரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2179.

24 — மனைத் தெலுங்குச் செட்டியார் வகுப்பில் 16 — மனைப் பிரிவைச் சேர்ந்த, பிஸினஸ் செய்து கொண்டுள்ள, பி. ஏ. படித்துள்ள வரனுக்கு மணப் பெண் தேவை. பிஸினஸ் செய்வதற்கு உதவி செய்ய முடிந்த அல்லது பிஸினஸ் அமைத்துத் தருவதற்கு விருப்பம் உள்ள பெண் வீட்டார் தொடர்பு கொள்ளவும். இந்து மதத்தில் எந்த ஜாதியாக இருந்தாலும் பாதகமில்லை. பெட்டி எண்: 2180.

மத்திய சர்க்காரில் ரூபாய் 1000 வரை சம்பளம். கௌசிக அஸ்வினி பி. ஏ. படித்த ஸ்மார்த்த வடமாள் 33 வயது பெண்ணுக்கு மணமகன் தேவை. மத்திய சர்க்காரிலோ, பாங்க் அல்லது கம்பெனியிலோ நிரந்தர வேலை பார்க்கும் பட்டதாரி 40 வயதுக்கு மேல் படாமல் இருக்க வேண்டும். திருமணம் சிறப்பாய் செய்து தரப்படும். பெட்டி எண்: 2181.

''சொந்த பிஸினஸில் மாதம் ரூ 2,000/— சம்பாதிக்கும் 37 வயதான, பாரத்வாஜ, பிரஹசரண, அஸ்வினி நட்சத்திர பையனுக்கு, வேலைக்கு செல்லாத, இங்லிஷ் டைப்ரைட்டிங் பாஸ் பண்ணியுள்ள, அழகிய, குடும்பப் பாங்கான, நற்குணம் கொண்ட, 30 வயதுக்கு உட்பட்ட, நடுத்தர குடும்பத்து, பிரஹசரண பெண் தேவை. ஜாதகம் மற்றும் விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண்: 2182.

30 வயதான, பாரத்வாஜ கோத்திர, பிரஹசரண, மூலம் நட்சத்திர, இந்தியன் பாங்கில் ஆபீஸராகப் பணியாற்றும் பையனுக்கு, (178 cms), பாங்க் ஆபீஸராக வேலை பார்க்கும் 26 வயதுக்கு உட்பட்ட, அழகிய நற்குணமுள்ள ஐயர் பெண் தேவை. ஜாதகம் மற்றும் விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண்: 2183.

பாரத்வாஜ கோத்ரம், கண்ட்ர மாணிக்க பிரகசரணம், திருவோண நட்சத்திரம், டெலிபோன்ஸ் ஜுனியர் இஞ்ஜினியர் வேலை பார்க்கும் 32 வயது பையனுக்கு, டெலிபோன்ஸ் ஜுனியர் இஞ்ஜினியர் அல்லது பாங்க் கிளார்க் உத்யோகம் பார்க்கும் ஐயர் பெண் தேவை. ஜாதகம், மற்றும் விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெண் தஞ்சை ஜில்லாவுக்கு மாற்றல் பெற வேண்டும். பெட்டி எண்: 2184.

தமிழ் வடமாள் கௌண்டின்ய கோத்ரம் 21 வயது 5 அடி 2 அங். ஹஸ்தம். பி. எஸ். ஸி. வீட்டு வேலையில் தேர்ந்தும் மற்றும் வீணை, கிட்டார் வாசிக்கத் தெரிந்தும் உள்ள லக்ஷணமான அடக்கமான பெண்ணிற்கு நல்ல உத்தியோகத்தில் உள்ள வடமாள் மணமகன் தேவை. சிறந்த முறையில் திருமணம் செய்ய இயலும். ஜாதகம் மற்றும் முழு குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் 2185.

நாயுடு வகுப்பைச் சேர்ந்த, எஸ். எஸ். எல். சி. வரை படித்துள்ள, வயது 23, உயரம் 5 1/2 அடி, குடும்பப் பாங்கான பெண்ணுக்கு ஏற்ற வரன் தேவை. ஜாதகம் அவசியமில்லை. விரைவில் கல்யாணம். தொடர்பு கொள்ள வேண்டிய பெட்டி எண்: 2186.

வங்கியில் வேலை செய்யும் பட்டதாரி சோழிய வேளாளர் பிள்ளை இனத்தைச் சேர்ந்த வரனுக்கு அதே இனத்தைச் சேர்ந்த அழகான சிவப்பு நிறமுள்ள 27 வயதுக்குள் இருக்கும் வங்கி உத்தியோகத்தில் இருக்கும் பெண் தேவை. அரசு உத்தியோகத்தில் இருந்தாலும் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2187

பலிஜா நாயுடு, சிவப்பு நிறம், படித்த அழகும் குடும்பப் பாங்கான, விவாகரத்தான குழந்தை இல்லாத 29 வயது பெண்ணுக்கு நல்ல வேலையிலுள்ள படித்த பண்புள்ளவர், விவாகரத்தானவரானாலும், மனைவியை இழந்து குழந்தை இல்லாதவர்களானாலும் சம்மதம். ஜாதி மத பேதமில்லை. பெட்டி எண்: 2188.

பிரஹசரணம், மௌத்கல்ய கோத்திரம், அவிட்டம், கும்பராசி 31 வயது (பி. ஏ.) பல்லவன் போக்குவரத்து கழகத்தில் நடத்துனராக பணியாற்றும் (800 ரூபாய் சம்பளம், பேட்டா தனி) வரனுக்கு வேலை பார்க்கும் குடும்பப்பாங்கான மணமகள் தேவை. பெட்டி எண்: 2189.

குடும்பபாரம்பரியம், நல்லொழுக்கம், குணம், நிறம், தோற்றம் அழகுள்ள இந்து நாடார் எம். பி. பி. எஸ். மணமகளுக்கு எல்லா வகையிலும் பொருத்தமான மிக அழகிய எம். பி. பி. எஸ். மணமகன் தேவை. நகை, சீர்வரிசை, ரொக்கம் முக்கியமல்ல. பட்டதாரி மணமகளுக்கு உரியோரும் முழு விபரங்களுடன் எழுதுக. எஸ். வடிவேல், பி. ஏ., 14—B, பவுண்டு தெரு, இராஜபாளையம் — 626 117.

**திருமணமலர்ப் பகுதியில் விளம்பரம் செய்ய கட்டணம் ரூ. 30/— தொகையை 'மங்கையர் மலர்' என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்பவேண்டும். ஒரு விளம்பரத்தில் ஒருவருக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தர வேண்டும். பதில் அனுப்புபவர்கள் ''விளம்பரதாரர், பெட்டி எண்.... c/o மங்கையர் மலர், கிண்டி, சென்னை-600032 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். தனிப்பட்ட கடிதப் போக்குவரத்து கிடையாது.**

வயது 31, 5' 2'' பூசம், கர்க கோத்திரம், வடமாள் சென்னையில் பெரிய டாக்குமெண்டரி பிலிம் கம்பெனியில் வீடியோ, டெக்னிகல் ஆபீஸராக ரூ 1800 வருமானமுள்ள பையனுக்கு குடும்பப்பாங்கான அழகான பெண் தேவை. பிரஹசரணம் ஏற்றுக் கொள்ளப்படும். ஜாதகம் இருந்தால் அனுப்பவும். **P. N. Sundaram, 44 First Avenue, Sastri Nagar, Madras - 600 020.**

இராணுவத்தில் பொறியியல் துறையில் பணிபுரியும் 26 வயதுள்ள சிவந்த நிறமுடைய 170 செ.மீ./ ரூ 1300 சம்பாதிக்கும் அழகிய இந்து மணமகனுக்கு சென்னை (அ) சுற்றுப்புறங்களில் வேலைக்குச் செல்லும் அழகிய மணமகள் தேவை. ஜாதி தடையில்லை. விண்ணப்பிக்கவும். எஸ். முத்துமோஹன், RB/7, லாயிட்ஸ் காலனி, இராயப்பேட்டை, சென்னை—14.

முதலியார் வகுப்பைச் சேர்ந்த 27 வயது பி.ஏ. படித்த மணமகனுக்கு அதே வகுப்பில் மணமகள் தேவை. மணமகனுக்கு சொந்த வீடு, நிலம் உண்டு. தற்சமயம் வேலை இல்லை. கூடிய சீக்கிரம் வேலை கிடைக்க வாய்ப்பு உண்டு. வயதான பெற்றோர்களின்

ஒரு முகப்பரு எப்போதுமே மற்றுமொரு முகப்பருவிற்கு வழி வகுக்கிறது. அதனால்தான் சிறந்த செயல்திறன் கொண்ட புதிய தரம் மிகுந்த கிளியரிசில் உங்களுக்குத் தேவை.

# புதிய தரம்மிகுந்த கிளியரிசில்

ஆன்ட்டி-பாக்டீரியல் டிரைக்ளோசினுடன்

# பருக்களை நீக்க உதவுவதோடு அவை பரவாமலும் தடுக்கிறது.



முகப்பருக்கள் இயற்கையாகவே தோன்றி வளர்வது. அவை பருவ வயதில் தோன்றியும், மறைந்தும் காணப்படும். அதைப்பற்றிய கவலையோ அல்லது சட்டை செய்வதோ, அது போக வழி செய்யாது. நகத்தினால் பிடுங்குவதும் ஆபத்தானது. அதனால் நீங்கள் பருக்களைப் பரவச் செய்வதோடு, அதிக பருக்கள் தோன்றுதலுக்கும் காரணமாகிறீர்கள்.

**டிரைக்ளோசினுடன் சேர்ந்த புதிய தரமான கிளியரிசில் எதனால் பருக்களின் தொல்லைக்குப் பலன் மிகுந்த பதிலைத் தருகிறது.**

புதிய தரம் மிகுந்த கிளியரிசில் பருக்களை மட்டும் நீக்குவதில்லை. அவை பரவாமலும் தடுக்கிறது. ஏனென்றால் அது சிறப்பான ஆன்ட்டி-பாக்டீரியல் மருந்துக் கலவையைக் கொண்ட டிரைக்ளோசினைப் பெற்றது. டிரைக்ளோசினைக் கொண்ட புதிய தரமான கிளியரிசில், பருக்களை உண்டாக்கும் பாக்டீரியாக்களைத் தடுத்து, சருமத்தைப் புண்ணுறாது பாதுகாக்கிறது. அதனால் பருக்கள் பரவாது.

**மிகச்சிறந்த பலனை புதிய தரமான கிளியரிசிலின் மூலம் எப்படிப் பெறுவது?**

முதலில் முகத்தைக் கழுவுங்கள். பின்பு புதிய தரமான கிளியரிசிலை முகம் முழுவதும் தடவுங்கள். பருக்கள் உள்ள இடத்தில் கூடுதலாகத் தடவுங்கள்.

மிகச்சிறந்த பலனைப்பெற, புதிய தரமான கிளியரிசிலை தினமும் இரண்டு வேளைக்கு, காலையிலும், மாலையிலுமாக, குறிப்பிட்ட காலம் வரை உபயோகியுங்கள்.

**டிரைக்ளோசினுடன் இணைந்த புதிய தரமான கிளியரிசில் ஒப்பற்ற மூன்று வழிகளைக் கொண்டது.**



பருக்களைத் திறக்கிறது:



பாக்டீரியாக்களை எதிர்க்கிறது:



பருக்களை உலரச் செய்கிறது:

புதிய தரமான கிளியரிசில் மிருதுவாக்குவதோடு, பருக்கள் காய்வதாலான கறுப்புத் தோலினையும் தளர்த்துகிறது.




மேலும் வேனிஷிங் மெடிகேஷனும் கிடைக்கும்.

டாக்டர் நல துறையில் நல்ல விவரமில் திருமணம். பெட்டி எண்: 2190

வடமாள் ஹரிதகோத்திரம் ஆயில்யம் வயது 30. பி. எஸ். ஸி. கல்கத்தா தனியார் கம்பெனியில் ரூ1,100/— மாத வருமானம் சிறிது கால் தாங்கிய நடையுடைய நல்ல பழக்கங்களுடைய எவருக்கு மணமகள் தேவை. பெற்றோர்கள் வசதியுடையவர்கள். பெண் வேலையிலிருந்தால் நலம். வரதட்சிணை இல்லாது. உட் பிரிவுகளும் வரவேற்கப்படும். ஜாதகத்துடன் அணுகவும். பெட்டி எண்: 2191.

வயது 37. வடமாள். கவுண்டின்ய கோத்ரம். எஸ்.எஸ்.எல்.சி. நகராட்சிப் பணியில் உள்ளவர் அதிபரின் தம்பிக்கு நல்ல குடும்பத்தைச் சேர்ந்த குடும்ப வேலைகள் தெரிந்த, சிகப்பான, நல்ல தோற்றமுடைய பெண் தேவை. பெட்டி எண்: 2192.

வடமாள், கௌண்டின்ய கோத்ரம், அவிட்டம், சிவப்பு. 5' 4" பி. ஏ. பட்டதாரி. டைப்ரைட்டிங் சுருக்கெழுத்து, டி.டி.சி. பாஸ். வயது 28, மாநில அரசில் வேலை. சம்பளம் ரூ750/—. வேலை நிரந்தரம். வீட்டு வேலைகள் நன்கு தெரிந்த பெண்ணிற்கு, அரசு/தனியார் துறையில் வேலையிலுள்ள வரன் தேவை. உட் பிரிவுகள் சம்மதம். ஜாதகம் மற்றும் விவரத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2193.

ஆரிய வைசியர்—அஞ்சல் துறையில் கணக்கர் வேலை—ரூ 1,200/—. 5' 6" பூசம். 29 வயதுள்ள வரனுக்கு அதே சமுதாயத்தைச் சேர்ந்த, நல்ல அழகான, மத்திய அரசு, பாங்கு, ரயில்வேயில் வேலை பார்க்கும் மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2194.

புது தில்லியில் அரசு வங்கியில் ரூ1,100/— சம்பாதிக்கும் பி. எஸ். ஸி. படித்த தமிழ் நாட்டைச் சேர்ந்த முதலியார் (செங்குந்தர்) இனத்தைச் சார்ந்த 27 வயது நிரம்பிய இளைஞருக்கு மணமகள் தேவை. ஜாதி உட்பிரிவுகள் பரவாயில்லை. பெட்டி எண்: 2195.

பௌருகஷ்ய கோத்திரம். அஷ்ட சகஸ்ரம் திருவாதிரை, ஸ்மார்த்த. அரசுடைமை வங்கியில் பணி. பி. எஸ். ஸி. 31 வயதுடைய பையனுக்குப் படித்த வேலையிலுள்ள பெண் தேவை. உட் பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 2196

இந்து முதலியார், வயது 25. உயரம் 5' 4" எம்.ஏ. படித்த, வேலை பார்க்கும் நடுத்தர வகுப்பு பெண்ணிற்கு டாக்டர், இன்ஜினியர், மத்திய அரசு அல்லது தனியார் துறையில் வேலை பார்க்கும் 30 வயதுக்குட்பட்ட மணமகன் தேவை. ஜாதி பேதம் இல்லை. பெட்டி எண்: 2197

அரசு வங்கியொன்றில் அதிகாரியாகப் பணி புரியும் மாதம் ரூ 2,700/— வருமானமுள்ள எட்டயபுரம் சில்லவார் நாயக்கர் வகுப்பைச் சார்ந்த 33 வயதுள்ள நல்ல நிறமும் 5' 7" உயரமுமுள்ள பட்டதாரி மணமகனுக்கு படித்த வேலையிலுள்ள/வேலையில்லாத நல்ல குடும்பப்பாங்கான மணமகள் தேவை. பெட்டி எண் 2198.

அய்யங்கார் வடகலை, ஷடமர்ஷண கோத்ரம். 34 வயது. நக்ஷத்திரம் ஸ்வாதி. சுத்த ஜாதகம். 5' 5" தமிழக அரசு வேலை ரூ ஆயிரம் மாத வருமானம் உள்ள எவ்வகை குறைபாடும் இல்லாத, சிவப்பு நிறமும் நல்ல அழகும், வைதீகபாங்கும் உள்ள பெண்ணிற்கு இதே இனத்தைச் சேர்ந்த 40 வயதுக்குள் கண்ணியமான வரதக்ஷிணை எதிர்பாராத படித்த, நிரந்தர வருமானமுள்ள வரன் தேவை. எளிய விவாகம் மட்டும். குடும்ப, ஜாதக விபரங்களுடன் பெற்றோர் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2199

ஸ்ரீ வைஷ்ணவ வடகலை, ஷடமர்ஷண கோத்ரம். 37 வயது. ரோஹிணி நக்ஷத்திரம். 5' 7". எவ்வித ரணமும் அற்ற சிவந்த நிறமுடைய வரன். தென்னிந்திய, பெரிய பிரபல தனியார் கம்பெனியில் நிரந்தர வேலையில் மாத வருமானம் ரூ ஆயிரத்துக்கு மேல் பெறுபவருக்கு, அதே குலத்தில் (தென்கலையும் சம்மதம்) மணமகள் தேவை. முழு விபரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2200

செங்குந்த முதலியார் சமூகத்தில் செவ்வாய் தோஷம் 12 ல் உள்ள 177 செ. மீ. உயரம், சிகப்பு நிறம், 28 வயது, பி.யு.சி. படித்து, சென்னையில் தனியார் நிறுவனத்தில் 1,300 க்கு மேல் சம்பளத்தில் செக்யூரிட்டி கார்டாக பணியாற்றும் மணமகனுக்கு இதே சமூகத்தில் நல்ல அழகும், ஒழுக்கமும், படித்தும் உள்ள மணமகள் தேவை. தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: **R. Nandagopal, S/o. VMR Ramanatha Mudaliar, 45, Second Sengunthan St., Kanpa 'A' Ambur 635 802.**

நெடுஞ்சாலை அலுவலகத்தில் தட்டச்சராக நிரந்தர வேலையில் ரூ 800 மாத சம்பளம் பெறும் 30/153 குடும்பப்பாங்கான இசை வேளாளர் பெண்ணுக்கு 30 வயதிற்கு மேல் நாற்பது வயதிற்குள்ளான நல்ல குணமுள்ள அரசாங்க ஊழியராய் இருக்கும் மாப்பிள்ளை தேவை. ஜாதி மத பேதமில்லை. பெட்டி எண்: 2201.

ஹரித கோத்ரம் பிரஹசரணம் சிவந்த நிறம் பூராடம் 30 — 5 1/2 — 1000 அஞ்சல் துறை அலுவல் பட்டம் முடிவு பெறாத பையனுக்கு மாற்றல் ஆகக் கூடிய பணியில் உள்ள ஐயர் பெண் தேவை. உட் பிரிவு சம்மதம். பெட்டி எண்: 2202

அரசுப் பள்ளியில் ஆசிரியையாய் உள்ள எம்.ஏ. பி.டி. படித்த, பிராமண ஐயர் வகுப்பைச் சார்ந்த 36 வயது பெண்ணுக்கு அதே வகுப்பைச் சார்ந்த சிறிய வாழ்வும், பரந்த நோக்கும், நேர்மையான, காந்தியத்தில் விருப்பமுள்ள மணமகன் தேவை. ஜாதகம் அல்லது பிறந்த தேதி விபரமுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2203.

வன்னியகுலக்ஷத்திரியர், 30 வயதுள்ள பி. ஏ. பி.எல்.ஐ.எஸ். படித்து அரசை சார்ந்த கல்வித் துறையில் பணிபுரியும் மாதம் ரூ 1,200/— ஊதியம் பெறும் நடுத்தர வகுப்பை சேர்ந்த நிலச்சுவான்தாரின் மிக ஒழுக்கமான மணமகனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த அழகான, படித்த, கௌரவமாக குடும்பத்தைச் சேர்ந்த மணமகள் தேவை. ஜாதகம், மற்றும் விபரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2204.

சோழிய வேளாளப் பெண் வயது 30/பி.யு.சி. மாநில அரசில் நிரந்தர வேலை, சம்பளம் ரூ 900/—. உயரம் 5' 4" மாநிறம். திருவாதிரை நட்சத்திரம். ஏழில் செவ்வாய். மாப்பிள்ளை அதே வகுப்பில் மத்திய, மாநில அரசு, பாங்க், கல்வி பணியில் நிரந்தரமாகவும், 1952க்கு முன் பிறந்தவராகவும் இருக்க வேண்டும். ஜாதகத்துடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 2205.

மாநில அரசு பணியில் உள்ள செங்குந்த முதலியார் வயது 25, பி. ஏ. நடுத்தர குடும்பத்தைச் சார்ந்த பெண்ணிற்கு ஜாதகத்தில் செவ்வாய் தோஷமுள்ள வரன் தேவை. டிப்ளமா இன்ஜினியரிங் படித்த, அல்லது அரசாங்க பணியில் உள்ள வரன்கள் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2206.

நைத்ருப காஸ்யப கோத்ரம். வடமாள். உத்திராடம் நக்ஷத்திரம், வயது 26, 4' 10" உயரம், சிவப்பு நிறம், பி. ஏ. படித்துள்ள குடும்ப பாங்கான நடுத்தர குடும்பத்து பெண்ணிற்கு அரசாங்க அல்லது தனியார் கம்பெனியில் நல்ல வேலையிலிருக்கும் 30 — 33 வயது வரையிலான மணமகன் தேவை. பெட்டி எண்: 2207.

தஞ்சையை சேர்ந்த வயது 33, 8ல் செவ்வாய், உத்திரம் எம். எஸ். ஸி. பி. எட். சென்னையில் சமூக நல ஊழியர் சம்பளம் ரூ 1000/— வயது 32. புனர்பூசம். சமூக நலத்துறை திருநெல்வேலியில் தாலுக்கா

அரிலேசர் (மாற்றல் கிடைக்கும்). எம். ஏ. சம்பளம் ரூ 1,200/– இரு பெண்களுக்கும். வயது 36 மிருகசீரிடம் எஸ். எஸ். எல்.சி. அரசுப் பணி. ரூ 900 சம்பளம் பையனுக்கும் கல்வித் தகுதிக்கு சமமான வெள்ளாள பிள்ளை. அரசுப் பணியிலுள்ள, பெண் கொடுத்து பெண் எடுப்பவராக இருப்பினும். வரதட்சிணையே குறியாக கொள்ளாதவர்கள் ஜாதகத்துடன் விண்ணப் பிக்க பெட்டி எண்: 2208.

முதலியார் எஸ். எஸ்.எல்.சி.(5' 3")ரூ1100. வெளி மாநிலத்தில் தனியார் கம்பெனியில் நிரந்தரம். நடுத்தரக் குடும்பம். ஜாதி. மதம் தவிர்க்கப்படும். படித்த அழகுள்ள பெண் விண்ணப்பிக்கவும். பதிவு திருமணம் செய்து கொள்ளப்படும். பெட்டி எண்: 2209.

அழகும் பொறுப்பும், தெய்வ பக்தியும், குடும்ப பாசமும் கொண்ட 34 வயது நைத்ருவ காசிப கோத்ரம். உத்திரட்டாதி நக்ஷத்திரம் வடகலை. எஸ்.எஸ். எல்.சி. வேலையில் இல்லாத பெண்ணிற்கு வரன் தேவை. எளிய திருமணம். மற்றும் வரதட்சிணை விரும் பாதவர் மட்டுமே விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 2210.

நாகரீகமும், இனிமையும் பரந்த மனப்பான்மை யும் கொண்ட சொந்த தொழிலில் மாதம் ரூபாய் 1000 வருமானம் பெறும் 26 வயதுடைய வன்னிய கவுண்டர் (அ) நாயகர் மணமகனுக்கு அதே இனத் தில் வியாபாரத்தை பெருக்க முதலீடு கொடுக்கவும் அளவிற்கு வசதியுள்ள, நல்ல கௌரவமான குடும் பத்திலிருந்து மணமகள் தேவை. உடன் திருமணம். பெட்டி எண்: 2211.

மதுரை மாவட்டம் மத்திய அரசின் (அஞ்சல் துறை யில்) பணிபுரியும் மாதம் ரூ 1000/– வயது. 30. இந்து ஆதி திராவிடர் (பறையர்) பி.ஏ. முடிக்காத. நடுத்தர குடும்பத்தைச் சேர்ந்த மணமகனுக்கு படித்த அரசு உத்தியோகத்திலுள்ள மணமகள் தேவை: விரைவில் எளிய முறையில் திருமணம். பெட்டி எண்:2212.

செங்குந்த முதலியார். வயது 30. சுய வேலை. மாத வருமானம் ரூ 1000 வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவருக்கு மணமகள் தேவை. எம் மதமும் சம் மதம். வேலையிலிருப்பவர்களுக்கு முன்னுரிமை. இளம் விதவைகளும் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2213.

பெயர் பி. கீதா குமாரி. கோத்ரம் ஹரித கோத்ரம். வயது 29. பெற்றோர்கள் கிடையாது. டெல்கோ கம் பெனியில் டைபிஸ்ட் ஆக வேலை. சம்பளம் 1,200/–. சர்வீஸ் 8 வருஷம். ஜெம்ஷெட்பூரில் இருக்கிறேன். நிறம் மா நிறம். உயரம் 5 1/2. உற்றார் உறவினர் கிடையாது. படிப்பு எஸ். எஸ். எல்.சி. எங்கு வேண்டு மானாலும் வேலை மாற்றல் ஆகும். பெட்டி எண்: 2214.

சைவ வெள்ளாளப் பிள்ளை வகுப்பு. வயது 29. படிப்பு 9ம் வகுப்பு. தையல் கைவேலை சமையல் வீட்டு நிர்வாகத்தில் தேர்ந்த வசதிக் குறைவான குடும் பத்துப் பெண்ணுக்கு வரன் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 2215.

புது தில்லியில் மத்திய அரசுப் பணியில் ரூ 1100/– சம்பாதிக்கும் தமிழ் நாட்டைச் சேர்ந்த தெலுங்கு பிராமண (கௌண்டின்ய கோத்ரம்) இனத்தைச் சார்ந்த 28 வயது நிரம்பிய வரனுக்கு அரசு/வங்கி பணியில் இருக்கும் அழகிய மணமகள் தேவை. பெட்டி எண்: 2216.

Tamil Iyer Brahacharnam Mechanical Engineer well settled 29 son of retired Company Executive requires Non-Koundinya well-educated charming bride from good family suitability only criteria horoscope optional. Box No. 2217.

Goodlooking Brahmin Iyer spinster, Post Graduate 45, invites alliance from qualified decently employed Brahmin gentleman India and abroad. Widowers without encumbrance considered. Box No. 2218.

Wanted Graduates/P. Graduates for Marine Engineer. 30 yrs. Ashtasahasram, Kanva gothram, Star Uthiram, Ht. 5' 10". Reply with horoscope and full details to Box No. 2219.

Alliance from Nonvadhula Gothram well settled groom for Delhi based employed Graduate Thenkalai Iyengar Girl, 33, 160, 2000 non-transferable. Vishakam Second Padam mars eighth house. Reply Horoscope family details to Box No. 2220.

Alliance invited from parents of non-vadogla decently employed Iyer Grooms, for a 28 years old, S.S.L.C. appeared. Domestically trained Home Loving girl. Star Uthirathathi. Mars in eighth house. Please contact with horoscope & particulars. Marriage will be performed in a decent manner. Box No. 2221.

Pure vegetarian around 30 years, preferably employed or owning business in Madras for domestically trained slim, very fair, good looking girl with poor education unemployed Karkantha Vellala Saiva Pillai girl aged 27 years 5' 1" of decent family. Decent marriage. Box No. 2222.

Wanted Non-Haritha employed (Transferable) Bride for Tanjore Brahacharanam Boy age 39. Employed in Private Sector in Bangalore, drawing salary around Rs. 800/-. Sub-sect no bar. Apply with Horoscope and family Details to Box No. 2223.

Wanted a Tamil Yadava beautiful tall graduate girl from well settled family for a Boy 30, M.A., C.A.I.I.B. Working as Officer in a Bank. Reply with Horoscope to Box No. 2224.

Alliance invited for Vadama Srivatsa Aswini good-looking homely 167 cm. 24 year Girl Ph.D. Chemical Engineering (Bombay University) from suitable Tamil Iyer Ph. D. M.B.A./C.A. Boys. Reply to Box No. 2225.

Alliance invited from Graduate well settled Boys preferably from Bombay Madras for Graduate Girl employed in Central Govt. Bombay Brahacharnam Mrigasirsham, Kapi 31. Apply with Horoscope to Box No. 2226.

Wanted broadminded Brahmin employed Groom for goodlooking Girl 27. Unemployed. No Dowry. Simple Temple Marriage. Widowers, Orphans, Handicapped acceptable. Send Horoscope details to Box No. 2227.

Alliance sought from qualified, well-settled Bridegroom below 30, for slim, fair, good-looking Protestant Christian Nadar Girl, age. 23. B. Com., Reply with details to Box No. 2228.

Alliance invited for employed School Mistress aged 36, drawing four figure salary from well placed Iyengar or Iyer Boys (non-Bharadwaja gothram). Decent marriage at an early date. Correspond to: S. Sudarsanam, 8-A, Jesudasan Street, Radhanagar, Chrompet, Madras-600 044.

Wanted for T.V. Engineer Boy aged 29 B.Sc. Naidru Paka syapa Gothram Sudha jathakam. Uthratathi. Employed Girl or Job Transferable to Bombay having accomodation. Apply with Horoscope to Box No. 2229.

# இதோ வந்துவிட்டது !
# சமைப்பதற்கென்றே
# பிரத்யேகமாக உருவாக்கப்பட்ட
# எவர்சில்வர் பாத்திரங்கள் !

# அக்ஷயா !






## விசேஷ அலுமினியம்
## அடிப்பாகம் கொண்ட
## முற்றிலும் வித்தியாசமான
## எவர்சில்வர் பாத்திரங்கள் !

**105 நாடுகளில் போற்றப்படும் நூதன பாத்திரங்கள் இப்போது முதல் முறையாக இந்தியாவில் கிடைக்கின்றன !**

உலகப் புகழ்பெற்ற பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த ஒரு நிறுவனத்தோடு கூட்டு சேர்ந்து தயாரிக்கப்படும் அக்ஷயா பாத்திரங்கள் சர்வதேசத் தரத்தைக் கொண்ட ஓர் அபூர்வ வடிவமைப்புடையன.

**உலோக உறை (Cladding) என்றால் என்ன ?**

உலோக உறையென்பது மூன்று தகடு அமைப்பைக் கொண்டதாகும். இரு எவர்சில்வர் தகடுகளுக்கிடையே ஒரு தடித்த அலுமினியம் தகடு பொருத்தப்படுகிறது.

**அக்ஷயா பாத்திரங்கள் மிக விரைவாக சமைக்கின்றன. சமைக்கும் உணவு தீய்ந்தோ அல்லது அரைவேக்காடாகவோ போகாது!**

அக்ஷயா பாத்திரங்கள் சூட்டைச் சீராக பரப்பி உணவைத் தீயாமல் ஒரே சீராக சமைக்கின்றன.

இடையில் அலுமினியத் தகடு பொருத்தப்பட்டிருப்பதால் அக்ஷயா பாத்திரங்கள் மிக விரைவாகச் சூடேறுகின்றன. இக்காரணத்தால் போதுமான சூடேறியதும் நீங்கள் அடுப்புச் சூட்டைக் குறைத்துவிடலாம். ஆயினும் பாத்திரத்தின் சூடு குறையாது! இதன்மூலம் நீங்கள், ஏறக்குறைய 40 சதவீதம் எரிபொருளைச் சேமிக்கலாம்

**எளிதான சமையல்! திட்டமான உணவு!**

உறுதியான, சூடேறாத 'பேக்லைட்' கைப்பிடிகள் பாத்திரங்களை எளிதாகவும் சுலபமாகவும் ஏற்றி இறக்க மிக உகந்தவை.

ஆறிய சமையலை மறுபடியும் சூடாக்கச் செய்யவோ, அல்லது குளிர் சாதனப் பெட்டியில் வைத்து பிறகு உபயோகிக்கவோ அக்ஷயா பாத்திரங்கள் மிக ஏற்றவை. பல வருடங்கள் உபயோகித்தாலும் இப்பாத்திரங்களின் பளபளப்பு மங்கவே மங்காது!

இன்றே அக்ஷயா பாத்திரங்களை உங்களுக்கு அருகாமையிலுள்ள அக்ஷயா டீலர் கடையில் தேர்ந்தெடுங்கள்!

# akshaya

பிரான்ஸ் நாட்டு
கூட்டுறவோடு தயாரிக்கப்பட்டது!
பத்து வருட உத்திரவாதம்!

ஓரியண்டல் அப்ளையன்சஸ்
8, விக்டோரியா கிரசண்ட் சென்னை 600 105.

Sista's - OA.270.84 D

Alliance from good looking employed Girls for Kerala Iyer Boy, 31, looks much younger, Hastham, ...tha Gothram, Sudhajathakam, Central Government, Delhi, Rs. 1,400/-. Write Details to Box No. 2230.

Proposal invited from Sozhia Pandia Vellala Bride of respectable family, non-vegetarian, Graduate, 21-24 years, around 158 cms. for an Officer in Indian Statistical Service, 30 years, M.Sc., Ph.D., clean habits and employed at Delhi on a salary of Rs. 2,800/-. Correspond with family details/horoscope to Box No. 2231.

Alliance invited for a Hindu, Vanniyakula Kshatriya, Naicker, 38 years. Employed in Railways at Madras, broad minded. Only son. Seeks employed Bride. Apply with full details to Box No. 2232.

Matrimonial alliance invited from well settled good natured Gajulu Balija Naidu Boys 25/27 Convent educated. Bombay based beautiful slim, Homely, domestically well versed, Gajulu Balija Naidu Girl. Sub-sect no bar. Box No. 2233.

Wanted suitable match, Post Graduates, below 30 years, employed as Officer drawing a salary of not less than Rs.2000/- in Madras City Bank/Railways/LIC belonging to Madras Chingleput/North Arcot and South Arcot Districts for Tamil Iyer Girl M.Com. Atreya Gothram. Vadama. Aswini Star. 24/158 Medium complexion, good looking, employed in a Nationalised Bank, Madras city. Apply with Biodata and Horoscope details to Box No. 2234.

Alliance for Post Graduate Iyer Girl aged 23, tall, slim. Viswamithra Gothram, Maham Star. Leukoderma patches. Box No. 2235.

Delhi based highly qualified well placed Iyer Boy for Brahacharanam highly qualified Girl (33) working in reputed International Organization. Subsect no bar. Write with Horoscope to Box No. 2236.

Wanted groom for Athreya Pooradam, S.S.L.C. Typewriting Higher in English and Tamil. Born on 12.3.61. Not working. Domestically well trained. Grooms employment must be Govt. Contact Box No. 2237.

Koundanya Vadama Boy 26 years. Income Rs. 1,100/- tall good looking seeks fair beautiful sweet natured understanding employed bride in transferable job below 22 years. Simple marriage. Subsects no bar. Box No. 2238.

Wanted employed Graduate non-srivatsa Vadama Girl for Boy, 40, 5'5", Engineer. Be willing to give up job later, if necessary. Contact with Horoscope to Box No. 2239.

Wanted alliance for Tamil Iyer Girl aged 34 (S.S.L.C. no job). Hastham, Kannuva, from Tamil Iyer Grooms of Govt/Bank/Secured Job-holders aged upto 45. Widower without issue acceptable. "Mutual Alliance Only" for her brother aged 31. Uttaram, Graduate Private Bank employee. Reply with Horoscope and full family particulars to Box No. 2240.

Suitable match for Bharadwaja Iyer Girl aged 35. M.A. Medium complexioned. Height 131 cms. Unemployed. Box No. 2241.

வயது 29, படிப்பு பி.யு.சி. படித்து அரசாங்கப் பணியில் ரூ 900/- சம்பளம் வாங்கும் ஆதி திராவிடர் (பறையர்) இனப் பெண்ணுக்கு அதே இனத்தைச் சார்ந்த 35 வயதுக்குள் பட்டம் படித்த அரசாங்கம் அல்லது வங்கியில் வேலை பார்க்கும் வரன் தேவை: பெட்டி எண்: 2242.

பிரஹசரணம் ஹஸ்தம் 29 வயது 5' 3'' மத்திய அரசில் டில்லியில் வீட்டு வசதியுடன் நல்ல உத்தியோகத்தில் உள்ள பெண்ணிற்கு டில்லியில் வேலை பார்க்கும் தகுந்த வரன் தேவை. உட்பிரிவு சம்மதம். ஜாதகத்துடன் எழுதவும். மனப் பொருத்தம் பார்த்து கல்யாணம் பண்ணவும் தயார். பெட்டி எண்: 2243.

கன்னட மாத்துவா காசியப கோத்ரம் சதய நட்சத்திரம். வயது 27. உயரம் 5' 4''. சண்டிகாரில் மத்திய அரசில் ரூ 1200 சம்பாதிக்கும் பையனுக்கு மெட்ரிக் பாஸ் செய்துள்ள மாத்துவா பெண் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விபரத்துடன் எழுதவும். பெட்டி எண்: 2244.

ஆற்காடு அகமுடைய முதலியார் எஸ்.எஸ்.எல்.சி., ஐ.டி.ஐ. மெஷினிஸ்ட். சென்னையில் அரசாங்க வேலை. 32 வயது. கல் செவ்வாய் தோஷமுள்ள வரனுக்கு அதே இனத்தில் சென்னையில் பணிபுரியும் செவ்வாய் தோஷமுள்ள அழகான பெண் தேவை. வெளியூரிலிருந்தாலும் சென்னைக்கு மாற்றி வரும் நிலை இருக்க வேண்டும். பெட்டி எண்: 2245.

Alliance solicited ONLY from young beautiful good looking non-Atreya Iyer girls below 22 for young handsome Commerce Graduate Vadama widower without encumberance aged 28 employed in reputed organisation (salary Rs. 1,800 p.m. and other income Rs. 1,200 p.m.). Star Rohini and no horoscope. Star matching only criteria. Interested parties may write in detail to Box No. 2246.

Alliance invited for Brahmin Iyer 28 years, Aswini Star, Madala Gothram, employed in Central Govt. Office Madras. 1,200 p.m. from employed girls. Reply with horoscope to Box No. 2247.

Alliance invited from decently employed Groom, for Kousika Vadama, Iyer Girl 38. Star Magam, Post graduate (M.A.). Well employed. (Job transferable) drawing around Rs. 2,000/-. Domestically well trained. Mutal liking main consideration. Horoscope matching optional. Sub sect no bar. Apply to Box No. 2248.

Madhwa of Tamilnadu 31/180 Srivatsa Post-Graduate in Electronics Engineering working in Department of Space shortly going U.S.A. for Higher Studies seeks fair Doctors/Engineers (Green Card Holders) from tamil knowing Madhwa, Iyergar and Iyer Girls. No dowry. Early Marriage. Apply with Bio-Data to Box No. 2249.

Madhwa of Tamilnadu 36/170 Srivatsa Graduate State Service Decent Salary seeks employed girls from Madhwa, Iyergar and Iyer. No Dowry. Early Marriage. Apply to Box No. 2250.

Edited, Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: Manjula Ramesh.

# நட்சத்திரப் பதவிக்கு ஐந்தே மீட்டர்









ஸ்ரீதேவி. பாம்பே டையிங்—சினி ப்ளிட்ஸ் ஸ்டார்
போட்டியில் முதலிடம் பெற்ற நட்சத்திர நடிகை.

எழில் நட்சத்திரம் ஸ்ரீதேவி. அவரைப் போலவே உயர்ந்தெழுவீர் ஒளி நட்சத்திரமாக—பாம்பே டையிங் சேலைகளிலே, உடுப்புத் துணிகளிலே. கண்கவர் வண்ணங்கள், கருத்திற்கிசைந்த டிஸைன்கள். உங்களவர் கண்ணுக்கு நட்சத்திரமாக ஜொலியுங்கள். அதற்கு ஐந்தே மீட்டர் போதும்!

**பாம்பே**
**டையிங்**



சேலைகள் • உடுப்புத் துணிகள்.

BDM 1571

REGISTERED No. TN MS (S) 231
Registered as a Newspaper in Sri Lanka

# "அம்மா, பசி எடுக்குது..."

அதற்கென்ன, சிறுவர்களுக்கு எப்பொழுதுமேதான் அதிசயமூட்டும்படி பசியெடுக்கிறது...ஒரு நாளில் எந்நேரத்திலுமே! நெஞ்சை நெருடும் இந்த எளிமையான சொற்களை எந்த அம்மாவினால்தான் பொருட்படுத்தாமல் இருக்க முடியும்?

இதற்கு நீங்கள் உடனே தயாராகும்படி மேகி முழுமையான உணவுவகையில் 5 களிப்பூட்டும் சுவைகளை அளிக்கிறது—சிக்கன், மசாலா, கேப்ஸிகா, லஸான்யா மற்றும் ஸ்வீட்-ஸவர்,

பலவகை சுவைகளை அளிக்கும் மேகியை சிறுவர்கள் என்றும் மகிழ்ச்சியுடன் வரவேற்பார்கள். அவர்களுக்கு இந்த புதுப்புது உணவுவகைகளை தயாரித்து இன்புறுங்கள்

## கோகனட்-சில்லி

**வேண்டிய பொருள்கள்**

1 பேக் மேகி-2-மினிட் நூடுல்ஸ் மஸாலா டேஸ்ட்மேக்கருடன்
1 கோப்பை (35 கிரா) பச்சைத் தேங்காய் துருவல்
1 பெரிய கரண்டி எண்ணெய்
½ பெரிய கரண்டி கடுகு
1 கொத்து கறிவேப்பிலை
1-2 தேக்கரண்டி நறுக்கிய மிளகாய் வற்றல்
1½ கோப்பை (300 மில்) தண்ணீர்

**பக்குவ முறை**

தேங்காயை பாதி வறுத்து தனியாக வைத்துக்கொள்ளவும்.
எண்ணெயில் கடுகு வெடித்தப் பிறகு பாக்கியுள்ள தேங்காய் துருவல், கறி வேப்பிலை, மிளகாய் வற்றல் ஆகியவற்றைப்போட்டு ஒருநிமிடம் வதக்கவும்.
அதே வாணலியில் நீரைக் கொதிக்கவைத்து டேஸ்ட் மேக்கரையும், மேகி-2-மினிட் நூடுல்ஸைச் சேர்க்கவும்
இரண்டு நிமிடம் கொதிக்கட்டும்.
வறுத்த தேங்காயை தூவி பரிமாறவும்.

**இலவசமாக!**

மேகி
சமையல் குறிப்பு
கைப்புத்தகம்
புத்தகம் பெற
இந்த விலாசத்-
திற்கு எழுதவும்:
போஸ்ட் பாக்ஸ்
எண்: 3855
புது தில்லி.







**விரைவாய் சமைத்திட! சுவையாய் சாப்பிட!**

FSL-8554 TAM